அலைகடவுள் துணை.

# நீதிநூற்றிரட்டு

## மூலமும்,

மஹாவித்வான் - கா. இராமசாமிநாயுடு அவர்களால்
இயற்றப்பட்ட

## விருத்தியுரையும்.

[இரண்டாம் வாலியம்.]
(6-ம் பாகம் முதல் 11-ம் பாகம் வரையில்.)

இவை
பென்ஷன் சுபேதார்-தஞ்சை. சாம்பசிவம்பிள்ளை
அவர்கள் குமாரர்
தஞ்சை - எஸ். குமாரசுவாமிபிள்ளையால்
சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டன.

[முதற்பதிப்பு]
1910.

 விலை ரூபா 1—2—0. 

உ

கடவுள்துணை.

அதிவீரராமபாண்டியன்

செய்த

வெற்றிவேற்கை யென்னும்

# நறுந்தொகை மூலமும்

மஹாவித்வான்

ம - ள - ள - ஸ்ரீ

காஞ்சிபுரம் - ராமஸ்வாமிநாயுடு அவர்களால்

இயற்றப்பட்ட

# விருத்தியுரையும்.

இவை

பென்ஷன் சுபேதார், தஞ்சை, சாம்பசிவம்பிள்ளை

அவர்கள் குமாரர்

தஞ்சை. எஸ். குமாரசுவாமிபிள்ளை அவர்களால்

சென்னை:

பண்டித மித்திர யந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

முதற்பதிப்பு.

1906.

கடவுள் துணை.

அதிவீரராமபாண்டியன்

செய்த

வெற்றிவேற்கை யென்னும்

# நறுந்தொகை.

## பொதுப்பாயிரம்.

### விநாயக வணக்கம்.

பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
சரணவற் புதமலர் தலைக்கணி வோமே.

(பதவுரை.) பிரணவப்பொருள் ஆம் - பிரணவப் பொருளாகிய, பெருந்தகை - பெருந்தன்மையையுடைய, ஐங்கரன் - ஐந்து திருக் கைகளையுடையவராகிய விநாயகக்கடவுளின், சரணம் - திருவடி யாகிய, அற்புதம் - ஆச்சரியகரமா யிருக்கிற, மலர் - செந்தாமரை மலரை, தலைக்கு - எமது சிரத்துக்கு, அணிவோம் - சிரோபூஷண மாகத் தரித்துக்கொள்வோம் (யாம்), எ-று.

(கருத்துரை.) பிரணவார்த்த சொரூபராகிய விநாயகக் கடவுளின் திருவடித் தாமரைமலரை எமது சிரத்திற் கலரியாகத் தரித்துக்கொ ள்வோம் யாம் என்பதாம்.

(விருத்தியுரை.) இது செயப்படுபொருளின்றி நிற்றலாற் பொதுப் பாயிரமெனக் காண்க. பிரணவப்பொருள்-பிரணவாக்கரத்தின் அர்த் தம். இப்பொருளாயிருத்தலே இவர்க்கு சொரூபமா யிருக்கையால், 'பிரணவப்பொருளாம் பெருந்தகையைங்கரன்' என்றார். சரணமலர் என வியையும். அணிவோம் அலங்கரித்துக் கொள்வோம் என்ற வாறு. அணிவோம் என்பதற்கு வினைமுதலாகிய யாம் என்பது வரு

விக்கப்பட்டது. தம்போல்வாரையு முளப்படுத்து அணிவோம் என உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாற் கூறினர். இவ்வாறு நான்முகத்து விநாயகவணக்கங் கூறுவது ஆன்றோ ரொழுக்க மாதலாலும், இந்நூலாசிரியர்க்கு விநாயகர் வழிபடுகடவு ளாதலாலும் இதுகூறப்பட்டது. கூறவே, தாம் எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி யினிது முடியுமென்பது கருத்து.

## நூற்பயன்.

வெற்றிவேற்கை வீரராமன்
கொற்கையாளி குலசேகரன்புகல்
நற்றமிழ்தெரிந்த நறுந்தொகைதன்னால்
குற்றங்களைவோர் குறைவிலாதவரே.

(ப-ரை.) கொற்கை ஆளி - கொற்கைநகரை ஆள்வோனாகியும், குலசேகரன் - தன் குலத்துக்கோர் முடிபோற் சிறந்தவனாகியும் இருக்கிற, வெற்றி வேல் - வெற்றிவேலைத் தாங்கிய, கை - கையினையுடைய, வீரராமன் - அதிவீரராமபாண்டியனானவன், புகல் - சொன்ன, நல் தமிழ் தெரிந்த - நல்ல தமிழாகிய கடலிலே யாராய்ந்தெடுத்த, நறுந்தொகை தன்னால் - (நன்மணித் திரள்போன்ற) இந்த நறுந்தொகை யென்னும் நீதிமொழிகளால், குற்றம் - (உயிர்களிடத்துள்ள) குற்றங்களை, களைவோர்-நீக்குவோர், குறைவு இலாதவர் - (தம் குறைகளை ஒருவர் தீர்க்கவேண்டாது) தமக்குத்தாமே குறைதீர்ந்தவராவர், எ-று.

(க-ரை.) அதிவீரராமபாண்டியன் செய்த இந்த நறுந்தொகையைக் கொண்டு உயிர்களிடத்துக் குற்றங்களைப் போக்குவோர் தம் குறைகளைத் தாமே யொழித்துக்கொண்டவருமாவர் என்பதாம்.

(வி-ரை.) குறை தீர்ப்பவரும் தீர்க்கப்படுவோருமாகிய இருதிறத்தாருள்ளும் தீர்ப்பவரைப் பிரித்து நிற்றலால், ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. நறுமை - நன்மை. தொகை - தொகைச்சொல். படிப்பது நித்திரைசெய்தற்காதலால், படுத்து நித்திரை செய்தான் என

மிகைபடக்கூறாது படுத்தான் என்றாற்போல, தெரிந்தது எடுத்தற் காதலால் தெரிந்தெடுத்தலென மிகைபடக்கூறாது 'தெரிந்த' என்றார். நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை யெனவே நற்றமிழாகிய கடலில் ஆராய்ந்தெடுத்த நன்மணித்திரள்போன்ற நறுந்தொகைச்சொற்கள் என்பது பெறப்பட்டது. நறுந்தொகை யென்னுங் களைகளை கருவியால் உயிர்களாகிய பைங்கூழின் குற்றங்களாகிய களைகளைப் பறித்தெறியு மரசராகிய உழவர் குறைவிலர் என நின்றமையால் இது இயைபுருவகவணியாமெனக் காண்க.

திருக்குறள் - செங்கோன்மை - கூ - ம் பாட்டு,

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்."

என்றாராதலால் இது அரசனை நோக்கிற்று. இதன் கருத்து விளங்கிக்கிடந்தது. இந்நூல் செய்தோன் இத்தொழிற்கு உரியவனாதலால் இவ்வாறு கூறுதற் கியைந்ததெனக் காண்க. இது சிறப்புப்பாயிரம். கொற்கை - மதுரைக்கருகிலுள்ள ஒரூர். சேகரம் தலையாதலால் குலசேகரன் என்பதற்குக் குலமாகியசரீரத்துக்குத் தலைபோலச் சிறந்தவன் என்றும், குலமாகிய தலைக்கு முடிபோல விளங்குவோன் என்றும் கூறிக்கொள்க. சேகரம் இடவாகுபெயராய் முடியை யுணர்த்திற்று. குற்றம்-உயிர்க்குற்றங்கள், அவை காமவெகுளி மயக்கங்கள் முதலாயின.

## நூல்.

1. எழுத்தறிவித்தவன் இறைவனாகும்.

(ப-ரை.) எழுத்து - ஒருவனுக்கு எழுத்தோடுகூடிய இலக்கிய இலக்கண நூல்களை, அறிவித்தவன் - அறிவித்தவனாகிய ஆசிரியன், இறைவன் ஆகும் - (அவனுக்குக்) கடவுளாவன், எ-று.

(க-ரை.) ஒருவனுக்குக் கல்வி கற்பித்த ஆசிரியன் அவனுக்குக் கடவுளாவன் என்பதாம்.

(வி-ரை.) எழுத்து - ஆகுபெயர்.

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தால் [தின்
மொழித்திறத்தின் முட்டறுத்தோ ருரும்-மொழித்திறத்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

என்றாராதலால், எழுத்தறிதல் கடவுளை யறிதற்கும் வீடுபெறு தற்கும் காரணமாமாதலால் அவனை யறிவித்தோனைக் கடவுளென்றது 'ஆகும்' என்றார். அசகடவுள் பிறர்கடவுள், தன்கடவுள் ஆசிரியனென்பது இதன்கருத்து. இன்னும் ஆசிரியனை,

"தெய்வத்தின் மதித்த றிரிபொன் றின்மை"

எனப் பிறருங் கூறுதல் காண்க.

இனி—திருக்குறள் - கல்வி - ரு - ம் பாட்டு,

"உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்."

எனக்கூறிய திருவள்ளுவ நாயனார்க்கும் இதுவே கருத்தென்பதை, 'உடையார்மு னில்லார்போ லேக்கற்றும்' என்றதனாலுங் காண்க. (க)

2. கல்விக்கழகு கசடறமொழிதல்.

(ப-ரை.) கல்விக்கு - (இவ்வாறு எழுத்தறிவிக்கிற ஆசிரியனுடைய) கல்விக்கு, அழகு - அழகாவது, கசடு அற மொழிதல் - (தன்னை வழிபட்டுக் கேட்போர்க்குக், குற்றமறச் சொல்லுதலாம், எ-று.

(க-ரை.) எழுத்தறிவிப்போனுடைய கல்விக்கு அழகாவது தன் மாணவகருக்குக் குற்றமறச் சொல்லுதலாம்.

(வி-ரை.) கசடு - சந்தேக விபரீதங்கள். (ஐயம் - திரிபு.) அற - ஒழிய. மொழிதல் - கடாவிடைகளான் விரித்துரைத்தல். இவ்வாறு சொல்லாவிடின் அவன் உலகத்தாரால் இகழப்படுவான் என்பது கருத்து. இதற்குதாரணம்:—

திருக்குறள் - சொல்வன்மை - க0 - ம் பாட்டு,

"இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்."

எனத் திருவள்ளுவ நாயனாருங் கூறுதல் காண்க. (உ)

3. செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்.

(ப-ரை.) செல்வர்க்கு - செல்வ முடையோர்க்கு, அழகு - அழகாவது, செழு - வளம் பொருந்திய, கிளை - வறிஞராகிய தமது உறவினருடைய குடும்ப பாரத்தை, தாங்குதல் - சுமத்தலாம், எ-று.

(க-ரை.) வறிஞராகிய தமது உறவினருடைய குடும்ப பாரத்தைச் சுமத்தல் செல்வர்க்கு அழகாகும் என்பதாம்.

(வி-ரை.) பெரும்பாரம் சுமந்து வருந்திவருவோருடைய வருத்தத்தைச் சுமைதாங்கி யேற்றுக்கொண்டு அவர்க்குச் சுகந்தருதல் போல, வறுமையால் வருந்துவோராகிய தமது சுற்றத்தாருடைய குடும்ப பாரச்சுமையைத் தாமேற்றுக்கொண்டு அவர்க்குச சுகம்தருதல் செல்வர்க்கழகாகு மென்பது இதனாற்போந்த பொழிப்புப்பொருள். இவர் செல்வர் என்றமையாலும், செழுங்கிளை தாங்குதல் என்றமையாலும் உறவினர் வறிஞரென்பது விளங்கிற்று. செல்வத்திற் குறைந்தவரைச் செழுங்கிளையென்பா னென்னெனின், எக்காலத்தும் ஒருதன்மையராய்க் கூடிக்குலாவி யிருத்தற்குரிய நல்லுறவினராதலாலென்க.

இதற்குதாரணம்:—திருக்குறள் - சுற்றந்தழால் - அ - ம் பாட்டு,

"சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்." (௩)

4. வேதியர்க்கழகு வேதமுமொழுக்கமும்.

(ப-ரை.) வேதியர்க்கு - மறையோர்க்கு, அழகு - அழகாவது வேதமும் - வேதமோதுதலும், ஒழுக்கமும் - அதற்கேற்ப தமது ஒழுக்கங் குன்றாது நிற்றலுமாம், எ-று.

(க-ரை.) வேதமோதலும் அதற்கேற்ப நல்லொழுக்கில் நிற்றலும் மறையோர்க்கு அழகாவன வென்பதாம்.

(வி-ரை.) வேதமோதலினும் ஒழுக்கஞ் சிறந்ததென்பதுதோன்றுதற்கே அதனை யிறுதியில் வைத்தார். ஒழுக்கம் என வாளாகூறினாரேனும் வேதமு மொழுக்கமும் என வேதமோதலை முன் வைத்ததனால் அதற்கேற்ப நல்லொழுக்கமென்பது தானே பெறப்பட்டது. வேதமும் ஒழுக்கமும் காரணகாரியங்கள். இவ்விரண்டனுள் வேதமோதுதலை மறந்தாலும் மீண்டும் பெற்றுக்கொள்ளலாம்; ஒழுக்கங் குன்றின் பிறப்புக்கெடுமென்பது இதனாற் போந்தபொருள்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - ஒழுக்கமுடைமை - ௪ - ம் பாட்டு,

“மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.”

இதனுள், ஒத்து மறப்பினுமென் றொழியாது மறப்பினுங்கொளலாகும் என்றது மறந்தால் அவர் பிறப்புக் கெடுமென்பது நோக்கியெனக்காண்க. (௪)

5. மன்னர்க்கழகு செங்கோன்முறைமை.

(ப-ரை.) மன்னர்க்கு - அரசருக்கு, அழகு - அழகாவது, செங்கோல் முறைமை-செங்கோல் செலுத்து முறைமையேயாம், எ-று.

(க-ரை.) செங்கோல் முறைமையைச் செலுத்துதலே அரசருக்கு அழகாவது என்பதாம்.

(வி-ரை.) செவ்வியகோல் போலுதலால் செங்கோல் எனப்பட்டது. செங்கோல் முறைமையாவது மநுமுதலிய நூல்களால் விதிக்கப்பட்ட ராஜநீதியிற் றவறாது நடத்தல். முறைமை - கிரமம். அரசன் செங்கோல் செலுத்துவனாயின் அவனுக்குப் புகழ் நிலைபெறும், செலுத்தானாயின் புகழ் நிலைபெறாது என்பது இதன் பொழிப்புப்பொருள்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - செங்கோன்மை-ரு-ம் பாட்டு,

"மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி." (ரு)

6. வணிகர்க்கழகு வளர்பொருளீட்டல்.

(ப-ரை.) வணிகர்க்கு - வைசியர்க்கு, அழகு - அழகாவது, வளர் - வளர்கின்ற, பொருள் - பொருளை, ஈட்டல் - சேர்த்து வைத்தலாம், எ-று.

(க-ரை.) மேன்மேலும் வளர்கின்ற பொருளைச் சேர்த்துவைத்தல் வைசியர்க்கு அழகாகு மென்பதாம்.

(வி-ரை.) கொள்வதும் கொடுப்பதும் ஆகிய இரண்டினும் நடுவுநிலைமை தவறாமையால் தானே வளருமென்பது தோன்ற, 'பொருள்' என்னாது 'வளர்பொருள்' என்றார். இவ்வாறு வளர்பொருளீட்டினார்க்கு ஏனைய அறங்களும் இன்பங்களும் எளியவாகி அவரை யழகுசெய்யுமென்ப திதனாற் போந்தபொருள்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - பொருள்செயல்வகை - ௧0 - ம் பாட்டு,

"ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு."

"வைசியர்க்கழகு......" என்றும் பாடம். (௬)

7. உழவர்க்கழகே ருழுதூண்விரும்பல்.

(ப-ரை.) உழவர்க்கு - பூவைசியருக்கு, அழகு - அழகாவது, ஏர் உழுது - (நிலத்தை) ஏரினாலுழுது (பயிர்செய்து), ஊண் - உண்பதையே, விரும்பல் - விரும்புதலாம், எ-று.

(க-ரை.) உழவர்க்கு நிலத்தை யுழுது பயிர்செய் துண்ண விரும்புதலே அழகாகும் என்பதாம்.

(வி-ரை.) உழவர் - நிலத்தையுழுது பயிர்செய்வோர் என்னும் பொருள் பேசுதாநின்றது. ஊண் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். இது உண்ணப்படுவதாகிய உணவைக் குறித்தது. உழவர்க்கழகே

குழுதூண்விரும்பல், மற்றொருவகையான் வருமூண் விரும்பல் அழகன்றென்பதும் பெறப்பட்டது. இவ்வாறு விரும்பின் இவரோரின் பின்யாவரும் செல்லவேண்டுவரேயன்றி, அவர் சீரின்பின்னே இவர் செல்லவேண்டாமை தானே பெறப்பட்டது.

இதற்குதாரணம்:—திருக்குறள் - உழவு - ௩ - ம் பாட்டு,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்."

"உழவர்க்கழகிங் குழுதூண்விரும்பல்" என்றும் பாடம். (எ)

8. மந்திரிக்கழகு வருபொருளுரைத்தல்.

(ப-ரை.) மந்திரிக்கு - அமைச்சனுக்கு, அழகு - அழகாவது, வரு பொருள் - இனிவரப்போகிற காரியங்களை, (முன்னேயறிந்து) உரைத்தல் - அரசனுக்குச் சொல்லுதலாம், எ-று.

(க-ரை.) இனி வரப்போகிற காரியத்தை முன்னே யறிந்து அரசனுக்குச் சொல்லுதல் மந்திரிக்கு அழகாகு மென்பதாம்.

(வி-ரை.) இவ்வாறு முன்னறிந்து சொல்லுதல் அவனுக்குஅழகாதலாவது தான் குற்றத்தி னீங்குதலாம்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - அமைச்சு - அ - ம் பாட்டு,

"அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்."

அறி கொன்று - அறிந்து சொன்னதையுந் தள்ளி. (அ)

9. தந்திரிக்கழகு தறுகணாண்மை.

(ப-ரை.) தந்திரிக்கு - படைத்தலைவனுக்கு, அழகு - அழகாவன, தறுகண் - (போர்செய்யுங்கால்) இரக்கமில்லா திருத்தலாகிய பேராண்மையும், ஆண்மை - மிக்க உபகாரியாந் தன்மையாகிய ஊராண்மையுமாம், எ-று.

(க-ரை.) போர்க்களத்தில் இரக்கமின்மையும், பகைவரிடத்தில் உபகாரகுணமுமே படைத்தலைவனுக்கு அழகாவன என்பதாம்.

(வி-ரை.) ஊராண்மை ஆண்மையெனக் குறைந்து நின்றது. போர்செய்யுங்கால் பகைவர்மேல் இரக்கம்வையாது போர்செய்தலும், போர்செய்யுங்கால் அவர்க்கொரு தாழ்வுண்டாயின் அதற்கிரங்கி உதவிசெய்தலும் அறமாதலால் 'அழகு' என்றார்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - படைச்செருக்கு - ௯ - ம் பாட்டு,

"பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு."

ஊராண்மை- மிக்கவுபகாரியாந்தன்மை. அது இலங்கையர் கோன், தன் சேனைகளெல்லா மடிந்து தான் தனியே நின்றது கண்டிரங்கி, இன்றுபோய் நாளைவா வென்று அயோத்தியர் கோமானாகிய சக்ரவர்த்தித் திருமகன் சொல்லிவிடுத்தது போல்வது. தந்திரம் - சேனை. அதனையுடையவனாதலால், சேனைத் தலைவனுக்குத் தந்திரியெனப் பெயர் வழங்கிற்று. தறுகணாண்மை யென்பதற்கு அஞ்சாமையை ஆளுந்தன்மை யென்றுரைத்தலுமாம். (௯)

10. உண்டிக்கழகு விருந்தோடுண்டல்.

(ப-ரை.) உண்டிக்கு - (ஒருவனது) போஜனத்துக்கு, அழகு - அழகாவது, விருந்தோடு - விருந்தினரோடு கூடியிருந்து, உண்டல்- உண்பதேயாம், எ-று.

(க-ரை.) விருந்தினரோடு கூடியிருந் துண்பதே ஒருவனது போஜனத்துக்கு அழகாவதென்பதாம்.

(வி-ரை.) விருந்து - பண்பாகுபெயர். விருந்தினர்: பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அது இன்மையிற் குறியாது வந்தாரும் என இருவகையர். இங்கு விருந்தென்றது அவ்விருவகையினரையுமே. உண்டிக்கழகு விருந்தோடுண்டல் என்றமையால் அவ்வாறுண்ணாமை உண்டிக் கழகன்றென்பது பெறப்பட்டது. தனித்துண்பதற்கு வறுமையும் இழிவும் உண்டாமாதலால் விருந்தோடுண்டல் அழகாயிற்று. இதற்கு உதாரணம்:—

திருக்குறள் - ஈகை - ௯ - ம் பாட்டு,

"இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்."

இதனுள், நிரப்பிய வென்பதற்குப் பொருள், தம் வயிற்றை நிரப்பும்பொருட்டு என ஆத்திசூடியுரையி லுரைத்தாங்குரைத்துக் கொள்க. (௧0)

11. பெண்டிர்க்கழ கெதிர்பேசாதிருத்தல்.

(ப-ரை.) பெண்டிர்க்கு - மாதர்க்கு, அழகு - அழகாவது, எதிர் பேசாது - தம் கணவருக் கெதிர்நின்று பேசாமல், இருத்தல் - அடங்கியிருத்தலாம், எ-று.

(க-ரை.) தம் கணவருக் கெதிரேநின்று பேசாம லடங்கியிருத் தலே மாதர்க்கழகாவ தென்பதாம்.

(வி-ரை.) எதிர் பேசாதிருத்தல் என்பதற்கு எதிர்த்துப் பேசா திருத்தல் எனப் பொருள் கூறலுமாம். எதிர்நின்று பேசுதலாகிய அடங்காமை அவரைத் தாழச்செய்தலால், பேசாதடங்குந் தன்மை அவரை மேன்மேலு முயர்த்தி அவர்க்கு அழகு செய்யுமென்ப திதனாற்போந்த பொருள். இது குலமாதர் விலைமாதர் என்னும் இரு திறத்தார்க்கும் பொதுவாய் நின்றது.

இதற்குதாரணம்:—திருக்குறள் - அடக்கமுடைமை - க - ம் பாட்டு,

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்." (கக)

12. குலமகட்கழகுதன் கொழுநனைப்பேணுதல்.

(ப-ரை.) குலமகட்கு - குலப்பெண்ணுக்கு, அழகு - அழகாவது: தன் - தன்னையும், கொழுநனை - தன்கணவனையும், பேணுதல் - பாதுகாத்தலாம், எ-று.

(க-ரை.) குலமாதுக்குத் தன்னையும் தன் கணவனையும் பாது காத்தலே அழகென்பதாம்.

(வி-ரை.) தன் என்பதில் ஐயுருபும் எண்ணும்மையும் தொக்குநின்றது. பொதுப்படப் பேணுதல் என்றமையால் தன்னைக் கற்பில் வழுவாமலும், தன் கணவனை அவன் சொல்லிலும் உணவுதவல்முதலிய வுபசாரங்களிலும் வழுவாமற் பாதுகாத்தலும் அடங்கும். இவ்வாறு பாதுகாத்தலே கற்பிற்கு இலக்கணமாதலால் குலமகட்கு அழகாயிற்று. இதற்குதாரணம்:—

திருக்குறள் - வாழ்க்கைத் துணைநலம் - ௬ - ம் பாட்டு,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

தன்கொழுநனை யென்பதற்குத் தன்கணவனை யென்றுரைத்தலுமொன்று. (கஉ)

13. விலைமகட்கழகுதன் மேனிமினுக்குதல்.

(ப-ரை.) விலைமகட்கு - விலைமாதுக்கு, அழகு - அழகாவது, தன் மேனி - தன் உடம்பை, மினுக்குதல் - மஞ்சள்முதலியவற்றால் விளங்கச்செய்தலாம், எ-று.

(க-ரை.) விலைமாதுக்குத் தன்னுடம்பை மஞ்சள் முதலியவற்றால் விளங்கச்செய்தலே அழகாவதென்பதாம்.

(வி-ரை.) மேனி மினுக்குதலாவது - உடம்பை மஞ்சள், பரிமளதிரவியங்கள், மலர்மாலை, பட்டாடை, பொன்மணிப் பணிகள் முதலியவற்றால் அலங்கரித்துக் கொள்ளுதல். இவள் தெய்வப்பெண்போல நின்று அறிவிலாப் புருடரை மயக்கி வஞ்சிப்பதற்கு இவ்வலங்காரமே கருவியாதலால், 'விலைமகட்கழகுதன் மேனிமினுக்குதல்' என்றார். இது அவளுக்கு அழகாயினும் அறிவிலாரை மயக்கி வஞ்சித்துக் கொல்வதற் கேதுவாதலால் அவர்க்கு விடமாமென்றதுமாயிற்று.

இதற்குதாரணம்:—திருக்குறள் - வரைவின்மகளிர் - அ - ம் பாட்டு,

"ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு."

தம்மேனியையினுக்கி மாயமகளிர் அறிவிலாரைத் தீண்டுவது, காமநெறியால் உயிரைக் கவரவந்த தெய்வமகளிர் தீண்டுவதுபோலு மென்பர் என்பதிதன்பொருள். (கந)

14. அறிஞர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்.

(ப-ரை.) அறிஞர்க்கு - அறிவுடையோர்க்கு, அழகு - அழகாவது, கற்று - கற்கவேண்டிய நூல்களையெல்லாங் கற்று, உணர்ந்து- அவற்றின் பொருளை ஐயந்திரிபற அறிந்து, அடங்கல் - (அக்கல்வி யுணர்ச்சிகட் கேற்பத் தம்முடைய மனமொழி மெய்கள்) அடங்கி யிருத்தலேயாம், எ-று.

(க-ரை.) கற்றுணர்ந்தடங்கலே அறிஞர்க்கழகாவ தென்பதாம்.

(வி-ரை.) அறிஞர் என்பதில் ஞகரம் பெயரிடைநிலை. கற்கவேண்டிய நூல்கள் என்றது அறிவுநூல்களை. அறிவுநூல்களைக் கற்றுணர்ந்தாலன்றி மனமொழிமெய்க ளடங்காவாதலால், கற்று என்பதற்கு அறிவுநூல்களைக் கற்று எனப் பொருளுரைக்கலாயிற்று. மனமொழிமெய்களை முக்கரண மென்பர். கற்றுணர்ந்தடங்காமை பேதைமையாதலால் கற்றுணர்ந்தடங்கல் 'அழகு' என்றார். இவ்வாறடங்கி யிருப்பின் அறக்கடவுள் ஏவல்செயு மென்பதாம்.
இதற்குதாரணம்:—திருக்குறள்- அடக்கமுடைமை - ௧0 - ம் பாட்டு,

"கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து."

இச்சூத்திரத்துள் அடங்கல் என்பதில் மனத்தின்கண் வெகுளி தோன்றுமற் காத்தலு மடங்கிநிற்றல் காண்க. (கச)

"அறிவோர்க்கழகு..." என்றும் பாடம்.

15. வறிஞர்க்கழகு வறுமையிற்செம்மை.

(ப-ரை.) வறிஞர்க்கு - தரித்திரர்க்கு, அழகு - அழகாவது, வறுமையில் - வறுமைக்காலத்திலும், செம்மை - செவ்வனே யிருத்தலாம், எ-று.

(க-ரை.) வறுமைக்காலத்திலும் செவ்வனே யிருத்தலே வறி ஞர்க்கு அழகாவ தென்பதாம்.

(வி-ரை.) "வறியோர்க்கழகு" என்றும் பாடம். செம்மை-ஒழுக் கமும் நாணும் கெடாதிருக்குந் தன்மை. என்னெனின், வறுமைவந் ததென்று ஒழுக்கத்தைக் கைவிட்டால் குலத்தார் நிந்திப்பார், நாண த்தைக் கைவிட்டால் அறக்கடவுள்காயும், ஆதலால், இரண்டையும் கைவிடாதிருத்தலே செம்மை யென்றதாயிற்று.

இதற்குதாரணம்:—திருக்குறள் - நாணுடைமை - கூ - ம் பாட்டு,

"குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை."

ஆதலால், வறுமையிற் செம்மையெனச் சென்ஞெட்டுதலால், திருவள்ளுவநாயனரு மிவ்வாறு கூறினு ரெனக்காண்க. கொள்கை- ஒழுக்கம். இதற்குப் பரிமேலழகர் குலத்தைக் கெடுக்கும் நலத்தைக் கெடுக்கும் எனப் பொருள்கூறினர். குலஞ்சுடுதல் - குலத்தார் நாவி னுற்சுடுதல், "ஆறுதே, நாவினுற் சுட்ட வடு" என வருதல்காண்க. நலம் - அறம். அன்பிலதனை யறங்காயும் என வருதலால், நலஞ் சுடும் என்பதற்கு அறக்கடவுள் காயும் எனவுரைத்துக்கொள்க.

16. (1) தேம்படுபனையின் றிரள்பழத்தொருவிதை
வானுறவோங்கி வளம்பெறவளரினும்
ஒருவற்கிருக்க நிழலாகாதே;
(2) தெள்ளியவாலின் சிறுபழத்தொருவிதை
தெண்ணீர்க்கயத்துட் சிறுமீன்சினையினும்
நுண்ணிதேயாயினு மண்ணல்யானை
அணிதேர்ப்புரவி யாட்பெரும்படையொடு
மன்னர்க்கிருக்க நிழலாகும்மே;

(3) ஆதலால்,

மகாமகோபாத்யாய, டாக்டர்

(4) பெரியோரெல்லாம் பெரியருமல்லர்;
(5) சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர்;
(6) பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர்;
(7) உற்றோரெல்லாம் உறவினரல்லர்;
(8) கொண்டோரெல்லாம் பெண்டிருமல்லர்.

(1) (பதவுரைமுதலியன.) தேம்படு-மதுரம்பொருந்திய, பனையின்-பனையினது, திரள் - திரண்ட, பழத்து - கனியினது, ஒரு விரை - ஒரு விரையானது, வான் உற - ஆகாயத்தைத் தீண்டும்படி, வளம் பெற வளரினும் - செழுமையுண்டாக வளர்ந்தாலும், இருக்க - இருப்பதற்கு, ஒருவற்கு - ஒருவனுக்காயினும், நிழல் ஆகாது - நிழலைத் தராது; ஏகாரம் - ஈற்றசை. (தேம்படுபழம் எனக்கூட்டுக.)

(2) ஆலின் - ஆலினது, தெள்ளிய - தெளிவாகிய, சிறு பழத்து - சிறிய கனியிலுள்ள, ஒரு விரை - ஒரு (சிறிய)வித்தானது, (ஆலின் சிறுபழம் எனக்கூட்டுக.) தெள் - தெளிவாகிய, நீர் - நீரையுடைய, கயத்துள் - தடாகத்திலிருக்கிற, சிறு மீன் - சிறிய மீனினது, சினையினும் - முட்டையைக் காட்டிலும், நுண்ணிதே ஆயினும் - நுட்பமானதாகவே யிருந்தாலும், அண்ணல் - பெருமை பொருந்திய, யானை - யானையும், அணி தேர் - அழகுபொருந்திய தேரும், புரவி-குதிரையும், பெரு - பெரிதாகிய, ஆள் படையொடு - காலாளுமாகிய சேனையுடனே, மன்னர்க்கு - அரசருக்கு, இருக்க-தங்கியிருக்க, நிழல்ஆகும்-நிழலைத்தரும்.

(3) ஆதலால்—அதுபோல,

(4) பெரியோர் எல்லாம் - உருவினால் பெருமையுடையோ ரெல்லாரும், பெரியரும் அல்லர் - பெருமையுடையோருமல்லர், (என்றமையால்) குணம் தொழில் கல்வி முதலியவற்றால் சிறியராகவுமிருப்பார்க ளென்பது குறிப்பெச்சம். உம்மை எதிரதுதழீஇயது. அவர் வடிவு நோக்கிப் புகழலாகாதென்பது கருத்து.

இதற்குதாரணம்:—திருக்குறள்-அடக்கமுடைமை-கூ-ம் பாட்டு,

"பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்."

சிறியோர் எல்லாம் - உருவினால் சிறியராயிருப்பவ ரெல்லா ரும், சிறியரும் அல்லர் - சிறியராகவே யிரார்கள், (என்றதனால்) குணம் தொழில் கல்வி முதலியவற்றில் பெரியராகவு மிருப்பார்கள் என்பது குறிப்பெச்சம்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - வினைத்திட்பம் - எ - ம் பாட்டு,

"உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து."

பெற்றோர் எல்லாம் - ஒருவர் பெற்ற பிள்ளைக ளெல்லாரும், பிள்ளைகள் அல்லர் - பகிரதன் முதலியோர்போல நல்ல பிள்ளைக ளாகவே யிரார்கள்; துரியோதனன் முதலியோர்போலக் கெட்டபிள் ளைகளாகவு மிருப்பார்கள் என்பது குறிப்பெச்சம். உம்மை குறைந் துநின்றது.

இதற்குதாரணம்:—திருக்குறள்-புதல்வரைப்பெறுதல் உ-ம் பாட்டு,

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்."

இக்குறளின் எதிர்மறை முகத்தால் கெட்ட பிள்ளைகட்கு உதாரணமுங் காண்க. பெற்றோர் கொண்டோர் என்பன, யானுண் டது சோறு என்புழிப்போலச் செயப்படுபொருள் வினைமுதல்போ னின்றன.

உற்றோர் எல்லாம் - உறவினரெல்லாரும், உறவினர் அல்லர் (துரியோதனனுக்கு விதுரன் கர்ணன் முதலியோர்போல, நல்லுறவி னராகவே யிரார்கள்; சல்லியன் சகுனி முதலியோர்போலக் கெட் ட வுறவினராகவு மிருப்பார்கள் எனக்கொள்க. இத்தொடர்க்கும் உம்மை விகாரத்தாற் றொக்கது.

இதற்குதாரணம்:—திருக்குறள் - சுற்றந்தழால் - உ - ம் பாட்டு,

"விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்."

இதன் எதிர்மறை முகத்தால் கெட்ட சுற்றத்திற்கும் உதாரணங் காண்க.

கொண்டோர் எல்லாம் - கொள்ளப்பட்ட மனைவிய ரெல்லாரும், பெண்டிரும் அல்லர்-அருந்ததி முதலியோர் போலக் கற்புடை மனைவியராகவே யிரார்கள்; தீங்குடை மனைவியராகவு மிருப்பார்கள் எனக்கொள்க.

இதற்குதாரணம்:—திருக்குறள் - வாழ்க்கைத் துணைநலம் - ரு - உ - ம் பாட்டுகள்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."
"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்"

இவற்றை இருதிறத்தார்க்கும் உதாரணமாகக் கொள்க.

தேம்படுபனையின் என்பது முதல் பெண்டிருமல்லர் என்னுமளவும் ஒரு தொடர். இதனுள், தேம் - நிழலாகாதே என்பதும், தெள் - நிழலாகும்மே என்பதும் எடுத்துக்காட்டுவமையெனக் கொண்டு, ஆதலால் அதுபோல என்பதைக் கூட்டி, பெரியோரெல்லாம் பெரியருமல்லர், சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர், பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர், உற்றோரெல்லா முறவினரல்லர், கொண்டோரெல்லாம் பெண்டிருமல்லர் என முடித்துப் பொருள் காண்க.

இத்தொடரின் கருத்து: பெருமை பெருமையேயாகாது, சிறுமை சிறுமையேயாகாது; பெருமையினுஞ் சிறுமையுண்டு, சிறுமையினும் பெருமையுண்டு என்பதாம். (கசு)

17. (1) அடினும்பா லின்பா றன்சுவைகுன்றாது;

(2) சுடினுஞ்செம்பொன் றன்னொளிகெடாது;
(3) அரைக்கினுஞ்சந்தநந் தன்மணமறாது;
(4) புகைக்கினுங்காரகில் பொல்லாங்குகமழாது;
(5) கலக்கினுந்தண்கடல் சேறாகாதே;
(6) அடினும்பால்பெய்துகைப் பறாதுபேய்ச்சுரைக்காய்;
(7) ஊட்டினும்பல்விரை யுள்ளிகமழாதே;
(8) ஒருநாட்பழகினும் பெரியோர்கேண்மை
இருநிலம்பிளக்க வேர்வீழ்க்குமே;
(9) நாறுண்டுபழகினு மூர்க்கர்கேண்மை
நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே.

(ஆதலால்)

(10) பெருமையுஞ்சிறுமையுந் தாந்தரவருமே.

(பதவுரை முதலியன.)

(1) ஆவின்பால் - பசுவின்பாலே, அடினும்-வற்றக் காய்ச்சினு லும், தன் சுவை குன்றாது - தன்சுவையிற் குறையாது (மிகும்), அதுபோலவும்;—

(2) செம்பொன் - செம்பொனானது, சுடினும்-நெருப்பினாற் சுடப்பட்டாலும், தன் ஒளி கெடாது - தன்னொளியிற் குலையாது (மிகும்), அதுபோலவும்,—

(3) சந்தநம்-சந்தநக்கட்டையானது, அரைக்கினும்-அரைக்கப் பட்டாலும், தன்மணம் அறாது - தன் பரிமளம் குறையாது (மிகும்) அதுபோலவும்;—

(4) கார் அகில்-சேகுபற்றிய அகிற்கட்டையானது, புகைக்கி னும்-நெருப்பிலிட்டுப் புகைத்தாலும், பொல்லாங்கு கமழாது-தன்ம ணமாறித் தீநாற்றம் நாறாது (நறுநாற்றமே மிகும்), அதுபோலவும்;-

(5) தண்கடல் - குளிர்ச்சியாகியகடலானது, கலக்கினும்-கலக் கப்பட்டாலும், சேறுஆகாது-(கலங்கிச்)சேறாகமாட்டாது, (பின்னுந்

தெளிவாகவே யிருக்கும்) அதுபோலவும்;—மேன்மக்களை ஒருவர் பொல்லாங்குசெய்து கெடுப்பினும் தம் மேன்மைக்குணங் கெடாமலே, கெடுப்பவர்க்கு இன்பமானவற்றையே செய்வார்கள். இதற்குதாரணம்:—திருக்குறள்-சான்றாண்மை-எ-ம் பாட்டு,

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு."

இனி அருத்தாபத்தியால், நன்மை செய்தார்க்குத் தீமைகளே செய்வது கீழ்மக்களுக்கு இயல்பெனக்கொண்டு, வருந்தொடர்க்கும் இக்குறளையே யுதாரணமாகக் கொள்க.

(6) பேய்ச்சுரைக்காய்-பேய்ச்சுரைக்காயானது, பால் பெய்து அடினும் - பால்விட்டுச் சமைத்தாலும், கைப்பு அறாது - தன்குணமாகிய கசப்பு நீங்காது (அந்தப்பாலுங் கெட்டுப்போகும்), அது போலவும்;—

(7) பல்விரை ஊட்டினும்-பலவாசனைகளை யூட்டினாலும், உள்ளி-உள்ளியானது, கமழாது-தன் தீநாற்ற மொழிந்து நன்மணங் கமழாது,(அந்த பல நல்லவாசனைகளையுங் கெடுத்துவிடும்), அதுபோலவும், கீழ்மக்களைப் பல நன்மைகள் செய்து போற்றினும் அவற்றையெல்லாங் கெடுத்துத் தமது தூர்க்குணங்களையே காட்டுவர் என்பதாம். இதற்குதாரணம்:—

"தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா
வுளிநீரர் மாதோ கயவர்—அளிநீரார்க்
கென்னானுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே
இன்னாங்கு செய்வார்ப் பெறின்."

"வேங்கை வரிப்புலியைத் தீர்த்த விடதாரி
யாங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம்."

"தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற விலராவர்—அக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாம்
தேவரே தின்னினும் வேம்பு."

இவற்றுள், கயவர் போற்றுவோர்க்கு நற்குணங் கொடாமைக்கும் தீக்குணங் கொடுத்தற்குமே உதாரணங் காண்க. இவ்விரண்டு தொடர்க்கும் பொருள் பெரியோர் - மூர்க்கர் எனவும், பெருமையுஞ் சிறுமையுந்தாந்தர வருமே எனவும் பின்னர்க் கூறுதலால் ஒட்டலங்காரமன்று, எடுத்துக்காட்டுவமையென்றேகொள்க. விளங்குதற்பொருட்டு இவ்விடத் தெடுத்துரைக்கப்பட்டன.

(8) ஒருநாள் பழகினும்-ஒருநாள் பழகினாலும், பெரியோர் கேண்மை-மேன்மக்களுடைய நட்பாகிய மரமானது, இரு நிலம் பிளக்க-பெரிய பூமியானது பிளக்கும்படி, வேர் வீழ்க்குமே - வேரூன்றி நிற்கும்;—

வீழ்க்குமேயென மகரவொற்று விரித்தல் விகாரமாயிற்று. எகாரத்தை மாறிக்கூட்டுக. நட்பென்னு மரமானது நாளுக்குநாள் பூமியெல்லாம் பிளக்கும்படி வேர்வீழ்த்திக்கொண்டே தழைத்தோங்கும் என்பதாம. இதற்குதாரணம்:—திருக்குறள்-நட்பு-உ-ம் பாட்டு,

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு." எனவும்,

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை யெஞ்ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்
கெதிர்செலத் தின்றன்ன* தகைத்தரோ வென்றும்
மதுர* மிலாளர் தொடர்பு." எனவும் காண்க

* (9) நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை-கீழ்மக்களுடைய நட்பாகிய மரமானது நூறுவருடம் பழகினாலும், நீர்க்குள் பாசி போல் - நீரிலுள்ள பாசிபோல, வேர் கொள்ளாதே - வேரூன்றாமலே அலையும்;—

பாசி நீர்க்குள் வேர்க்கொள்ளா தலைதல்போல வேர்க்கொள்ளா தலையுமெனக் கூட்டி விரித்துரைத்துக் கொள்க. ஏகாரம் - அசை நிலை. இதற்குதாரணம் மேற்காட்டியவற்றுட் காண்க. (அதனால்).

(10) பெருமையும்-(மேன்மக்களிடத்துப்) பெருமையுண்டாத லும், சிறுமையும் - (கீழ்மக்களிடத்துச்) சிறுமை யுண்டாதலும், தாம் தர வருமே - அவர்தர வுண்டாவதேயன்றிப் பிறர்தர வுண் டாவதில்லை, எ-று.

மேன்மக்களுக்கு மேலானகுணமே யியற்கை, கீழ்மக்களுக்குக் கீழான குணமே யியற்கை; ஆதலால், இது ஒருவராலும் மாற்றப் படாதென்பது கருத்து. இதற்குதாரணம்;—திருக்குறள்-தெரிந்து தெளிதல்-ரு-ம் பாட்டு,

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்."

"தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற லிலராவர்—அக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு."

ஆயின், மேன்மக்கள் கீழ்மக்களுக் குதாரணம் இரண்டிடத் துங் காட்டவேண்டுவ தென்னெனின், அங்கே வகுத்துக்கூறி இங் கே தொகுத்துக் கூறியதனால் இரண்டிடத்துங் காட்டவேண்டிற் றென்க.

அடினு மாவின்பா றன்சுவை குன்றாது என்பதுமுதல் பெரு மையுஞ் சிறுமையுந் தாந்தர வருமே யென்னுமளவும் ஒருதொடர். இதனுள், அடினும் என்பதுமுதல் கலக்கினுந்தண்கடல் சேறாகா தே யென்னுமளவும் மேன்மக்களுக்கும், அடினும் பால்பெய்து என் பதுமுதல் உள்ளிகமழாதே யென்னுமளவும் கீழ்மக்களுக்கும் எடுத்துக்காட்டுவமை யெனவும், பின்பு ஒருநாள் பழகினும் பெரி யோர் கேண்மை, இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே என்பது

மேன்மக்கள் நட்புக்கும், நாளுண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள்ளாதே என்பது கீழ்மக்கள் நட்புக்கும் உவமையெனக் கொண்டு, அதனால், எனக் காரணங்காட்டி, பெருமையுஞ் சிறுமையுந் தாந்தர வருமே எனத் தொகுத்து முடித்துக்கொள்க. (௧௭)

18. (1) சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம
பெரியோராயிற் பொறுப்பதுகடனே;
(2) சிறியோர்பெரும்பிழை செய்தனராயிற்
பெரியோரப்பிழை பொறுத்தலுமரிதே.;
(அதனால்)
(3) கற்கைநன்றே கற்கைநன்றே;
ஐயம்புகினும் கற்கைநன்றே.

(பதவுரை முதலியன.)

(1) சிறியோர் செய்த - கீழ்மக்கள் செய்த, சிறு பிழையெல்லாம் - சிறு குற்றங்களையெல்லாம், பெரியோராயின் - பெரியோராயிருக்கவேண்டின், பொறுப்பது கடனே - பொறுத்திருப்பதே நீதியாம்;—

ஆயின்என்பதை ஆயிருக்கவேண்டின் என விரித்துக்கொள்க. இதற்குதாரணம்:—திருக்குறள்-பொறையுடைமை-ச-ம் பாட்டு,

"நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்."

(2) சிறியோர் பெரும்பிழை செய்தனராயின்-சிற்றறிவுடையோர்பெரிதாகிய குற்றத்தைச் செய்தாரானால், பெரியோர்-பெரியவர், அப்பிழை-அந்தக் குற்றத்தை, பொறுத்தலும் அரிதே - பொறுத்திருப்பதும் அரிதேயாம்;—

அவ்வாறு பொறுப்பவராயினும் இதற்குக் கோவங்கொள்வர், கொண்டால் காப்பது அரிதென்பது கருத்து. இதற்குதாரணம்:—திருக்குறள்-நீத்தார் பெருமை-கூ-ம் பாட்டு,

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது."

(அதனால்)

இப்பெருமை சிறுமைகளை யெல்லாம்ஒருவன் அறிந்தொழுகு தற்பொருட்டு, கற்கை நன்றே கற்கை நன்றே - எல்லா நூல்களை யும் இளமையிற் றொடங்கிக் கற்பதே நன்மை, கற்பதே நன்மை;

(4) ஐயம் புகினும் கற்கை நன்றே-பிச்சை யேற்கவந்த காலத் தும் கற்பதே நன்மை. எ-று.

இதனுள், சிறியோர்செய்த சிறுபிழை யெல்லாம் என்பது முதல் ஐயம்புகினுங் கற்கைநன்றே என்னுமளவும ஒருதொடர். கடன் - அரிது, அதனால், கற்கைநன்றே யென முடித்து, அப்பெரு மை சிறுமைகளை யறிந்தொழுகுதற்பொருட்டு, எவ்வளவு கற்பினும் அவ்வளவுக்கவ்வளவு அறிவு சுரக்குமாதலால் அதுபற்றி, அடுக்கி யும் தேற்றேகாரம் கொடுத்து வலியுறுத்தியும் அமையாது, மீட்டும் அதுபோலத் துன்பநோ யொழித்தற்கேற்ற மருந்து பிறிதில்லை யா தலால், ஐயம்புகினுங்கற்கைநன்றே யெனக்கூறினாரெனப் பொருள் கொள்க. இதற்குதாரணம்;—திருக்குறள்-கல்வி-கூ-ம் பாட்டு,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு."

எனக் கற்றவளவாக அறிவு சுரத்தற்கும்,

"இம்மை பயக்குமா லீயக் குறையின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்
மம்ம ரறுக்கு மருந்து."

எனத் துன்பநோ யொழித்தற்கு அதைவிட மருந்தில்லை யென் றற்கும் உதாரணம் காண்க. (கஅ)

19\. (1) கல்லாவொருவன் குலநலம்பேசின்
நெல்லினுட்பிறந்த பதராகும்மே;
(2) நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன்
கற்றிலனாயிற் கீழிருப்பவனே;
(3) எக்குடிப்பிறப்பினும் யாவரேயாயினும்
அக்குடிக்கற்றோரை மேல்வருகென்பர்;
(4) அறிவுடையொருவனை யரசனும்விரும்பும்.
(5) (அதனால்)
(6) அச்சமுள்ளடங்கி யறிவகத்தில்லாக்
கொச்சைமக்களைப் பெறுதலினக்குடி
எச்சமற்றேமாந் திருக்கைநன்றே.

(பதவுரை முதலியன.)

(1) கல்லா ஒருவன் குலநலம் பேசின்-கல்லாதவொருவனை யும் அவன் குலத்திற் கற்றவருடைய மேன்மையையும் எடுத்துப் பேசுங்கால், நெல்லினுள் பிறந்த பதர் ஆகுமே-நெற்பயிருட் பிறந்த பதரும் நெல்லுமாய் முடியும்;—

இவனைப் பதரெனவே அக்குலத்திற் பிறந்து கற்றவர் நெல் லென்பது தானே யமைதலால் மிகைபடக் கூறுதொழிந்தார். குலம் - ஆகுபெயர். பதர் வடிவிலே நெல்லைப்போலிருந்து பயன் படாததுபோலப் பயன்படார் கல்லாதவரென்பது கருத்து. இதற்கு உதாரணம்:—திருக்குறள்-கல்லாமை-சு-ம் பாட்டு,

"உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்."

(2) நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன்-அந்தணன் அரசன் வணிகன் சூத்திரன் என்னும் நான்கு வருணத்தின் முன்னின்ற வருணத்திற் பிறந்த வொருவன், கற்றிலன் ஆயின் - கல்லாதவனு

னுல், கீழ் இருப்பவனே - (அவன்) தாழ்ந்த இடத்தில் இருக்கத்தக்கவனே;—

(3) எக்குடி பிறப்பினும்-கடைநின்ற எந்தக் குலத்திலே பிறந்திருந்தாலும், யாவரே ஆயினும்-(அழைப்பவர் தேவர் முனிவர் அரசர் என்பவருள்) யாராயிருந்தாலும், அக்குடி கற்றோரை - அக்குலத்திற் கற்றவராயினுரை, மேல் வருக என்பர்-மேலிடத்து வந்திருக்கவென்றுபசரித்தழைப்பர்,—

யாவரேயாயினும் என்றது அழைப்பவரைக் குறித்துநின்றது. யாவரேயாயினும் என்றதனுல் பெருமைபொருந்திய தேவர் முதலியோருள் என்பது பெறப்பட்டது. வருகவெனபர் என்பது வருகென்பர் என விகாரமாயிற்று. கருத்து விளங்கிக் கிடந்தது. இதற்கு உதாரணம்:—திருக்குறள்-கல்லாமை-கூ-ம் பாட்டு,

"மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்று ரனைத்திலர் பாடு."

திருக்குறள்-கல்வி-ரு-ம் பாட்டு,

"உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்."

(4) அறிவுடையொருவனே அரசனும் விரும்பும்-இன்னும் கல்வியறிவுடையோனை அரசனுங்கூட விரும்புவான்;—

அரசனும் எனச் சிறப்பும்மை இறந்தது தழுவியும் நின்றது. பெற்றவர் கற்றவர் யாவரும் மற்றக்குடிகளும் விரும்புவதன்றி யெனப் பொருள்தருதலால் எனக்காண்க. இதற்குதாரணம்:—திருக்குறள்-புதல்வரைப்பெறுதல்-அ-ம் பாட்டு,

"தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது."

(5) அதனுல் - கற்றதனுல் இவ்வாறு மேன்மையும் கல்லாமையால் இவ்வாறு கீழ்மையும் பெறவருதலால்,

(6) அச்சம் உள் அடங்கி - பயமொன்றே யதனுள் நிறைந்து, அறிவு அகத்து இல்லா - மனத்தின்கண் அறிவொதுங்கிய, கொச்சை மக்களை - ஆடுகளை நிகர்த்த பிள்ளைகளை, பெறுதலின் - பெற்று வருந்துதலினும், அக்குடி - (அந்தப் பிள்ளைகளைப்பெற்ற) அக்குலத்துள்ளவர், எச்சம் அற்று - சந்ததியற்று (வந்திகளாய்), ஏமாந்திருக்கை நன்றே-இன்புற்றிருத்தலே நன்மையாம், எ-று.

அப்பிள்ளைகளைப் பெற்றுத் தாமும் அவரும் துன்புறுதலொழிதலால், 'எச்சமற்றேமாந்திருக்கைநன்று' என்றார். கொச்சை - வெள்ளாடு. கல்லாவொருவன் குலநலம்பேசின் என்பதுமுதல் எச்சமற்றேமாந்திருக்கைநன்றே என்னுமளவும ஒருதொடர் எனக் கொண்டு, கற்றதனுல் இவ்வாறு பெருமையும் கல்லாமையால் சிறுமையும் வரும், அதனுல், கல்வியறிவில்லாப் பிள்ளைகளைப் பெற்று வருந்துதலினும், பெறாது இன்புற்றிருத்தலே நன்று எனப்பொருள்காண்க. (௧௯)

20. (1) யானைக்கில்லை தானமுந்தருமமும்

(2) பூனைக்கில்லை தவமுந்தயையும்

(3) ஞானிக்கில்லை யின்பமுந்துன்பமும்.

(பதவுரை முதலியன.)

(1) தானமும் தருமமும் - (கை கொடைக்கு நீண்டதுபோல விருப்பினும்) கொடையும் மற்றைத் தருமங்களைச் செய்தலும், யானைக்கு இல்லை-யானைக்கியல்பாகவே யில்லை அதுபோலவும்,

(2) தவமும் தயையும்-(தவஞ்செய்வதுபோலக்கண்களை மூடிக்கொண்டும் அருளுடையதுபோல மிகவும் சாந்தகுணத்தோடு கூடியுமிருந்தாலும்) அவ்விரண்டும், பூனைக்கு இல்லை - பூனைக்கு இயல்பாகவேயில்லை, அதுபோலவும்,

(3) இன்பமும் துன்பமும் - (உலகத்தாரோடு கூடி இன்புற்றிருப்பவன்போலவும் துன்புற்றிருப்பவன்போலவும் தோன்றினும்) அவ்விரண்டும், ஞானிக்கு இல்லை-ஞானிக்கு இயல்பாகவே யில்லை,

இதன் கருத்து விளங்கிக் கிடந்தது. இதற்குதாரணம்:—

திருக்குறள் - கடவுள்வாழ்த்து - ௫ - ம் பாட்டு,

“இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.”

இருவினையின் பயன் இன்பதுன்பங்களாதலாற் காண்க. (௨௰)

21. (1) சிதலைக்கில்லை செல்வமுஞ்செருக்கும்;
(2) முதலைக்கில்லை நீத்துநிலையும்;
(3) அச்சமுநாணமு மறிவிலோர்க்கில்லை;
(4) நாளுங்கிழமையு நலிந்தோர்க்கில்லை;
(5) கேளுங்கிளையுங் கெட்டோர்க்கில்லை.

(பதவுரை முதலியன.)

(1) செல்வமும் - இது செல்வமென்பதும் (இது பிறர்க்குப் பயன்படு செல்வமுடையவ ராடையெனறெண்ணுமெண்ணமும்), செருக்கும்-இது செருக்கெனபதும், (இது பிறர்குதவாது தாமே யுண்டுடுத்துக் களித்திருப்பவராடை. யெனறெண்ணு மெண்ணமும்), சிதலைக்கு இல்லை-செல்லுக்கு இயல்பாகவேயில்லை, (நேர்ந்தால் இரண்டையுந் தின்றுவிடுவதேயன்றித்தின்னு திருப்பதில்லை; அதுபோலவும்;—

(2) நீத்தும்-இது நீந்தத்தகுந்த நீர், (இதிலே செல்லலாகா தென்றெண்ணு மெண்ணமும்), நிலையும் - இது நிலைகொள்ளத்தக்க தென்பதும், (இது நிலைகொள்ளத்தகுந்தநீர், இதிலே செல்லலாமென் றெண்ணுமெண்ணமும்), முதலைக்கு இல்லை - முதலைக்கு இயல்பாக வே யில்லை. (நேர்ந்தால் இரண்டிலுஞ் செல்வதேயன்றிச் செல்லா திருப்பதில்லை), அதுபோலவும்;

(3) அச்சமும் நாணும்-இது அஞ்சத்தக்கது,இது நாணத்தக்கது என்பதும், தக்கதிதுவென்றொதுங்குதலும்,தகாததிது வென்றுஅதைச்செய்ய வுடன்படுதலும், அறிவு இல்லோர்க்கு-பேதையர்க்கும்;—

(4) நாளும் கிழமையும்-இந்தநாள் இந்தக்கிழமை தக்கதென்று ஒன்றைச்செய்ய வுடன்படுதலும், தகாதென்று விலக்கலும், நலிந்தோர்க்கு - வறுமையால் நொந்தவர்க்கும்;—

(5) கேளுங்கிளையும்-இவர் சிநேகிக்கத்தக்கவரென்பதும்,இவர் விரும்பத்தக்க சுற்றத்தாரென்பதும் (தக்கவரென்று தழுவலும், தகாதவரென்று விலகலும்), கெட்டோர்க்கு - தமது குலநிலையிலே தவறிக் கெட்டுப்போனவர்க்கும், இல்லை - (நேர்ந்தால் இரண்டுமொன்றுவதேயன்றி) இயல்பாகவேயில்லை, எ-று.

வறுமையிலென்பது சொல்லெச்சம். நலிந்தோர் என்பது செயப்பாட்டு வினையாலணைந்தபெயர். செல்வம் செருக்கு என்பன ஆகுபெயர்கள். தின்பதன்றி யெண்ணுவதென்பது குறிப்பெச்சம். ஏனையவற்றையும் ஏற்குமா றய்த்துணர்ந்துகொள்க. இவற்றிற்குதாரணம்:—

திருக்குறள் - அறிவுடைமை - அ - ம் பாட்டு,

“அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.”

திருக்குறள் - நாணுடைமை - ௧0 - ம் பாட்டு,

“நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.”

திருக்குறள் - நல்குரவு - ௬ - ம் பாட்டு,

“தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.”

இக்குறளினுள் தொல்வரவென்பது நாளுங் கிழமையும் பார்த்தன் முதலியவாதலால் உதாரணங்காண்க.

“நீரினு நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்
யாரு மறிவர் புகைநுட்பம்—தேரின்
நிரப்பிடும் பையா ளன்புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து.”

இதில், புகையும் நுழைதற்கரிய துவாரத்திலே நுழைந்துபோவான் என்றதனால் செல்வரைத் தடுத்த நாட்கிழமைகளிலும் நுழைந்துபோவான் என வுதாரணங் காண்க.

திருக்குறள் - மானம் - ௬ - ம் பாட்டு,

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை." என்றும்,

திருக்குறள் - நெஞ்சொடு புலத்தல் ௬ - ம் பாட்டு,

"கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்." என்றும்,

முறையே காண்க. சிதலைக் கென்பதுமுதல் கேளுங்கிளையும் என்பதனளவு மொருதொடரெனக்கொண்டு அதனுள், சிதலைக் கில்லை யென்பன விரண்டும் எடுத்துக்காட்டுவமை யெனவும், அச்சமூநாணு மறிவிலோர்க்கில்லை, நாளுங்கிழமையு நலிந்தோர்க்கில்லை, கேளுங்கிளையுங் கெட்டோர்க்கில்லைஎன்பன மூன்றும் பொருளெனவுங் கொண்டு, அவற்றிற்கியையும்படி பொருள் விரித்துரைத்து முடித்துக்கொள்க. செய்யுளின்ப நோக்கித் தனித்தனி முடிபாக்கிக் கூறினரேனும், சிதலைக்குச் செல்வமுஞ் செருக்கும் முதலைக்கு நீத்து நிலையுமில்லை, அதுபோல, அறிவிலோர்க் கச்சமு நாணும் நலிந்தோர்க்கு நாளுங்கிழமையும் கெட்டோர்க்குக் கேளுங் கிளையும் இல்லையென ஒருவினைமுடிபாக்குக. (௨௧)

22. (1) உடைமையும்வறுமையு மொருவழிநில்லா;

(2) குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந் தோர்
நடைமெலிந்தோரூர் நண்ணினுநண்ணுவர்;

(3) சிறப்புஞ்செல்வமும் பெருமையுமுடையோர்
அறக்கூழ்ச்சாலை யடையினுமடைவர்;

(4) அறத்திடுபிச்சை கூவியிரப்போர்
அரசோடிருந்தர சாளினுமாளுவர்;

(5) குன்றத்தனையிரு நிதியைப்படைத்தோர்
அன்றைப்பகலே யழியினுமழிவர்;
(6) எழுநிலைமாடங் கால்சாய்ந்துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்;
(7) மணவணியணிந்த மகளிராங்கே
பிணவணியணிந்துதங் கொழுநரைத்தழீஇ
உடுத்தவாடை கோடியாக
முடித்தகூந்தல் விரிப்பினும்விரிப்பர்;
(8) பெற்றமுங்கழுதையு மேய்ந்தவப்பாழ்
பொற்றொடிமகளிரு மைந்தருஞ்செறிந்து
நெற்பொலி நெடுநகராயினுமாகும்;
(9) இல்லோரிரப்பது மியல்பேயியல்பே;
(10) இரந்தோர்க்கீவது முடையோர்கடனே.

(பதவுரை முதலியன.)

(1) உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லாது - செல்வமும் தரித்திரமும ஆகிய இரண்டும் அதுநின்றவிடத்ததுவேயாகவும் இதுநின்றவிடத் திதுவேயாகவும் நில்லாது மாறியும் நிற்கும்;— மாறியுநிற்கு மென்பது குறிப்பெச்சம். இதை யேதுவாக்கி இனி வருவனவற்றோடு ஒட்டுக. இதற்குதாரணம்:—

திருக்குறள் - நிலையாமை - உ - ம் பாட்டு,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று."

"துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டு நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்."

(2) வெண்கொற்றக் குடைநிழலிலேம்படி யானையின் கழுத்திலிருந்து அதைச்செலுத்திப் பவனிவந்த அரசரும் எல்லாவற்றையுமிழந்துநடப்பதற்குச் சக்தியில்லாமல், உடம்பு மெலிந்து மற்றொருதேசத்திலே சீவநத்தின்பொருட்டுச் சென்று சேரினுஞ் சேருவர்;—

சிறப்புமைமை விகாரத்தாற் றொக்கது. உதாரணம் மேற்காட்டிய குறளும்,

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுப்ப வேறுகி வீழ்வர் தாங்கொண்ட
மனையாளை மாற்றார் கொள." என்பதுங் காண்க.

விசேடித்த வுயர்வும் செருக்கிய செல்வமும் மானமும் உடையவர் அவையாவுமிழந்து நித்திய தரித்திராகி வயிற்றுப்பசியினால், கூழின்பொருட்டு அவற்றை யிழந்தவ்வூரிலே யிருக்கிற அன்னசத்திரங்களைப் போய்ச் சேரினுஞ் சேர்வர், இதற்குதாரணம்:—

திருக்குறள் - நல்குரவு - ௫ - ம் பாட்டு,

"நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்."

"அறுசுவை யுண்டி யமர்ந்தில் லாளூட்ட
மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்திற் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று."

(4) தருமத்தைக்குறித் திடப்படும் பிச்சை யுண்டோவென்று வீதிகளிலே நின்று கூப்பிட்டிரந்துதிரிபவர் அரசியலோடு கூடியிருந்து உலகத்தை யாளினும் ஆளுவர்;—

அரசியலோடு கூடியிருத்தல்-படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் என்னு மாறங்கத்தோடுங் கூடியிருத்தல்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - ஊழ் - ௫ - ம் பாட்டு,

"நல்லவை யெல்லா அந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு."
"வளம்படவேண்டாதார்—இல் - எ-ம்" காண்க.

(5) மலையளவாக வுயர்ந்த சங்கநிதி பதுமநிதிகளைப் படைத்தவர், படைத்த வன்றைத்தினத்திலேதானே அவற்றை அநுபவியாமல் இறப்பினு மிறப்பர்;—

இதற்குதாரணம்:—திருக்குறள் - நிலையாமை - ௩ - ம் பாட்டு,

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

நாலடியார் - யாக்கைநிலையாமை-௩-ம் பாட்டு,

"மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட்டா ரல்லால்
எஞ்சினா ரிவ்வுலகத் தில்."

(6) செல்வர்களுடைய எழுநிலைகளையுடைய மாடங்களானவை அடியோடே சாய்ந்து நொறுங்கிப்போகக் கழுதைகளும் மேயத்தகுந்த பாழ்நிலங்க ளாயினுமாகும்;—

உக என்பது உக்கு எனத் திரிந்துநின்றது. இறந்தது தழீஇய எச்சவும்மை குறைந்துநின்றது. அதனால் ஆடுமாடுகள் மேய்வதுமன்றி யெனப் பொருள்படுதல் காண்க. இதற்குதாரணம்:—

மேற்காட்டிய குறளினும்,

நாலடியார் - இன்மை - ௩-ம் பாட்டு,

"கடகஞ் செறிந்ததங் கைகளால் வாங்கி
யடகு பறித்துக்கொண் டட்டுக் - குடைகலனா
வுப்பிலி வெந்தைதின் றுள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால்."

என்ற இதனுள்ளும் எழுநிலைமாடங் கால்சாய்ந்துக்குக் கழுதை மேய் பாழாக இவ ரிவ்வாறாயினா ரெனக்காண்க. அதற்குக் கடகஞ் செறிந்த கையே சான்றாதலால்.

(7) மணக்கோலத்தோடு மணவேதிகையில் வீற்றிருந்த மாதர்கள் அந்த மணப்பந்தலிலேதானே (கணவரிறந்ததனால்) பிணக்கோலம் பூண்டு, மாலையிட்ட தங்கணவரைக் கட்டியணைத்துக்கொண்டு, முன்னுடுத்த மணக்கூறையே அறுப்புக்கூறையாகவும், முன்பு மகிழ்ந்து முடித்த கூந்தலை விரித்துப் புலம்பினும் புலம்புவர்;—

விரித்தல் புலம்புதற்காதலால் வருவித் துரைக்கப்பட்டது.

இதற்குதாரணம்:—திருக்குறள் - நிலையாமை - எ - ம் பாட்டு,

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல."

இக்குறளினுள், அன்றைத்தினம் வருவ துணராது கலியாணஞ் செய்ய நினைந்து செய்தலால் உதாரணங் காண்க.

"மன்றங் கறங்கு மணப்பறை யாயின
வன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை
ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்."

எனவும் காண்க.

(8) மாடுகளும் கழுதைகளும மேய்ந்த மேற்கூறிய பாழ்நிலம் போன்றதும், பொன்வளையை யணிந்த மங்கையரும் புருடருமாக நெருங்கி, நெற்பொலிகளையுடைய பெரும்பதி யாயினுமாகும்;—

பொலி - அம்பாரம். செறிய என்பது செறிந்து எனத் திரிந்து நின்றது. காடு நாடாயினுமாம் என்பது கருத்து. உதாரணம் வந்தவழிக் காண்க.

அதனால் - அக்காரணத்தால்,

(9) தரித்திரர் யாசகஞ் செய்வதும் அவர்க்கு இயற்கையேயாம்;—

வலியுறுத்தற்பொருட்டு அடுக்கித் தேற்றேகாரமும் கொடுத்து இயல்பே யியல்பே' எனக் கூறினார்.

"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை."

என்றாற்போல இங்கே செயற்கை இயற்கை யெனப்பட்டது. இயல்பு - இயற்கை.

இதற்குதாரணம்:—திருக்குறள் - இரவு - க - கூ - ம் பாட்டுகள்,

"இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று."

"ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை."

(10) அவ்வாறு யாசித்தார்க்கு இல்லையென்னாது கொடுப்பதும் செல்வர்க்குக் கடன்மையேயாம்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - ஒப்புரவறிதல் - எ - ம் பாட்டு,

"மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்."

உடைமையும் வறுமையு மொருவழி நில்லா வென்பதுமுதல் இரந்தோர்க்கீவது முடையோர் கடனே என்னுமளவு மொருதொடர். இதனுள் உடைமையும் வறுமையுமொருவழி நில்லாவாதலால் குடை - நண்ணினுநண்ணுவர், அடைகினுமடைகுவர், ஆளினுமாளுவர், அழியினுமழிகுவர், ஆகினுமாகும், விரிப்பினும்விரிப்பர், ஆயினுமாகும், அதனால், இரப்பதியல்பு, ஈவதுகடன் என முடிததுப் பொருள்காண்க. உம்மைகளேழும் ஐயத்தின்கண் வந்தன. பிற இலக்கணங்களு முய்த்துணர்ந்துகொள்க. (௨௨)

23. நில்லஞாலமும் வானமும்பெறினும்
எல்லாமில்லை யில்லில்லோர்க்கே.

(பொழிப்புரை.) நல்ல பூமியின் செல்வமுழுதும் வானுலகின் செல்வமுழுதும் பெற்றாராயினும், நற்குண நற்செய்கைகளையுடைய மனைவியரைப்பெறாதவர்க்கு அவைமுழுதுமில்லை, எ-று.

(வி-ரை.) பயன் படாமையின் 'இல்லை' என்றார். நற்குண நற்செய்கைகளை யுடையவளே இல்லாளாதலால் இல் என அடைகொடாதேகூறினர். "இல்லாளகத்திருக்க வில்லாததொன்றில்லை" என இவ்வாறே அடைகொடாமல் ஔவையார் கூறுதலுங் காண்க. இதன்கருத்து விளங்கிக் கிடந்தது.

இதற்குதாரணம்:—திருக்குறள்-வாழ்க்கைத்துணைநலம்-உ-ம் பாட்டு,

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்." (உ௩)

24. தறுகண்யானை தான்பெரிதாயினுஉம்
சிறுகண்மூங்கிற் கோற்கஞ்சும்மே.

(ப-ரை.) தறுகண்-கொலைசெய்தற்கஞ்சாத வீரத்தன்மை பெரிதாயினும், தான் பெரிது ஆயினும் - அதுவும் உருவத்தாற் பெரிதாயிருப்பினும், சிறுகண் மூங்கில் கோற்கு-(ஒருவன்பாதுகாவலுக்குட்பட்டபோது அவன் கையிலிருந்த) கணுக்களையுடைய சிறிய மூங்கிற்கோலுக்கும், யானை அஞ்சும்மே - யானை அஞ்சுவது நிச்சயம், எ-று.

(வி-ரை.) சிறுகண் என்னும் இரண்டு விசேடணமும் கோல் என்னும் முதற்பொருட்கு வந்தது. ஏகாரம் தேற்றம். தறுகண் பெரிதாயினும் தான் பெரிதாயினும் சிறுகண் மூங்கிற் கோற்கு யானையஞ்சும்மே யெனக் கூட்டுக. கோற்கஞ்சும் என்றதனால், ஒருவன் பாதுகாவலுக் குட்பட்டபோது அவன் கையிலிருந்த என்பது பெற்றாம். ஒருவன் சுத்தவீரனாயிருந்தாலும் அரசனுடைய பாதுகாவலுக் குட்பட்டபோது அவனுக்கு அஞ்சி நடப்பது மல்லாமல், அவனுடையாணம் பெற்று வந்தவர்க்கும் அஞ்சி நடக்கவேண்டு மெனப் பிறிது பொருள் தருதலால் இது ஒட்டலங்காரமெனக் காண்க. நடவாக்கால் அவன் பாதுகாப்பை யிழந்து துன்புறுதல் நிச்சயமாதலால் கருத்து விளங்கிற்று. இதற்குதாரணம்:—

திருக்குறள் - மன்னரைச் சேர்ந்தொழுகல் - அ - ம் பாட்டு,

"இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்."

இதனுள், இளைய ரினமுறைய ரென்று தொழுகப்படுதலெனக்கொண்டு அரசனுக்கஞ்சி நடத்தற்கும், நின்ற வொளியோடொழுகப்படுதலெனக்கொண்டு அவனுடையாளத்திற்கஞ்சிநடத்தற்கும் உதாரணங் காண்க. (௨௪)

25. (1) குன்றுடைநெடுங்கா டூடேவாழினும்
புன்றலைப்புல்வாய் புலிக்கஞ்சும்மே;
(2) ஆரையாம்பள்ளத் தூடேவாழினும்
தேரைபாம்பிற்கு மிகவஞ்சும்மே;
(3) கொடுங்கோன்மன்னர் வாழுநாட்டில்
கடும்புலிவாழுங் காடுநன்றே.

(பதவுரை முதலியன.)

(1) குன்று உடை - மலைகளைத் தன்னிடத்தேயுடைய, நெடு காடு ஊடே - நெடிய காட்டின்கண், வாழினும் - அதுவும் இதுவும் ஒத்து வாழ்ந்தபோதினும், புல் தலை - சிறிய தலையையுடைய, புல்வாய் - புல்வாயானது, (வாய்வலியையும் வன்றலையையுமுடைய), புலிக்கு அஞ்சும்மே - புலிக்கஞ்சியே வாழாநிற்கும்;—

புல்வாய் - அன்மொழித் தொகை; புன்மையாகிய வாயினையுடையது. புன்றலைப் புல்வாய் என்றதனால், புலி வன்றலையையும் வல்வாயையு முடையதென்பது பெற்றாம்.

(2) ஆரை ஆம்பள்ளத்தூடே வாழினும் - ஆரையோடு கூடிய நீரோடையில் அதுவு மிதுவு மொத்து வாழ்ந்தபோதினும், தேரை- தவளையானது, பாம்பிற்கு - நீர்ப்பாம்புக்கு, மிக அஞ்சும்மே - மிகவும் அஞ்சியே வாழாநிற்கும்;—

ஆரை - நீரிற்படர்வதோர் பூண்டு. ஆம் - நீர். இவை யஞ்சி வாழ்வதற்கேது வென்னெனின், சிறிய தவறுளவாயிற் கொன்று தின்னுமென்பது கருதியாதலால்.

(3) கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்-கொடுங்கோலரசரோடொத்துவாழ்கின்ற நாட்டினும், கடும் புலி வாழும் காடு நன்றே - (ஒருவனுக்குக்) கடுமையையுடைய புலி வாழ்கின்ற காடு குடியிருத்தற்கு மிகவும் நன்றாம், எ-று.

அதனோடுகூடி வாழாமல் அதற்கஞ்சியே அது சஞ்சரியாத இடத்திற் குடியிருக்கலா மாதலால் 'நன்று' என்றார். கொடுங்கோல் - வளைந்தகோல். இது அரசநீதி கோணுதற்கு உவமையாகுபெயராய் நின்றது. கொலைசெய்யும் புலியினும் கொடுங்கோல் மன்னர் கொடியர் என்பதாம்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - கொடுங்கோன்மை - க-ம் பாட்டு,

"கொலைமேற் கொண்டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து."

எனக் கூறுதலுங்காண்க. இதனுள், புல்வாயும் புலியும், தேரையும் பாம்பும் ஒத்து வாழ்தல்போல, ஒருவன் கொடுங்கோன் மன்னரோடொத்துவாழ்தலெனவும், வாழினும், புல்வாயும் தேரையும் புலிக்கும் பாம்பிற்கும் அஞ்சியே வாழ்தல் போல,அவன் கொடுங்கோன் மன்னர்க் கஞ்சியே வாழவேண்டும், ஆதலால், அதைவிட அவனுக்குக் கடும்புலிவாழுங் காடே நன்று என முடித்துப் பொருளுணர்ந்துகொள்க. (உரு)

26. சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலிற்
றேன்றேர்குரவர் தேயநன்றே.

(ப-ரை.) சான்றோர் இல்லா - (கல்வியறி வொழுக்கங்கள்) நிறைந்த பெரியோரில்லாத, தொல் பதி இருத்தலின் - பழமையான நகரத்தில் ஒருவன் குடியிருப்பதினும், தேன் தேர் குரவர் தேயம் நன்றே - உணவின்பொருட்டாகத் தேனையாராய்ந்துதிரிகின்ற குறவர் குடியிருக்கும் நாடே அவன் குடியிருத்தற்கு நன்று, எ-று.

(வி-ரை.) ஏகாரம் - தேற்றப்பொருளது. அக்குறவர் நாட்டி னும் இருபாவமிகுதியாற் கேடு பூண்டிருப்ப ராதலால், சான்றோ ரில்லாத நாடு நாடன்றென்பதும், அச்சான்றோர் சார்பு பெற்றவன் பகைவராலும் தீங்குசெய்யப்படான் என்பதுங் கருதி இவ்வாறு கூறினாரெனக்காண்க.

இதற்குதாரணம்:—திருக்குறள் - நாடு - க - ம் பாட்டு,

"தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு." எனவும்,

திருக்குறள் - பெரியாரைத்துணைக்கோடல் - சு - ம் பாட்டு,

"தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்." எனவும்

முறையே காண்க. (உசு)

27. வித்துமேரு முளவாயிருப்ப
எய்த்தங்கிருக்கு மேழையும்பதரே.

(ப-ரை.) வித்தும் - விதைத்தற்கு வித்தும், ஏரும் - உழுதற்கு ஏர்முதலியவும், உளவாயிருப்ப - அமைந்திருக்க, எய்த்து அங்கு இருக்கும் - (உழுது பயிர்செய்து வாழமாட்டாமல் சோம்பலாலே) வறுமையுற் றிளைத்திருக்கும், ஏழையும் - பேதையும், பதரே - ஒரு மக்கட்பதரே யாவன், எ-று.

(வி-ரை.) தன் சரீரத்தை யொளிக்காமலே வருத்தப்பட்டு அந் தக் கைத்தொழிலைச் செய்வானாயின், தானு மிரவாது பிறர்க்கீந்தும் வாழ்தலாயிருக்க, அதனைச் செய்யாமலே சோம்பி வருந்துவோனைக் கண்டால் பூமிதேவியும் நகைப்பா ளாதலால் 'பதர்' என்றார்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - உழவு - ரு - ௧௦ - ம் பாட்டுகள்,

"இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்." எனவும்,

"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லா ணகும்." எனவும்

அவ்விருதிறத்திற்கும் உதாரணங் காண்க. (உஎ)

28. காலையுமாலையு நான்மறையோதா
அந்தணரென்போ ரனைவரும்பதரே.

(ப-ரை.) காலையும் - காலைப்பொழுதினும், மாலையும் - மாலைப் பொழுதினும், நான்மறை ஓதா - நான்கு வேதங்களையும் ஓதாத, அந்தணர் என்போர் அனைவரும் - பார்ப்பாரென்போ ரெல்லாரும், பதரே - பார்ப்பனப் பதரேயாவர், எ-று.

(வி-ரை.) நான்மறை யோதி அதன் பொறையை யுட்கொளா மையிற் 'பதர்' என்றார்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - ஒழுக்கமுடைமை - ௪ - ம் பாட்டு,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்."

எனத் திருவள்ளுவநாயனாரும் மறக்கலாகா தென்னுங் கருத்தையுட்கொண்டு 'ஓதிக்கொளலாகும்' எனக் கூறினார். கொள்ளா விடின் பிறப்புக் கெடுமென்பதே அவர்க்குங் கருத்து. ஆதலால் இவர் 'பதர்' என்றார். (உஅ)

29. குடியலைத்திரந்து கோலொடுநின்ற
முடியுடையிறைவ னூர்க்கனும்பதரே.

(ப-ரை.) குடி அலைத்து - குடிகளை வருத்தி, இரந்து - (தன் பகுதியின் மேற்படப் பொருள் கொடுக்கும்படி அவர்களை யடித்துப் பறிப்பவன்போல) யாசகஞ் செய்து, கோலொடு நின்ற - கொடுங் கோலோடு கூடிநின்ற, முடி உடை - முடியையுடைய, இறைவன் ஆம் மூர்க்கனும் - வேந்தனாகிய மூர்க்கனும், பதரே - அரசப்பதரே யாவன், எ-று.

(வி-ரை.) விரைந்துகெடுத லுணராது நெடுங்காலம் வாழலா மென்றெண்ணி அவ்வாறு செய்தலால் 'பதர்' என்றார்.
இதற்குதாரணம்:—திருக்குறள்-கொடுங்கோன்மை - உ - ம பாட்டு,
"வேலொடு நின்றா னிடுவென் றதுபோலும்
கோலொடு நின்றா னிரவு." எனவும்
திருக்குறள் - வெருவந்தசெய்யாமை - ௬ - ம் பாட்டு,
"வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்." எனவும்
முறையே குடியலைத் திரத்தற்கும் அவன் விரைந்து கெடுவா னென்பதற்கு முதாரணங் காண்க. (உக)

30. முதலுளவாகக் கொண்டுவாணிபஞ்செய்
துதன்பயனுகரா வணிகராய்பதரே.

(ப-ரை.) முதல் உளவாக - முதலாகப் பொருளிருக்கவும், கொண்டு - (அதனாலே கொள்ளும் பண்டங்களைக்) கொண்டு விற்று, வாணிபம்செய்து - வர்த்தகஞ் செய்து, அதன் பயன் - அதனால் வருகிற ஆதாயப்பயனை, நுகரா - அநுபவியாத, வணிகர் - தனவைசியர், ஆய் பதர் - (வைசியர்க்குள்ளே) தெரிந்தெடுக்கப்படும் பதர்களாவர், எ-று.

திருக்குறள் - பெரியாரைத்துணைக்கோடல் - ௯ - ம் பாட்டு,
"முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை."
என்றாராகலின், இவர் முதலிருந்தும் ஊதியத்தை யிழத்தலால் 'பதர்' என்றார். (௩0)

31. தன்மனையாளைத் தாய்மனைக்கனுப்பிப்
பின்பவட்பேணாப் பேதையும்பதரே.

(ப-ரை.) தன் மனையாளை - தன் மனையாட்டியை, தாய் மனைக்கு அனுப்பி - அவளுடைய தாய்வீட்டிற் கனுப்பிவிட்டு, பின்பு

பிறகு, அவள் பேணு - அவளைப் பாதுகாவாமலேயிருக்கிற, பேதை யும் - அறிவிலானும், பதரே-குடிசெய்வோருட் பதராவன், எ-று.

(வி-ரை.) இல்லாளிடத் தன்புடையனுகக் கூடி அறஞ்செய்து இல்வாழ்வானுயின் அவ்வன்புடைமை வடிவாகவும் அறம் பயனுக வும் இல்வாழ்க்கை முற்றுப்பெற்று, அது அவனைத் தேவருள் ஒருவ னுக்கற்பாலதாயிருக்க, முதலே யில்லாளை நீக்கி, இல்வாழ்க்கை யுருவைக் குலைத்தலால் 'பதர்' என்ருர்.

இதற்குதாரணம்:—திருக்குறள்-இல்வாழ்க்கை-ரு-கO-ம் பாட்டுகள்,

"அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது." எனவும்,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்." எனவும்

அன்பு அறன் இல்வாழ்க்கைக்குப் பண்பு பயனுதற்கும், அதன் பயன் அவனைத் தேவருள ஒருவனுக்கற்கும் உதாரணம் முறையே காண்க. இன்னும்,

"மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமை."

என அவளிடத்து நற்குண நற்செய்கைகளும் நன்மக்கட்பே றும் இல்லாவிடினும், கொண்டவன புறக்கழித்து வாழலாகாதெனப் பிறர் கூறுதலுங் காண்க. (கூக)

32. தன்மனையாட்டியைத் தனியேயிருத்திப்
பிறன்மனைக்கேகும் பேதையும்பதரே.

(ப-ரை.) தன் மனையாட்டியை - தன் மனைவியை, தனியே இருத்தி - தனியே வைத்து, பிறன் மனைக்கு ஏகும் - அந்நியன் மனைவியை விரும்பி அவன் மனைக்குச் செல்கின்ற, பேதையும் - மூடனும், பதரே - பேதையருட் பதராவர், எ-று.

(வி-ரை.) பகை பாவம் அச்சம் பழி என்பவற்றுளகப்பட்டுத் தான் கெடுவதுமன்றித் தன் மனைவியுந் துணைபுற் றழிதற்கேதுவாத லால் 'பதர்' என்றார். பகை முதலியவற்றாற் கெடுதற்குதாரணம்:—

திருக்குறள் - பிறனில் விழையாமை - ௬ - ௨ - ம் பாட்டுகள்,

"பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்."

"அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்."

எனப் பேதையருட் பதரென்பதற்கு முதாரணங் காண்க. (௩௨)

33. தன்னாயுதமுந் தன்கையிற்பொருளும்
பிறன்கையிற்கொடுக்கும் பேதையும்பதரே.

(ப-ரை.) தன் ஆயுதமும் - தன்னுடைய ஆயுதத்தையும், தன் கையில் பொருளும் - தன் கையிலுள்ள திரவியத்தையும், பிறன் கையில் கொடுக்கும் - ஒருசார்பு மில்லாத அந்நியன் கையிலே கொடுத்த, பேதையும் - மூடனும், பதரே - ஏமாறுவோருட் பதராவன், எ-று.

(வி-ரை.) யாம் பண்டு விளையாடுஞ் சோலை யென்றாற்போலக் கொடுக்கும் பேதையென இறந்தகாலம் எதிர்காலமாக மயங்கி நின்றது. இனி இதற்குத் தன்னாயுதத்தையாயினுந் தன்கைப்பொருளை யாயினும் பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரெனினும் அமையும். பொருளைப் பிறன்கையிற் கொடுத்து அதனால்வரு மூதியத்தை யிழந்து துன்பத்தைக் கொண்டதனால் 'பேதை' என்றும், அதன்மேலும் தன் ஆயுதத்தையுங் கொடுத்து நிராயுதனானதனால் 'பதர்' என்றுங் கூறினார்.

இதற்குதாரணம்:—திருக்குறள் - பேதைமை - க - ம் பாட்டு,

"பேதைமை யென்ப தொன்றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்."

எனத் துன்பத்தைக்கொண்டேதியமிழத்தற்குதாரணங் காண்க. ()

34. ஏந்திழையாரியலாத தந்திரங்கொடு
வாய்ந்ததென்றதின் முயல்வானுமோர்பதரே.

(ப-ரை.) ஏந்திழையார் - மனைவியரது, இயலாத - பொருந்தாத, தந்திரம் கொடு - உபாயத்தைக் கேட்டு, வாய்ந்தது என்று - இதுவே பொருத்தமான வுபாயமென்று எண்ணி, அதின் - அதனாலே, முயல்வானும் - ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்குவோனும், ஓர் பதரே - ஒப்பற்ற பதராவன், எ-று.

(வி-ரை.) அறிவோடு நாணு மிழந்து பெண்ணேவல் புரிதற்கமைந்த இவனது ஆண்டன்மையினும் அப்பெண்டன்மை சிறத்தலின், மேற்கூறிய பலவகைப் பதருள்ளுந் தாழ்ந்த பதரென்பார் 'ஓர்பதர்' என்றார். இதற்குதாரணம்:—

திருக்குறள் - பெண்வழிச்சேறல் - எ - ம் பாட்டு,

"பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து." (ருசு)

35. (1) வாய்ப்பறையாகவு நாக்கடிப்பாகவும்
சாற்றுவதொன்றைப் போற்றிக்கேண்மின்;

(2) பொய்யுடையொருவன் சொல்வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே;

(3) மெய்யுடையொருவன் சொன்மாட்டானேல்
பொய்போலும்மே பொய்போலும்மே;

அதனால்,

(4) இருவர்தஞ்சொல்லையு மெழுதரங்கேட்டு
இருவரும்பொருந்த வுரையாராயின்
மனுமுறைநெறியின் வழக்கிழந்தவர்தாம்
மனமுறமறுகினின் றழுதகண்ணீர்

முறையுறத்தேவர் மூவர்காப்பினூஉம்
வழிவழியீர்வதோர் வாளாகும்மே;
(5) பழியாவருவதூஉ மொழியாதொழிவது;
(6) சுழியாவருபுன லலையாதொழிவது.

(பதவுரை முதலியன.)

(1) வாய் பறையாகவும் - என் வாயே ஒருபறையாகவும், நா கடிப்பாகவும் - அதனுள்ளிருக்கிற நாவே அந்தப் பறையடிக்குங் குறுந்தடியாகவும், (உறுதியாக அறைந்து) சாற்றுவது ஒன்றை-என்றால் சொல்லப்படுவதொன்றை, போற்றி கேண்மின் - (உங்களுடைய மனம் வேறொரு விடயத்திற் செல்லாமலே அதனைப்) பாதுகாத்துக் கேளுங்கள்;—

பறையறைந்தபின் உலகிற்கு ஒன்றைத் தெரிவித்தல் உலகியலாதலால் 'வாய்ப்பறையாகவு நாக்கடிப்பாகவும்' என்றவுடனே சாற்றுவது என்றது சொல்லுவதாதலால், அதன்முன் அறைந்து என்பது சொல்லெச்சமாய்க் குறைந்து நின்றது. அது யாதெனின்,

(2) பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் - உள்ளே பொய்யை வைத்திருந்த ஒருவன் பேசுகிற சொல்வலியினாலே, மெய்போலும்மே மெய்போலும்மே - மெய்போலவே தோன்றும் மெய்போலவே தோன்றும்;—

உறுதிப்பொருள் தோன்றற்கு மெய்போலும்மே யென்றது அடுக்கிநின்றது. போலும்மே யென மகரவொற்று விரித்தல் விகாரம். ஏகாரத்தை மாறிக் கூட்டுக.

(3) மெய்யுடை ஒருவன் - மெய்யை யுள்ளேவைத்திருந்த ஒருவன், சொல்மாட்டானேல் - அது மெய்யெனறு விளக்கச் சொல்ல மாட்டானாயின், பொய்போலும்மே பொய்போலும்மே - பொய்போலவேதோன்றும் பொய்போலவே தோன்றும்;—

சொலமாட்டானேல் என்பது சொல்மாட்டானேல் என அகரங் குறைந்துநின்றது. ஒழிந்தவைவற்றிற்கு மேற்சொல்லியபடி வில

க்கணங் காண்க. இவ்விரண்டையு மேதுவாகக் கொண்டு அதனால் என்பதனோடு கூட்டி இனிவருவனவற்றோ டொட்டுக.

(4) வழக்குரைக்க வந்த இருதிறத்தாருடைய வாய்மொழிகளை யும் ஒருவன் ஏழுதரம் மடக்கி மடக்கிக் கேட்டு, பிறகு மநுநீதி நெறி யோடு பொருந்தும்படி அவ்விருவர்க்கும் வழக்குத் தீர்ப்புச் சொல்ல வேண்டும். அவ்வாறு சொல்லானாயின், மநுமுறைநெறியிற் பொரு ந்த வுரையானாயி னெனக் கூட்டுக. முறை - நீதியென்பதை,

திருக்குறள் - செங்கோன்மை - ௭ - ம் பாட்டு,

"இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்."

என்பதனாற் காண்க. பொருந்த என்னும் வினையெச்சம் நெறி யொடு என்னு மூன்றனுருபையும் இருவர்க்கும் என்ற குவ்வுருபை யும் முடித்து நிற்றலின், உருபு பலவடுக்கி யொருபயனிலை கொண் டதெனக் காண்க. இருவர்க்கும் பொருந்த வுரையானாயின எனவே ஒருவர்க்குப் பொருந்த வுரைப்பானாயின் எனபது அருத்தாபத்தி யாற் பெறப்பட்டது. படவே அதனாலேயெனக் காரணங் கண்டு, கண்ணீர் வாளாகுமெனச் செயற்கைப் பொருள் காரண முன்வர ஆக்கம் பெற்றதெனக் காண்க.

வழக்கிழந்துவிட்ட மற்றொருவருடைய மனமானது மிகுதியா ய்க் கலங்கித் திகைத்துநின்று அழப்படுங் கண்ணீரானது ஒழுங்கு பட எல்லாக் கடவுளரோடுங்கூட அரி அரன் அயன் என்னு மூவ ரும் வந்து, அவ்வொருதலை சாய்ந்து வழக்குத் தீர்ப்புச் சொன்னவ னைக் காக்கப்புகினும், (அக்காவலாற் பயனின்றி) அவனையும் அவன் பின் அவன் சந்ததியிலே தோன்றினோர் தோன்றுவோராகிய எல் லாரையும் பிளந்துகொண்டே வருவதோர் ஈர்வாளாகும்;—

வழிவழி யென்றதனால் இனித் தோன்றுமவரையு மென்பது பெறப்பட்டது. வழி என்பது சந்ததிக்கும் பின் என்பதற்கும் பெ யர். தேவர் மூவர் - தேவரோடு மூவர். வழிவழி - வழியின் வழி. இதில் இறந்தது தழீஇய வெச்சவும்மை தொக்குநின்றது. அதனால்

அவனையும் அவன் வழியின் வழியையும் எனப் பொருள்கொள்க. கண்ணீர் வாளாகும் என்றது ஏகதேச வுருவகவணி. (அதுவு மன்றி),

(5) நிந்தை யென்பதுமோ எக்காலமும் வருவதும் ஒழிவதும் ஒழியாது;—

இறுதியிலும்மை விகாரத்தாற் றொக்கது; பழியா வருவது மொழிவது மொழியாது எனக் கூட்டுக. பழியு மொன்றின்பின் னொன்றாக வந்துகொண்டேயிருக்கு மென்பது கருத்து.

(6) சுழிதரு வரும் நீர்த்திரையானது ஒழிவதேது, எ-று.

யாது என்னும் ஐயக்கிளவி யிங்கே இன்மை குறித்து நின்றது. இதுபோலப் பழியாவருவது மொழிவது மொழியாது என இவ்வெடுத்துக்காட்டுவமையை முற்கூட்டி யிதன் பொருளாகிய பழியாவருவது மொழிவது மொழியாது என்பதைப் பிற்கூட்டுக. வாய்ப்பறை என்பதுமுதல் சுழியாவருபுனலலையாதொழிவது என்பதனளவு மொருதொடர். இதனுள் முன்னைய விரண்டடியும் தனிநின்றுபொருள் முற்றினும் இன்ன தெனனுமையிற் றொகுத்துச் சுட்டலென வும், மற்றபொய்யுடை என்பது முதல் சுழியா ... என்பதனளவு மொருதொடராய் வகுத்துக்காட்டல் எனவுங் கொள்க. இவ்வகுத்துக்காட்டலுள் மெய்போலும்மே, பொய் போலும்மே, அதனால், உரையாறையின், அழுத கண்ணீர் வாளாகும்மே, அதுவுமன்றி, சுழியா வருபுனலலையா தொழிவது, அதுபோலப் பழியாவருவது மொழிவது மொழியாது எனக் கூட்டிநோக்கி அதனால் என்னுமேதுவுக்கு ஏழுதரங் கேட்டுப்பொருந்த வுரைத்தல்வேண்டுமெனப் பயனிலை வருவித்து, அவ்வாறு உரையாது ஒருதலை பொருந்த வுரைப்பாறையின், அதனால், ஒருதலை யழுதகண்ணீர் வாளாகும், பழியுமாகும் எனப்பொருள்கொண்டு, அது யாதெனின் என்னும் வினாவுக்கு விடையாக்கிக்கொள்க. விரிவஞ்சி விடலாயிற்று.பிறவிலக்கணங்களு முய்த்துணர்ந்து கொள்க. மறுமுறை நெறியி னிருவரும் பொருந்த வுரைத்தற் குதாரணம்:—

திருக்குறள் - நடுவுநிலைமை - அ - ம் பாட்டு,

"சமஞ்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி."

எனக்காண்க. இனி ஒருதலைபொருந்தவுரைத்தற்குதாரணம்:—
இக்குறளினுள் உவமையடை பொருளடைகளுள் உடன்பாட்டை
யெதிர்மறுத்தும் எதிர்மறையையுடன்பாடாக்கியுங்காண்க. என்னை,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமையாது
ஒருபாற்கோடுத லிழிந்தோர்க்குப் பழி." என்க.

36. துணையோடல்லது நெடுவழிபோகேல்.

(பொ-ரை.) துணையோடுகூடிச் செல்வதன்றி, அஞ்சாமல் தனி
யே நெடுந்தூர வழியுள்ள வூருக்குச் செல்லாதை, எ-று.

(வி-ரை.) வழி - ஆகுபெயர். அஞ்சாமல் என்பது சொல்லெச்
சம். துணையோடல்லது என்றமையால் துணையோடு கூடியே செ
ல்லவேண்டுமென்பதும், நெடுவழிபோகேல் என்றமையால் சமீப
மாயிருக்கிற வூருக்குப்போகலாம என்பதும்பெறப்பட்டன. துணை-
சகாயம் (வழித்துணை). (௩௬)

37. புணைமீதல்லது நெடும்புனலேகேல்.

(பொ-ரை.) தெப்பத்தின்மீதேறிச் செல்வதன்றி நீண்ட யாற்று
நீர் முதலியவற்றை அஞ்சாமல் நீந்திப்போகாதை. எ-று.

(வி-ரை.) அஞ்சாமல் நீந்தி யென்பது குறிப்பெச்சம். புணைமீ
தல்லது என்றமையால் புணைமீதேறியே செல்லல்வேண்டுமென்ப
தும், நெடும்புன லேகேல் என்றமையால், ஆழமிலலாத கொஞ்ச
நீரில் நீந்திச்செல்லலா மென்பதும் பெறப்பட்டன. (௩௭)

38. வழியேயேகுக வழியேமீளுக.

(பொ-ரை.) அவ்வாறு துணையோடு போகினும், புணைமீதேறிச
செல்லினும், வழிவிலக்குதற்கு மேன்மக்கள் அஞ்சவேண்டுமாத
லால் வழிதப்பாமலே போய் வழிதப்பாமலே திரும்புக, எ-று.

ஏகுகவென்னும் வியங்கோள் முற்றெச்சப்பொருள்பட நின்றது. இனி அவ்வாறு எனச் சுட்டாது பொதுப்பட வழிதப்பாமலே செல்க, வழிதப்பாமலே திரும்புக, விரைந்துபோகவேண்டினும் என வுரைப்பினும் அமையும். இதற்கு விரைந்து போகவேண்டினும் என்பது இசையெச்சம். இம்மூன்றிற்குங் கருத்து: அஞ்சத் தகுவதற் கஞ்சுவது அறிவுடைமை யென்பதும், அஞ்சத்தகுவதற்கு அஞ்சாமை பேதைமை யென்பதுமாம்.

உதாரணம்:—திருக்குறள் - அறிவுடைமை - அ - ம் பாட்டு,

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்." (௩௮)

39. இவைகாணுலகிற் கியலுமாறே.

(பொ-ரை.) இது புறனடை, உலகத்தார்க்கு நடக்கத்தக்க நெறிகளானவ இவைபோல்வன பிறவுமாம், எ-று.

(வி-ரை.) காண், ஏ - இரண்டும் அசைநிலைகள். ஆறு - தொகுதிபொருமை. போல்வன என்பது சொல்லெச்சமாய்க் குறைந்து நின்றது. இனி, இவைகாண் என்பதை இவைபோல்வன வெனக் காண்க என விரித்து, என இடைச்சொல் தொக்கு நின்றதெனக் கொண்டு காண் என்பதை முன்னிலை யேவலாக்கினும் அமையும். உலகநெறி முழுதும் இதனுளடங்காமையால் இவைகாண் என்பதை இவைபோல்வன பிறவு மென்றுரைத்து இதைப் புறனடையென வேண்டிற்றெனக் காண்க. (௩௯)

40. வாழியநலனே வாழியநலனே.

(பொ - ரை.) எல்லா நன்மைகளும் வாழ்க. எல்லா இன்பங்களும் வாழ்க, எ-று.

(வி-ரை.) நலம் என்பது தொகுதி யொருமையாய் நன்மைகளையும் இன்பங்களையும் குறித்து நின்றது. ஏகாரமிரண்டும் அசைநிலைகள். இனி இவ்வாறன்றி நன்மையே வாழ்ந்திருக்கக் கடவது, நன்மையே வாழ்ந்திருக்கக் கடவது என உறுதி தோன்றற் பொருட்டுத் *தேற்றேகாரமுங் கொடுத்து இருமடி வாழ்த்தினு ரெனினுமாம். இது வாழ்த்து. (௪௦)

வெற்றிவேற்கையென்னும் நறுந்தொகை விருத்தியுரை

முற்றிற்று.

நீதிநூற்றிரட்டு விருத்தியுரை 7-ம் பாகம்.

உ

சங்கச் செய்யுள்.

மதுரைத்தமிழாசிரியர்மகனார்

பூதஞ்சேந்தனார்செய்த

# இனிதுநாற்பது

## மூலமும்,

மஹாவித்வான் கா. இராமசாமி நாயுடு அவர்களால்

இயற்றப்பட்ட

## விருத்தியுரையும்.

இவை

பென்ஷன் தபேதார் - தஞ்சை. சாம்பசிவம்பிள்ளை

அவர்கள் குமாரர்

தஞ்சை - ஸ. குமாரசுவாமிப்பிள்ளையால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

1909.

 விலை அணா 2. 

உ

கடவுள்துணை.

# இனிது நாற்பது

## மூலமும் உரையும்.

வெண்பா.

கண்மூன் றுடையா னடிசேர் கடிதினிதே
தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது.

பதவுரை. மூன்று கண் உடையான் - மூன்று கண்களை யுடையவனாகிய சிவபெருமானது, அடி - திருவடியை, சேர் - அடைதல், கடிது இனிது - மிகவுமினிதாம்; தொல் - பழமையாகிய, மாண் - மாட்சிமைப்பட்ட, - துழாய் மாலையானை - துளவமாலையை யணிந்தவனாகிய திருமாலை, தொழல் - வணங்குதல், இனிது - இனிதாகும், முந்துற - முற்பட, நான்கு முகம் உடையானை - நான்கு முகங்களை யுடையவனாகிய பிரமதேவனை, பேணி - விரும்பி, சென்று அமர்ந்து ஏத்தல் - போயிருந்து துதித்தல், இனிது - இனிதாகும். எ-று.

கருத்துரை. திரிமூர்த்திகளையும் வணங்குதல் இனிதென்பதாம்.

விசேடவுரை. கண் மூன்று என்பதனைப் பொருளியையுக் கேற்ப மூன்றுகண் என முன்பின்னாக மாற்றிக்கொள்ளலாயிற்று. முகநான்கு என்பதனையு மிவ்வாறே. சேர் - முதனிலைத் தொழிற் பெயர். கண்மூன்று - சோமசூரியாக்கினிகள். கண்மூன்றுடையான் என்றமையால் சிவபெருமான் என்றும், தொல் மாண்டுழாய் மாலையான் என்றமையால் திருமால் என்றும், முகநான்குடையான் என்றமையால் பிரமதேவன் என்றும் பொருள் கொள்ளப்பட்டது. இங்ஙனம் கூறியதனால் இது முதற்கடவுள் வணக்கமெனக் காண்க, கண்மூன்றுடைமை முதலியனவே யிவர்கட்குச் சிறந்த அடையாளங்களென்பதிதனாற் பெறப்பட்டது. ஏகாரங்க ளிரண்டும் அசைகள்.

பிச்சைபுக் காயினுங் கற்றன் மிகவினிதே
கற்றவை கைகொடுத்தல் சாலவு முன்னினிதே
முத்தேர் முறுவலார் சொல்லினி தாங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு.

ப - ரை. பிச்சை புக்காயினும் - ஐயமேற் றுண்டாயினும், கற்றல்-நூல்களைக் கற்றல், மிக இனிது - மிகவு மினிதாம்; கற்றவை - (ஒருவன்) கற்ற நூல்கள், கை கொடுத்தல் - (அவனுக்குக் கற்றோர் சபையின்கண் வந்து) உதவுதல், சாலவும் - மிகவும், முன் இனிது - முற்பட இனிதாம்; முத்து - முத்துப்போன்ற, ஏர் - அழகாகிய, முறுவலார் - பல்வரிசையை யுடையவராகிய மாதராது, சொல் - சொல்லானது, இனிது - இனிதாகும்; ஆங்கு - அதுபோல, தெற்றவும் - தெளியவும், மேல் ஆயார் - மேலாயினாரை, சேர்வு - சேர்தல், இனிது - இனிதாகும், எ-று.

க - ரை. பிச்சைபுக்காயினுங் கற்றல்முதலியவைபோல, மேலாரைச் சேர்தல் மிகவும் இனிமையைத் தருவதாகும் என்பதாம்.

வி - ரை. ஏகாரங்கள் மூன்றும் அசைகள். பிச்சைபுக்காயினும் என்றதனால் வறுமைக் காலத்தும் என்பதும் கல்வியினருமை

யும் விளங்கின. கைகொடுத்தல் - உதவுதல். மாதர் என்றது முத்தேர் முறுவலார் என்றமையால் அவரது உயர்வு பெறப்பட்டது; படவே, சொல் என்றது இன்சொல்லைக் குறித்தது. மேலாயார் - மேலாயினோர். (கல்வி கேள்வி யறிவொழுக்கங்களால் மேம்பட்டவர்). பிச்சை புக்காயினுங் கற்றல் முதலிய மூன்றையுங் கூறி, ஆங்கு என வுவமவுருபுகொடுத்துப் பிரித்து, மேலாயார்ச் சேர்வு இனிது என இறுதியிற் கூறினமையால், மேற்கூறிய மூன்றினிமைகளினும் மேலோரது சேர்க்கையினிமை சிறந்ததென்பது தெற்றென விளங்குகின்றது. சேர்வு - தொழிற்பெயர். (உ)

உடையான் வழக்கினி தொப்ப முடிந்தான்
மனைவாழ்க்கை முன்னினிது மாணாதா மாயி
னிலையாமை நோக்கி நெடியார் துறத்த
றலையாகத் தானினிது நன்கு.

ப - ரை. உடையான் - செல்வமுடையவனது, வழக்கு கொடை, இனிது - இனிதாகும்; ஒப்ப - (கணவன் மனைவியென்னும் இருவர் மனமும்) ஒத்திருக்க, முடிந்தால்-(அவரது) ஊழ் முற்றுப்பெற்றிருக்குமாயின், மனை வாழ்க்கை - [அவரது] இல்வாழ்க்கையானது, முன் இனிது - மிகவு மினிதாகும்; மாணாதாயின் - மாட்சிமைப் படாதாயின், நிலையாமை நோக்கி - நிலையாமையை ஆராய்ந்து, நெடியார் - பெரியார், துறத்தல் - துறத்தலானது, தலையாக - முதன்மையாக, நன்கு இனிது - மிகவு மினிதாகும், எ-று.

க - ரை. செல்வமுடையவன் வழக்கும், கணவன் மனைவியென்பவர் மனமொருமித்துச் செய்யு மில்வாழ்க்கையும், நிலையாமை நோக்கித் துறக்கும் பெரியோரது துறவும் இனிய வென்பதாம்.

வி - ரை. உடையான் என வாளாகூறினேனும் மேல் வழக்கு என வருதலால், "உடையார்மு னில்லார்போனின்று" என்புழிப்

போல செல்வமுடையவனைக் குறித்தது. மனைவாழ்க்கை யினிது என்றதற்கேற்ப, ஒப்ப என்பதற்கு கணவன் மனைவியென்னு மிருவர் மனமும் ஒத்திருக்க எனப் பொருளுரைக்க லாயிற்று. நிலையாமை-யாக்கை நிலையாமை முதலியன. நெடியார் - அறிவிற் சிறந்தவர். துறத்தல்-யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்களை யொருங்கே விடுதல். தலை - தலைமையென்பத னீறுதொகுத்தல். (ந)

ஏவது மாறா விளங்கிளை முன்னினிதே
நாளுநவை போகான் கற்றன் மிகவினிதே
யேருடையான் வேளாண்மை தானினி தாங்கினிதே
தேரிற்கோ ணட்புத் திசைக்கு.

ப - ரை. ஏவது - ஏவினவேலையை, மாறா - மறுக்காமற் செய்கிற, இளங்கிளை - இளங்கிளையை யுடைத்தா யிருத்தல், முன் இனிது - முற்பட இனிதாகும்; நாளும் - தினந்தோறும், நவை - கெட்டவழியில், போகான் - செல்லாதவனாய், கற்றல் - (ஒருவன்) கல்வியைக் கற்றல், மிக இனிது - மிகவும் இனிதாகும்; ஏர் உடையான் - ஏரையுடையவனது, வேளாண்மை - வேளாண்மையானது, இனிது - இனிதாகும்; ஆங்கு - அதுபோல, தேரின் - ஆராயின், திசைக்கு - தான்போகுந் திசைக்கு, நட்புக்கோள் - (அத்திசையிலுள்ளா ரெல்லாரையும்) நட்புக்கொள்ளுதல், இனிது - இனிதாகும். எ-று.

க - ரை. ஏவாமலே குறிப்பறிந்து செய்கிற வுறவினரை யுடைத்தாதல் முதலியவும் இனியவென்பதாம்.

வி - ரை. மறா என்பது மாறா என நீட்டல் பெற்றது. இளங்கிளை-அடங்கின வுறவு. கிளை - உவமையாகுபெயர். நவை - குற்றம்; அது குற்றத்தையுடைய நெறிக்காயிற்று. குற்றத்தையுடைய நெறி-தீநெறி. போகான் - முற்றெச்சம். வேளாண்மை - உபகாரம். பிற

ரெல்லாஞ் செய்யும் வேளாண்மை போலாது என்றும் நிலைபெற்றிருப்பதாதலால், ஏருடையான் வேளாண்மை தானினிது என்றார், கோள் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (ச)

யானை யுடையபடை காண்டன் மிகவினிதே
யூனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே
கான்யாற் றடைகரை யூரினி தாங்கினிதே
மான முடையார் மதிப்பு.

ப - ரை. யானை உடைய - யானைகளையுடைய, படை - படையை, காண்டல் - காணுதல், மிக இனிது - மிகவுமினிதாகும்; ஊனை - (பிறிதோருடம்பின்) தசையை, தின்று - உண்டு, ஊனை - தன்னுடம்பை, பெருக்காமை-வளர்க்காமையானது, முன் இனிது-முற்பட இனிதாகும்; கான்யாற்று-காட்டாற்றினது, கரை அடை-கரையையடைந்த, ஊர் - ஊரிலிருத்தல், இனிது - இனிதாகும்; ஆங்கு - அதுபோல, மானம் உடையார் மதிப்பு - பெருமையுடையவரால் மதிக்கப்படும் மதிப்பானது, இனிது - இனிதாகும், எ-று.

க - ரை. யானைப்படையைக் காணுதல் முதலியவும் இனியவென்பதாம்.

வி - ரை. நால்வகைப் படையினும் யானைப்படை சிறந்ததாதலால் யானையுடைய படைகாண்டன் மிகவினிது என்றும், புலாலுண்ணாமை தவத்திற்குச் சிறந்த அங்கமாதலால் ஊனைத்தின் றூனைப்பெருக்காமை முன்னினிது என்றும், எல்லாப் பொருள்களும் எளிதிற் கிடைக்கப் பெறுதலால், கான்யாற் றடைகரை யூரினிது என்றும், மாகஞ்சிறுகக் குவித்து நிதிக்குவை யீகையினெக்கழுத்த மிக்குடைத்தாதலால், 'ஆங்கினிதே மானமுடையார் மதிப்பு' என்றும் கூறினர். படை - பகைவரைப் படுத்தற்குரியது. ஊன் இரண்

டனுள் பின்னையது சினையாகுபெயர். பெருக்கல்-வளர்த்தல். பெருக்காமை - எதிர்மறைத் தொழிற்பெயர். (ரு)

கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயன்
செய்யாமை முன்னினிது செங்கோல னாகுத
லெய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு.

ப-ரை. கொல்லாமை - ஒருயிரையுங் கொல்லாதிருத்தல், முன் இனிது - முற்பட இனிதாகும்; மாராயன் - பெருமையையுடைய அரசன், கோல் கோடி - நீதி தப்பி, செய்யாமை - (அநீதி) செய்யாதிருத்தல், முன் இனிது - முற்பட இனிதாகும்; செங்கோலன் ஆகுதல் - (அவ்வரசன்) செங்கோலை யுடையவனாதல், முன் இனிது - முற்பட இனிதாகும்; யார்மாட்டும்-யாவரிடத்தும், பொல்லாங்கு உரையாமை - தீமையெடுத்துச் சொல்லாதிருத்தல், நன்கு - நன்மையாக, எய்தும் திறத்தால் - பொருந்தும் விதத்தால், இனிது என்ப - இனிதாகுமென்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

க - ரை. ஒருயிரையுங் கொல்லா திருத்தலும், அரசன் அநீதி செய்யாது செங்கோலனா யிருத்தலும், ஒருவரிடத்தும் தீங்குரையாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. ராயன் - ராஜன் என்னும் வடமொழித் திரிபு. கோல்கோடி என்றதனால் செய்யாமை யென்பதற்கு அநீதி செய்யாமை யெனப் பொருள் கூறலாயிற்று. கோல்கோடலாவது - கொடுங்கோலனாதல். கோடுங்கோல் கொடுங்கோல் எனக் குறுக்கல் பெற்று வழங்குகின்றது. (சு)

ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

ப - ரை. ஆற்றும் துணையால் - தமக்கியலு மளவினால், அறம் செய்கை - தருமத்தைச் செய்தல், முன் இனிது - முற்பட இனிதாகும்; பால்பட்டார் - நன்னெறிப்பகுதியிற்பட்டவர், கூறும்-சொல்லுகிற, பயம் மொழி - பயனுடைய சொல்லின், மாண்பு - மாட்சிமையானது, இனிது - இனிதாகும்; வாய்ப்பு உடையர் ஆகி - குற்றமற்றவராகி, வலவைகள் அல்லாரை - (நாணத்தக்க) அலிகளல்லாதவரை, காப்பு அடைய - காவலாகப்பொருந்த, கோடல் - கொள்ளுதல், இனிது - இனிதாகும், எ-று.

க - ரை. தமக்கியன்றவளவால் தருமஞ் செய்தலும், பெரியோரது சொல்லும், வீரரைக் காவலாகவுடைத்தாதலும் இனியவென்பதாம்.

வி - ரை. ஆற்றுந்துணை - ஒல்லுந்துணை; அதாவது இல்லறம் பொருளளவுக் கேற்பவும், துறவறம் யாக்கைநிலைக் கேற்பவுஞ்செய்தல். செய்கை - தொழிற்பெயர். கூறும் பயமொழி மாண்பினிதே யென மேல்வருதலால் பாற்பட்டார் என்பதற்கு நன்னெறிப் பகுதியிற் பட்டவர் எனப்பொருள் கூறலாயிற்று. பயம் - பயன். கோடல்-கொள்ளுதல்; கொள்தல் எனப் பிரியும். (எ)

அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே
பந்த முடையான் படையாண்மை முன்னினிதே
தந்தையே யாயினுந் தானடங்கா னாகுமேற்
கொண்டடையா னாத லினிது.

ப - ரை. அந்தணர் - பிராமணர், ஒத்து உடைமை - வேதத்தையுடையாராயிருத்தல், ஆற்ற மிக இனிது - மிகவு மினிதாகும்; பந்தம் உடையான் - சுற்றத்தை யுடையவன், படை ஆண்மை - படை யெடுத்தாளுந்தன்மை, முன் இனிது - முற்பட இனிதாகும்;

தந்தையே ஆயினும் - தந்தையேயானாலும், தான் அடங்கான் ஆகு மேல் - அவன் அடங்காதவனானால், கொண்டு அடையானாதல் - (மகன்) அவனைச் சேராதவனாயிருத்தல், இனிது-இனிதாகும், எ-று.

க - ரை. அந்தணர் வேதாத்தியயந முடைத்தாதலும், சுற்ற முடையவன் ஆயுதமாளுந் தன்மையும், தந்தையாயினும் கொடிய னானால் அவனைச் சேராதிருத்தலும் இனியவென்பதாம்.

வி - ரை. அந்தணர் - அழகிய தட்பத்தினை யுடையார் என எதுப்பெயராதலால், அருளுடையார் எனவும் பொருள்படும்;படவே ஓத்துடைமை அருளுடைமை முதலிய வேதமார்க்க முடைமை யென்க. தந்தை-தன்றந்தையென்பதன் மரூஉ. அடைதல்-சேர்தல்.

[பஃறொடைவெண்பா.]

ஊருங் கலிமா வுர னுடைமை முன்னினிதே
தாரணி மன்னர் தமக்குற்ற போர்க்களத்துக்
கார்வரைபோல் யானைக் கதங்காண்டன் முன்னினிதே
யார்வ முடையவ ராற்றவு நல்லவை
பேதுறார் கேட்ட லினிது.

ப - ரை. ஊரும் - தாம் நடத்துகிற, கலிமா - மிக்க குதிரை, உரன் உடைமை-வலியுடைமை, முன் இனிது-முற்பட இனிதாகும்; தார் அணி - மாலையை யணிந்த, மன்னர் - அரசர், தமக்கு - தங்க ளுக்கு, உற்ற - நேரிட்ட, போர்க்களத்து - யுத்தபூமியில், கார் வரைபோல் - கரியமலைபோலத் தோன்றுகிற, யானை - யானையின், கதம் - கோபத்தை, காண்டல் - காணுதல், முன் இனிது - மிகவு மினிதாகும்; ஆர்வம் உடையவர் - (எல்லா வுயிர்களின்மீதும்) அன் புடையவர், ஆற்றவும் நல்லவை - மிகவும் நல்ல கேள்விகளை, பேது றார் - மயங்காமல், கேட்டல் - சிரவணஞ் செய்தல், இனிது - இனி தாகும், எ-று.

க - ரை. குதிரைவலி யுடைத்தாதலும், அரசர் தமது யுத்த பூமியில் யானையின் கோவத்தைக் காண்டலும், எல்லாவுயிர்களின் மேலும் அன்புடையவர் நல்ல கேள்விகளைக் கேட்டலும் இனிய வென்பதாம்.

வி - ரை. ஊர்தல் - நடத்துதல். உரம் - உரன் எனப் போலி யாயிற்று. தாரணி மன்னர் என்பதற்கு உலகத்தை யாளுகின்ற அரசர் என்றுரைப்பினுமாம். ஆர்வம் - அன்பு. பேதுறூர் முற்றெச்சம். பேதுறு - பகுதி, பேதுறல் - மயங்கல். (க)

தங்க ணமர்வுடையார் தாம்வாழ்தன் முன்னினிதே
யங்கண் விசும்பி னகனிலாக் காண்பினிதே
பங்கமில் செய்கைய ராகிப பரிந்தியார்க்கு
மன்புடைய ராத லினிது.

ப - ரை. தம் கண் - தம்மிடத்து, அமர்வு உடையார் - சேர்த லுடையார், தாம் வாழ்தல் - தாம் வாழ்ந்திருத்தல், முன் இனிது - மிகவுமினிதாம்; அம் கண் - அழகிய இடத்தையுடைய, விசும்பில் - ஆகாயத்திலுள்ள, அகல் - அகன்ற, நிலா - சந்திரனை, காண்பு - காண்டல், இனிது - இனிதாகும்; பஙகம் இல் - பழுதில்லாத, செய் கையர் ஆகி - செய்கை யுடையவராகி, பரிந்து - இரஙகி, யார்க்கும் - எல்லாரிடத்தும், அன்பு உடையர் ஆதல் - அன்புடையாராயிருத்தல், இனிது - இனிதாகும். எ-று.

க - ரை. தம்மைச் சேர்ந்தவர் செல்வராயிருத்தலும், ஆகாயத்தி லுள்ள சநதிரனைத் தரிசித்தலும், எல்லாரிடத்தும் அன்புடையாரத லும இனியவென்பதாம்.

வி - ரை. அமர்வு - விருப்பம் எனினுமாம். பங்கமில் செய்கை - நற்செய்கை. பரிதல் - இரங்கல். யார்க்கும்-உருபுமயக்கம். காண்பு - தொழிற்பெயர். தம்கண் என்பதில் கண்-எழனுருபு. (௧0)

கடமுண்டு வாழாமை காண்ட லினிதே
நிறைமாண்பில் பெண்டிரை நீக்கலினிதே
மனமாண்பி லாதாரை யஞ்சி யகற
லெனைமாண்பு தானினிது நன்கு.

ப - ரை. கடம் உண்டு வாழாமை - கடன்பட் டுண்டுவாழாமையை, காண்டல் - காணுதல், இனிது - இனிதாகும்; நிறை - நிறைந்த, மாண்பு இல் - மாட்சிமைக்குணங்க ளில்லாத, பெண்டிரை - மனைவியரை, நீக்கல் - நீக்கிவிடுதல், இனிது - இனிதாகும்; மனம் - மனத்தின்கண், மாண்பு - மாட்சிமைக்குணங்கள், இலாதாரை - இல்லாதவரை, அஞ்சி அகறல் - பயந்து விலகிவிடுதல், எனை மாண்பு - எவ்வகையாகிய மாட்சியிலும், இனிது நன்கு - மிகவும் இனிதாகும், எ-று.

க - ரை. கடன்பட்டு உயிர் வாழாமையும், மனைமாட்சியில்லாத மனைவியை நீக்கிவிடுதலும், வஞ்சகரைவிட்டு நீங்குதலும் இனிய வென்பதாம்.

வி - ரை. கடம் - கடன் என்பதன் போலி. வாழாமை - எதிர்மறைத் தொழிற்பெயர். நிறைமாண்பு - நிறைந்த மாட்சிமைக் குணங்கள்; அவை துறந்தார்ப்பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டருளுடைமையும் முதலிய நற்குணங்களும், வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்க ளறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலிய நற்செய்கைகளுமாம். மனமாண்பு - அருள் அன்பு முதலாயின. மனமாண்பிலாதார் என்றதனால் வஞ்சகர் என்றுரைத்துக்கொள்க. அகறல் - அகல்தல். இலாதாரை அகறல் என வியையும். (கக)

அதர்சென்று வாழாமை யாற்ற வினிதே
குதர்சென்று கொள்ளாத கூர்மை யினிதே

யுயிர்சென்று தான்படினு முண்ணார்கைத் துண்ணாப்
பெருமைபோற் பீடுடைய தில்.

ப - ரை. அதர் சென்று - வழிகட்டிப்பறித்து, வாழாமை-(அதனால்) உயிர் வாழாதிருத்தல், ஆற்ற இனிது - மிகவு மினிதாகும்; குதர் சென்று - நெறிதப்பி, கொள்ளாத - யாதானு மோர்நூற்குப் பொருள் கொள்ளாத, கூர்மை - அறிவுநுட்பம், இனிது - இனிமையாகும்; உயிர்சென்று படினும்-உயிர் (பசியால்) நீங்கிவிடுவதா யிருப்பினும், உண்ணார் கைத்து - உண்ணத்தகாதவருடைய கைப்பொருளை, உண்ணா - உண்ணாத, பெருமைபோல் - மாட்சிமைபோல், பீடு உடையது இல் - பெருமையுடையது வேறொன்று மில்லை, எ-று.

க - ரை. வழிபறித்து வாழாமையும், நூற்பொருளை யுள்ளபடி யறியும் அறிவு நுட்பமும், உயிர் நீங்கநேரினும் உண்ணத்தகாதவருடைய கைப்பொருளை யுண்ணாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. அதர் செல்லுதல் பறித்தற்காதலால், அதர்சென்று என்பதற்கு வழிகட்டிப் பறித்து என்று பொருள் கூறலாயிற்று. குதர் - தப்புவழி. உண்ணார்கைத் துண்ணாப்பெருமை யெனமேல் வருதலால், உயிர் சென்று தான்படினும் என்புழி பசியாலென ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. (கஉ)

குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி யினிதே
மயலிக ளல்லராய் மாண்புடையார்ச் சேருந்
திருவுந் தீர்வின்றே லினிது.

ப - ரை. குழவி - மக்கள், பிணிஇன்றி - நோயில்லாமல், வாழ்தல் - வாழ்ந்திருத்தல், இனிது - இனிதாகும்; கழறும் - உரத்துப்

பேசுகிற, அவை - சபையார்க்கு, அஞ்சான் - பயப்படாதவனது, கல்வி - கல்வியானது, இனிது - இனிதாகும்; மயலிகள் அல்லர் ஆய் - மயக்கமுடையவ ரல்லாதவராகி, மாண்பு - மாட்சிமைக் குணங்களை, உடையார் - உடையவராகிய பெரியோரை, சேரும் - அடைகிற, திருவும் - பாக்கியமும், தீர்வு இன்றேல் - நீங்குத லில்லையாயின், இனிது - இனிதாகும், எ-று.

க-ரை. குழந்தைகள் நோயின்றி வாழ்தலும், சபைக்கஞ்சாதவனது கல்வியும், பெரியாரைச் சேர்தலும் இனிய வென்பதாம்.

வி - ரை. குழவி - ஈன்றணிமையுடைய ஆண்பெண் மக்களுக்குப் பொதுப்பெயர். கழறுதல் - பேசுதல். மயலிகள் - மயக்கமுடையவர்கள். திரு - செல்வம். தீர்வு - தொழிற்பெயர். இன்றேல் என்பதில் எல் எனின் என்பதன் மரூஉ. (கந)

மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமை தானடங்கி வாழ்வினிதே
யூன மொன்றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

ப - ரை. மானம் அழிந்தபின் - மானங்கெட்ட பின்பு, வாழாமை - உயிர்வாழாமை, முன் இனிது - மிகவு மினிதாகும்; தானம் - (தான்வாழும்) இடம், அழியாமை - கெடாதவகை, தான் அடங்கி வாழ்வு-தான் அடக்கமுடையனாய் வாழ்தல், இனிது - இனிதாகும்; ஊனம் ஒன்று இன்றி - குற்றம் சிறிது மில்லாமல், உயர்ந்த பொருள் உடைமை - சிறந்த திரவியமுடைத்தாதல், மானிடவர்க்கு எல்லாம் - மனிதருக்கெல்லாம், இனிது - இனிதாகும், எ-று.

க - ரை. மானங்கெட்டு வாழாமையும், தான் வாழுமிடங் கெடாதவகையாய் வாழ்தலும், நல் வழியில் வந்த பொருளுடைமையும் இனியவென்பதாம்.

வி - ரை. மானமழிந்த பின் வாழாமை-உயிர்விடுதல். தானம்-இடம். மாணிடவர் - மநுவழியில் வந்தவர். (கச)

குழவி தளர்நடையைக் காண்ட லினிதே
யவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே
வினையுடையான் வந்தடைந்து வெய்துறும்போழ்து
மனனஞ்சா னாக லினிது.

ப - ரை. குழவி - மக்களுடைய, தளர் நடையை - தளர்ந்த நடையை, காண்டல் - காணுதல், இனிது - இனிதாகும்; அவர் - அந்த மக்களுடைய, மழலை - மழலைச் சொற்களை, கேட்டல் - காதாரக் கேட்டலானது, அமிழ்தின் - அமுதம்போல, இனிது - இனிதாகும்; வினையுடையான் - வினைக்குரியவன், வந்து அடைந்து - வந்து சேர்ந்து, வெய்துறும் போழ்து - தான் வெப்பமடையும் போதில், மனம் அஞ்சான் ஆகல் - மனமஞ்சாதவனா யிருத்தல், இனிது- இனிதாகும், எ-று.

க - ரை. மக்களுடைய தளர் நடையைக் காண்டலும், அவரது மழலைச் சொல்லைக் கேட்டலும், பகைவன் வந்தபோது மனமஞ்சாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. தளர்நடை - துவணடை. மழலை - நிரம்பா மென் சொல். அமிழ்தின் என்பதில் இன் ஐந்தாவத னுறழ்பொருளில் வந்ததெனக்கொண்டு அமிர்தத்தினும் எனப் பொருள் கூறினுமாம். மனன்-மனம் என்பதன் போலி. மனனஞ்சானுதலாவது மனவுறுதி கெடாதிருத்தல் (தைரியமாயிருத்தல்). (கரு)

பிறன்மனை பின்னோக்காப் பீடினி தாற்ற
வறனுழக்கும் பைங்கூழ்க்கு வான்சோர் வினிதே
மறமன்னர் தங்கடையின் மாமலைபோல் யானை
மதமுழக்கங் கேட்ட லினிது.

ப - ரை. பிறன் - பிறனது, மனை-மனையாளை, பின் நோக்கா-பின்பாராத, பீடு - பெருமை, ஆற்ற இனிது - மிகவுமினிதாம், அறல் உழக்கும் - நீரின்பொருட்டு வருந்துகிற, பைங் கூழ்க்கு - பயிர்களுக்கு, வான் சோர்வு - மழைபெய்தல், இனிது - இனிதாகும்; மறம் - வீரத்தையுடைய, மன்னர் - அரசருடைய, கடையில் - கடைவாயிலில், மா - பெரிய, மலைபோல் - மலையை நிகர்த்த, யானை - யானைகளுடைய, மத முழக்கம்-மதச்செருக்கா லுண்டாகிற முழக்கமானது, கேட்டல் - கேட்கப்படுதல், இனிது - இனிதாகும், எ-று.

க - ரை. ஒருவன் பிறன் மனைவியை விரும்பாத பெருமையும், பயிருக்கு மழைபெய்தலும், அரசர் முற்றத்தில் மதயானை முழக்கமும் இனியவென்பதாம்.

வி - ரை. மனை - இடவாகுபெயர். அறல் - நீர். வான் - இடவாகுபெயர். சோர்வு - தொழிற்பெயர்; பெய்தல் என்பது பொருள். மதமுழக்கம் - மதக்களிப்பான் முழங்கு முழக்கம். (கசு)

கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே
மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே
யெட்டுணை யானு மிரவாது தானீத
லெத்துணையு மாற்ற வினிது.

ப - ரை. கற்றார் முன் - கற்றவர்க்குமுன்பு, கல்வி - தாம் கற்ற கல்வியை, உரைத்தல் - சொல்லி யேற்கச்செய்தல், மிக இனிது - மிகவுமினிதாகும்; மிக்காரை - மேலானவரை, சேர்தல் - அடைதல், மிக மாண - மிக மாட்சிமைப்பட, முன் இனிது - மிகவுமினிதாம்; எள் துணை ஆனும் - எள்ளளவாயினும், இரவாது - இரவாமல், தான் - ஒருவன், ஈதல் - பிறர்க்குக் கொடுத்தல், எத்துணையும் - எல்லா வகையாலும், ஆற்ற இனிது - மிகவு மினிதாகும், எ-று.

க - ரை. ஒருவர் தாம் கற்ற கல்வியைத் தம்மினுங் கற்றார் முன் சொல்லுதலும், பெரியோரைச் சேர்ந்திருத்தலும், இரவாது உயிர் வாழ்தலும், தன்னிடத் திரந்தவர்க்கு இல்லையென்னாது கொடுத்தலும் இனிய வென்பதாம்.

வி - ரை. கற்றார் என்றது தம்மினுங்கற்றாரை. மிக்கார் - கல்வியறி வொழுக்கங்களால் மேம்பட்டவர். துணை - அளவு. இரவாது தானீதலாவது உயிர் நீங்க நேரினும் தான் ஒருவரிடத்துச் சென்றிரவாது தன்னிடத்து வந்திரப்பவர்க்குத் தானில்லையென்னாது இயன்றவளவாகக் கொடுத்தல். (கஎ)

மன்றின் முதுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழும் தவசிகண் மாண்பினிதே
யெஞ்சா விழுச்சீ ரிருமுது மக்களைக்
கண்டொழுதல் காலை யினிது.

ப - ரை. மன்றில் - சபையில், முதுமக்கள் - பெரியோர்கூடி, வாழும் - வாழ்கின்ற, பதி - ஊரானது, இனிது - இனிதாகும்; தந்திரத்தின் - நூல்வழியாலே, வாழும் - வாழ்கின்ற, தவசிகள் - தவசிகளுடைய, மாண்பு - பெருமை, இனிது - இனிதாகும்; எஞ்சா - குறையாத, விழு சீர்-பெருஞ்சிறப்பினையுடைய, இருமுது மக்களை - தாய்தந்தையரை, காலை கண் - காலைப்பொழுதில், தொழுதல்-வணங்குதல், இனிது - இனிதாகும், எ-று,

க - ரை. பெரியோர்கள் வாழுஞ்சபையுள்ளவூரில் இருத்தலும், வேதநூனெறியி லொழுகும் தவசிகளுடைய பெருமையும், காலைப் பொழுதில் தாய்தந்தையரை வணங்கலும் இனிய வென்பதாம்.

வி - ரை. மன்று - சபை. முதுமக்கள் - வயதினாலும் அறிவினாலும் முதிர்ந்த மக்கள். தந்திரம் - நூல் (வேத நூல்). தவசி - தவஞ்

செய்வோன். கண்டொழுதல் என்பதற்கு, கண்ணினால் தரிசித்தல் எனினு மமையும். (கஅ)

நட்டார் புறங்கூறான் வாழ்த னனியினிதே
பட்டாங்கு பேணிப் பணிந்தொழுகன் முன்னினிதே
முட்டில் பெரும்பொரு ளாக்கியக்கான் மற்றது
தக்குழி யீதலே நன்று.

ப - ரை. நட்டார் - நட்டவரை, புறங்கூறான் - பழிகூறாதவனாய், வாழ்தல் - வாழ்வது, நனி இனிது - மிகவும் இனிதாகும்; பட்டாங்கு - உண்மைநூற்பொருளை, பேணி - விரும்பி, பணிந்து-யாவரையும் வணங்கி, ஒழுகல் - ஒழுகுதல், முன் இனிது - மிகவும் இனிதாகும், முட்டு இல் - குறைவில்லாத, பெரும் பொருள் - மிக்கபொருளை, ஆக்கியக்கால் - தேடினகாலத்தில், அது-அப்பொருளை, தக்குழி - தகுந்தவிடத்தில், ஈதல் - கொடுத்தல், இனிது-இனிதாகும், எ - று.

க - ரை. நட்டாரைப் புறங்கூறாமையும், உண்மை நூற்பொருளை விரும்பி எல்லார்க்கும் பணிவாயொழுகலும், பொருளுண்டாயின் தகுதியுடையார்க் கீதலும் இனியவென்பதாம்.

வி - ரை. நட்டார்-உறவினர்; அன்றிச் சிநேகிதர். பட்டாங்கு-உண்மை; அது இங்கு உண்மையைக்கூறும் நூல்களைக் குறித்தது. முட்டு - தடையெனினுமாம். ஆக்குதல் - தேடுதல். தக்க உழி-தகுதியான இடம்; அது தக்குழியென நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. சற்பாத்திரம் என்பது பொருள். (கக)

சலவரைச் சாரா விடுத லினிதே
புலவர்தம் வாய்மொழி போற்ற லினிதே
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாந்
தகுதியால் வாழ்த லினிது.

ப - ரை. சலவரை - வஞ்சகரை, சாரா விடுதல் - சேராது ஒழிதல், இனிது-இனிதாகும்; புலவர் - அறிவுடையாரது, வாய்மொழி, வாய்ச்சொல்லை, போற்றல் - போற்றி யொழுகுதல், இனிது - இனிதாகும்; மலர் - பரந்த, தலை - இடத்தையுடைய, ஞாலத்து-உலகத்தில், மன் - பொருந்திய, உயிர்க்கு எல்லாம் - உயிர்களுக்கெல்லாம், தகுதியான் - தத்தம் தகுதியோடு, வாழ்தல் - ஒழுகுதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. வஞ்சகரைச் சேராமையும், புலவர் வாய்மொழி போற்றலும், தகுதியால் வாழ்தலும் இனியவென்பதாம்.

வி - ரை. சலம் - நீராக்கோவமாதலால் சலவரை யென்பதற்குத் நீராக்கோவமுடையவரை யென்றுரைப்பினுமாம். சாராது என்னும் வினையெச்சத்திறு தொகுத்தலாய் சாரா என நின்றது. புலம் - அறிவு; அதனை யுடையவராதலால் அறிவுடையாரைப் புலவர் என்றார். அவரது மொழிப்பெருமை தோன்ற, 'வாய்மொழி' என்றார். தலை - இடம். தகுதி - முறைமை. (உ0)

பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்தலினிதே
யறம்புரிந் தல்லவை நீக்க லினிதே
மறந்தேயு மாணா மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்த லினிது.

ப - ரை. பிறன் - பிறனது, கை - கையிலுள்ள, பொருள் - பொருளை, வெளவான் - கவர்ந்து கொள்ளாதவனாய், வாழ்தல் - ஒருவன் வாழ்ந்திருத்தல், இனிது - இனிதாகும்; அறம் - தருமத்தை, புரிந்து-செய்து, அல்லவை-பாவங்களை, நீக்கல்-நீக்குதல், இனிது - இனிதாகும்; மறந்தேயும் - மறந்தாயினும், மாணா - மாட்சிமைப்படாத, மயரிகள் - அறிவிலிகளை, சேரா - அடையாத, திறம் - உபாயத்தை, தெரிந்து - தெரிந்துகொண்டு, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. பிறன்பொருளை விரும்பாது வாழ்தலும், தருமஞ்செய்து பாவத்தை யொழித்தலும், மறந்தாயினும் அறிவிலிகளைச் சேராதிருத்தலும் இனிய வென்பதாம்.

வி - ரை. வெளவான் - முற்றெச்சம்; வெளவல் - கவர்தல். அறம் புரிந்து என்றதையடுத்து அல்லவை யென்றதனால் பாவங்கள் எனப் பொருளுரைக்க லாயிற்று, மயரி-அறிவிலான். சோரத்திறம் - சோரதவுபாயம். (உக)

வருவா யறிந்து வழங்க லினிதே
யொருவர் பங்காகாத வூக்க மினிதே
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது.

ப - ரை. வருவாய் - தன்பொருள் வருவாயை, அறிந்து - தெரிந்துகொண்டு, வழங்கல் - அதற்கேற்ப வழங்குதல், இனிது - இனிதாகும்; ஒருவர் பங்கு ஆகாத - ஒருவருடைய சார்பு ஆகாத, ஊக்கம்-மனவெழுச்சி, இனிது - இனிதாகும்; பெருவகைத்து ஆயினும் - பெரும்பயனுடைய தாயினும், பெட்டது - தாம் நினைத்த காரியத்தை, செய்யார் - ஆராயாது செய்யாதவராய், திரிபு இன்றி - வேறுபாடில்லாமல், வாழ்தல் - வாழ்ந்திருத்தல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. வருவாயறிந்து வழங்கலும், நடுவுநிலையா யிருத்தலும், பெரும்பயனுடைய காரியங்களையும் ஆராயாது செய்யாது இயற்கையாய் வாழ்தலும் இனிய வென்பதாம்.

வி - ரை. வருவாய் - வருவழி (வருமானம்). வருவாயறிந்து வழங்கல் - இல்லறத்திருப்பான் பொருளளவுக் கேற்ப வழங்கல்; வழங்கல் - கொடுத்தல். ஒருவர் பங்காகாமை - நடுவுநிலைமை, பெட்

டவை - விரும்பினவை. செய்யார் - முற்றெச்சம். திரிபின்மை - மாறுபடாமை (இயற்கை). (உஉ)

காவோ டறக்குளந் தொட்டன் மிகவினிதே
யாவோடு பொன்னீத லந்தணர்க்கு முன்னினிதே
பாவமு மஞ்சாராய்ப் பற்றுந் தொழின்மொழி
சூதரைச் சோர்த லினிது.

ப - ரை. காவோடு - சோலையோடு, அறக்குளம் - தருமத்திற்குக் குளத்தையும், தொட்டல் - வெட்டுதல், மிக இனிது - மிக இனிதாகும்; அந்தணர்க்கு - பிராமணர்க்கு, ஆவோடு - பசுவோடு, பொன்-பொன்னையும், ஈதல்-தானமாகக்கொடுத்தல், முன் இனிது-மிகவும் இனிதாகும்; பாவமும் - பாவஞ்செய்தற்கும், அஞ்சாராய் - பயப்படாதவராகி, பற்றும் - தொடர்கின்ற, தொழில் - தொழிலையும், மொழி - சொல்லையுமுடைய, சூதரை - வஞ்சகரை, சோர்தல் - கைவிடுதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. சோலைவைத்தலும், தருமத்துக்குக் குளமெடுத்தலும், அந்தணர்க்குக்கோதாந ஹிரண்யதாநங்களைச் செய்தலும், பாவத்துக் கஞ்சாத வஞ்சகரைக் கைவிடுதலும் இனிய வென்பதாம்.

வி - ரை. கா - தோப்பு எனினுமாம். அறக்குளம் - பலருக்கும் உதவும்படி தருமங்கருதி யெடுத்தகுளம். தொடுதல்-தோண்டுதல். சூது - வஞ்சனை; அதனையுடையவர் சூதர். சோர்தல் - கைவிடுதல்.()

வெல்வது வேண்டி வெஃகுளாதா னோன்பினிதே [தே
யொல்லும் துணையுமொன் றுய்ப்பான் பொறையினி
யில்லது காமுற் றிரங்கி யிடர்ப்படார்
செய்வது செய்த லினிது.

ப - ரை. வெல்வது - தான்வெல்வதையே, வேண்டி - விரும்பி, வெகுளாதான் - கோபியாதவனது, நோன்பு - தவம், இனிது - இனிதாகும்; ஒல்லும் துணையும் - தனக்கியன்றவளவும், ஒன்று - தானெடுத்துக்கொண்ட ஏதேனும் ஒரு கருமத்தை, உய்ப்பான் - நடத்துவானது, பொறை இனிது - பொறுமையினிதாகும்; இல்லது-தனக்கில்லாத பொருளை, காமுற்று - விரும்பி, இரங்கி - அது கிடையாமையால் இரங்கி, இடர்ப்படார் - துன்பப்படாதவராகி, செய்வது - செய்யத்தகுந்த காரியத்தை, செய்தல் - செய்துமுடித்தல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. தான் வெல்வதையே விரும்பிக் கோவியாதவனது நோன்பும், இயலுமளவும் எடுத்த காரியத்தை நடத்துவோனது பொறுமையும், தமக்கில்லாத தொருபொருளை விரும்பி அது கிடையாமையால் துக்கியாதவராய்த் தாம் செய்யவேண்டியவற்றைச் செய்யுந்திறமையும் இனியவென்பதாம்.

வி - ரை. வெல்வது - வெற்றி. வெகுளல் - கோவித்தல். நோன்பு - பொறுமையுமாம். ஒல்லுதல் - இயலுதல். உய்த்தல் - நடத்தல். காமுறல் - ஒருசொல்; விரும்பல் என்னும் பொருளது; பகுதி- காமுறு. இடர்ப்படார் - முற்றெச்சம். செய்வது செய்தல் - செய்யத்தகுவனவாகிய நன்மைகளையே செய்தல். (உ௪)

ஐவாய வேட்கை யவாவடக்கன் முன்னினிதே
கைவாய்ப் பொருள்பெறினுங் கல்லார்கட் டீர்வினிதே
நில்லாத காட்சி நிறையின் மனிதரைப்
புல்லா விடுத லினிது.

ப - ரை. ஐவாய - ஐந்து வாயில்களையுடைய, வேட்கை அவா - சப்தாதி விஷயங்களாகிய ஆசையை, அடக்கல் - அடக்குதல், முன் இனிது - முற்பட இனிதாகும்; கைவாய் - கையினிடத்து, பொருள்

பெறினும் - பொருளைப் பெற்றாலும், கல்லார்கள் - கல்லாதவரிடத்தையும், தீர்வு - விட்டொழிதல், இனிது - இனிதாகும்; நில்லாத காட்சி நிறை இல் - நிலைபெறாத அறிவு நிறைவில்லாத, மனிதரை - மக்களை, புல்லா - சேராமல், விடுதல் - விட்டொழிதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. ஐம்பொறிகளை வாயில்களாகவுடைய ஐம்புலன்களை யடக்குதலும், பொருள் பெறுவதாயிருப்பினும் கல்லாதவர்களைச் சேராது கைவிடுதலும், நிலைபெறாத அறிவினையுடைய கீழ்மக்களைக் கூடாது ஒழிதலும் இனியவென்பதாம்.

வி - ரை. வாய் - வாயில். ஐவாய - ஐம்பொறிகளை வாயில்களாகவுடைய. ஐம்பொறிகளாவன: மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. சப்தாதி விஷயங்களாவன: சப்த, ஸ்பர்ஸ, ரூப, ரஸ, கந்தங்கள். அவா - விஷயங்களின் மேற்செல்லு மாசை. பெறினும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. கல்லார்கண் தீர்வு என்றமையால் அவரைத் தீர்வு என்பது சொல்லாதே யமையும். தீர்வு-தொழிற் பெயர். காட்சி - அறிவு. புல்லாது என்பது புல்லா என ஈறுதொகுத்தலாயிற்று. (உ௫)

நச்சித் தற்சென்றார் நசைகொல்லா மாண்பினிதே
யுட்கில் வழிவாழா வூக்க மிகவினிதே
யெத்திறத் தானு மியைவ கரவாத
பற்றினிற் பாங்கினிய தில்.

ப - ரை. நச்சி - விரும்பி, தன் சென்றார் - தன்னை யடைந்தவரது, நசை கொல்லா - ஆசையைக் கெடுக்காத, மாண்பு - மாட்சிமையானது, இனிது - இனிதாகும்; உள்கு இல்வழி - மதிப்பில்லாதவிடத்தில், வாழா - வாழாத, ஊக்கம் - மனவெழுச்சியானது, மிக இனிது - மிகவுமினிதாகும்; எத்திறத்தானும் - எவ்வகையாலும்,

இயைவ - கொடுக்கக்கூடுவனவற்றை, கரவாத - ஒளிக்காத, பற்றினில் - இல்வாழ்வுபோல, பாங்கு இனியது - மிக இனியது, இல் - வேறொன்றுமில்லை, எ - று.

க - ரை. தன்னை விரும்பி வந்தவரது விருப்பத்தை நிறைவேற்றுதலும், மதிப்பில்லாதவிடத்தில் வாழாமையும், கொடுக்க இயல்வதை இரப்பவர்க் கொளியாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. நச்சல் - விரும்பல். நசை - விருப்பம். கொல்லல் - அழித்தல். உட்கு - நினைத்தல் (மதித்தல்). கரத்தல் - ஒளித்தல். தன்சென்றார் - இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இயைதல் - இசைதல். இல்வழி - பெயரெச்சத்தொடர். (உசு)

தானங் கொடுப்பான் றகையாண்மை முன்னினிதே
மானம் படவரின் வாழாமை முன்னினிதே
யூனங்கொண் டாடா ருறுதி யுடையவை
கோண்முறையாற் கோட லினிது.

ப - ரை. தானம் கொடுப்பான் - தானஞ் செய்வோனது, தகை ஆண்மை-பேராண்மையானது, முன் இனிது-முற்பட இனிதாகும்; மானம் படவரின் - மானங் கெடவருமாயின், வாழாமை-உயிர் வாழ்ந்திராமை, முன் இனிது - மிகவு மினிதாகும்; ஊனம் கொண்டாடார் - குற்றத்தைக் கொண்டாடாமல், உறுதி உடையவை - உறுதியுடையவாகிய பொருள்களை, கோள்முறையால் - மனத்திற்கொள்ள வேண்டிய முறையினால், கோடல் - கொள்ளுதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. தானங்கொடுப்பவனது பெருமையும், மானமழிந்து உயிர்வாழாமையும், குற்றங் கொள்ளாமல் குணத்தைக் கொள்ளுதலும் இனியவென்பதாம்.

வி - ரை. தானம்-கோதாந பூதாந ஹிரண்யதாநாதிகள். தகை-பெருமை. மானம் படவரின் என்புழி படுதல் கெடுதல் என்னும் பொருளது. கொண்டாடார் - முற்றெச்சம். கோள் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (உ௭)

ஆற்றானை யாற்றென் றலையாமை முன்னினிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே
யாக்க மழியினு மல்லவை கூறாத
தேர்ச்சியிற் றேர்வினிய தில்.

ப - ரை. ஆற்றானை - ஒன்றுஞ் செய்யமாட்டாதவனை, ஆற்று என்று - செய்யென்று, அலையாமை - அவனை வருத்தாமை, முன் இனிது - மிகவு மினிதாகும்; கூற்றம் - யமனானவன், வரவு - வருதலின், உண்மை - உண்மையை, சிந்தித்து - ஆலோசித்து, வாழ்வு - வாழ்தல், இனிது - இனிதாகும்; ஆக்கம் அழியினும்-செல்வம் அழியுமாயினும், அல்லவை கூறாத - பாவம் பயக்குஞ் சொற்களைச் சொல்லாத, தேர்ச்சியின் - தெளிவைப் பார்க்கினும், தேர்வு-தெளித்தறிதற்குரிய, இனியது இல்-இனியதாவது வேறொன்றுமில்லை, எ-று.

க - ரை. செய்யமாட்டாதவனைச் செய்யென்று வருத்தாதிருத்தலும், யமன் வருவானென்கிற வுண்மையை நினைத்து வாழ்தலும், செல்வமழிந்தாலும் பாவம் பயக்குஞ் சொற்களைச் சொல்லாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. ஆற்றான் - செய்யும் வலியில்லான். அலைத்தல் - வருத்தல். வரவு - தொழிற்பெயர். உண்மை - உளதாந்தன்மை. அல்லவை - பாவங்கள். இது திருக்குறள் - இனியவை கூறல் ருக-ஆம் பாட்டு, "அல்லவை தேய வறம்பெருகு நல்லவை, நாடி யினிய சொலின்" என்பதனால் இனிது விளங்கும். (உ௮

கயவரைக் கையிகந்து வாழ்த லினிதே
யுயர்வுள்ளி யூக்கம் பிறந்த லினிதே
யெளிய ரிவரென் றிகழ்ந்துரையா ராகி
யொளிபட வாழ்த லினிது.

(ப-ரை.) கயவரை - கீழ்மக்களை, கையிகந்து - நீங்கி, வாழ்தல்- வாழ்ந்திருத்தல், இனிது - இனிதாகும்; உயர்வு - உயர்தற்குக் காரணமாகிய நற்செயல்களை, உள்ளி - ஆலோசித்து, ஊக்கம் பிறத்தல்- (அவற்றின்கண்) மனவெழுச்சி யுண்டாதல், இனிது - இனிதாகும்; இவர் எளியர் என்று-இவர் எளியாரென்று, இகழ்ந்து உரையாராகி - (அவரை) அவமதித்துப் பேசாதவராகி, ஒளிபட - புகழுண்டாம்படி, வாழ்தல் - வாழ்ந்திருத்தல், இனிது - இனிதாகும், எ - று.

க-ரை. கீழ்மக்களை நீங்கி வாழ்ந்திருத்தலும், உயர்வான காரியங்களை யாலோசித்து அவற்றில் ஊக்கத்தோ டிருத்தலும், எளியவரை அவமதித்துப் பேசாதவராய்ப் புகழ்பட வாழ்தலும் இனியவென்பதாம்.

வி-ரை. கயவர்-கயமையென்னும் பண்படியாகப் பிறந்த பெயர்; கயமை - கீழ்மை. கையிகத்தல் - ஒருசொல்; நீங்குதல் என்பதுபொருள். உள்ளல் - ஆலோசித்தல். ஒளியென்பது இங்குப் புகழ் என்னும் பொருள்பட்டது. (உக)

நன்றிப் பயன்றூக்கி வாழ்த னனியினிதே
யன்றக் கொடும்பா டுரையாத மாண்பினிதே
யன்றறிவார் யாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியி னன்கினிய தில்.

ப-ரை. நன்றி - ஒருவர்செய்த உதவியின், பயன் - பிரயோசனத்தை, தூக்கி - ஆராய்ந்து, வாழ்தல் - வாழ்ந்திருத்தல், நனி

இனிது - மிகவுமினிதாகும்; மன்றம் - சபையிலிருந்து, கொடும்பாடு உரையாத-ஒருதலைவழக்குப் பேசாத, மாண்பு-மாட்சிமை, இனிது - இனிதாகும்; அன்று - (வைத்த) அப்பொழுது, அறிவார்யார் என்று - அறிபவர் யாரென்று, அடைக்கலம் - ஒருவன் அடைக்கலமாக வைத்தபொருளை, வௌவாத - கவர்ந்துகொள்ளாத, நன்றியின் நன்கு - நன்மையினும் நன்மையாகிய, இனியது இல் - இனிதாவது வேறொன்றுமில்லை, எ - று.

க-ரை. ஒருவர் செய்த வுதவிப்பயனை மறவாது வாழ்தலும், சபையிலிருந்து ஒருதலைவழக்குப் பேசாத பெருமையும், வைத்தபோ தறிவாரில்லையென்று ஒருவன் வைத்த அடைக்கலப் பொருளைக் கவர்ந்துகொள்ளாமையும் இனியவென்பதாம்.

வி-ரை. நன்றி-நன்மை (உதவி). தூக்கல் - ஆராய்தல். கொடு ம்பாடு - கொடுமை, (ஒருதலைவழக்குப் பேசுதல்). அடைக்கலம் - ஒருவன் கொண்டுவந்து ஒளித்துவைத்தபொருள். (௩ ௦)

அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே
கடங்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே
சிறந்தமைந்த கேள்வியா ராயினு மாராய்ந்
தறிந் துரைத்த லாற்ற வினிது.

ப-ரை. அடைந்தார்-தம்மை யடுத்தவர், துயர் கூரா - துன்பப் படாமைக் கேதுவாகிய, ஆற்றல் - செய்கையுடைத்தாதல், இனிது - இனிதாகும்; கடம் கொண்டும் - கடன் வாங்கியாயினும், செயவன - செய்யத்தகுந்த காரியங்களை, செய்தல் - செய்தலானது, இனிது - இனிதாகும்; சிறந்து அமைந்த - மிகவும் நிறைந்த, கேள்வியர் ஆயி னும் - கேள்வியுடையாராயினும், ஆராய்ந்து அறிந்து - பலவகையா லும் ஒரு காரியத்தை ஆலோசித்து இதுவே சரியென்று தெரிந்து கொண்டு, உரைத்தல் - சொல்லுதல், ஆற்றஇனிது-மிகஇனிதாகும், எ-று.

௧ - ரை. தம்மை யடுத்தவரது துன்பத்தை யொழித்தலும், கடன்வாங்கியுஞ் செய்யவேண்டுவனவற்றைச் செய்தலும், மிகச்சிறந்த கேள்வியராயிருப்பினும் யாதொரு காரியத்தையும் பலவகையாலு மாராய்ந்து சொல்லுதலும் இனியவென்பதாம்.

வி - ரை. துயர்கூரா என்பதற்கு துன்பப்படாமைக் கேதுவாகிய காரியங்கள் என்றுரைப்பினுமாம், அவை அவர்கட்கு வேண்டுவன வுதவிக்காப்பாற்றல். செய்வன செய்தல் - தவறாமற் செய்யத்தகுந்த காரியங்களைச் செய்தேவிடுதல். செய்யத்தகுந்த காரியங்களாவன: இருமுது குரவருடைய சிரார்த்தாதிகளும், மற்றுஞ் செய்யவேண்டிய உபவாசாதிகளும். (௩௧)

கற்றறிந்தார் கூறுங் கருமப்பொரு ளினிதே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன்னினிதே
தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப
பற்றிமையிற் பாங்கினிய தில்.

ப - ரை. கற்று - பலநூல்களையுங் கற்று, அறிந்தார் - அவற்றினுட்பொருளை யறிந்தவர், கூறும் - சொல்லுகிற, கருமப்பொருள் - உறுதிப் பொருளானது, இனிது-இனிதாகும்; பற்று அமையா-குடிகளிடத்து அன்பில்லாத, வேந்தன் கீழ் - அரசனது குடையின்கீழ், வாழாமை - வாழாத தன்மையானது, முன் இனிது - மிகவுமினிதாகும்; தெற்றெனல் இன்றி - வறுமையால் தெளிவுகுன்றி, தெளிந்தாரை - தம்மை யாதரிப்பவரென்று தேர்ந்தடைந்தவரை, தீங்கு ஊக்கா - தீங்குசெய்ய நினையாத, பற்றிமையின் - அன்புடைமையினும், பாங்கு இனியது - மிகவுமினியது, இல் - வேறொன்றுமில்லை, எ - று.

௧ - ரை. அறிவு நூல்களைக் கற்றறிந்தவர் சொல்லும் உறுதிப் பொருளும், குடிகளிடத் தன்பில்லாத அரசன்கீழ் வாழாமையும்,

வறுமையாற் றளர்ந்து தம்மை வந்தடைந்தவரை அன்போடு காப்பா ற்றுதலும் இனியவென்பதாம்.

வி - ரை. உறுதிப்பொருள் கூறுவோராதலால் அவர் கற்றநூல் கள் அறிவு நூல்களென்பது தானேபெறப்பட்டது. பற்று - அன்பு. வேந்தன்கீழ் என்றது வேந்தனது குடைநிழலின்கீழ் என்றபடி. தெற் றெனல் - தெளிவாயிருத்தல். ஊக்கல் - செய்தல். பற்றிமை - அன் புடையாராந் தன்மை. (௩௨)

ஊர்முனிவ செய்தொழுகா வூக்க மிகவினிதே
தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே
வாண்மயங்கு மண்டமருண் மாறா மறமன்னர்
தானை தடுத்த லினிது.

ப - ரை. ஊர் - ஊரிலுள்ளார், முனிவ - வெறுக்கத்தக்க தீச் செயல்களை, செய்து ஒழுகா - செய்து அத்தீநெறிக்கண்ணே யொழு காத, ஊக்கம்-மனவுறுதி, மிக இனிது-மிகவு மினிதாகும்; தானே - வேறொரு தடையின்றித் தனக்குத்தானே, மடிந்து இரா - சோம்பி யிராத, தாளாண்மை - முயற்சியானது, முன் இனிது - மிகவுமினி தாகும்; வாள் - வாளாயுதங்கள், மயங்கு-நெருங்கிக்கலக்கிற, மண்டு அமருள் - மூண்டபோரினின்றும், மாறா - மீளாத, மற மன்னர் - வீரத்தையுடைய அரசரது, தானை - சேனையை, தடுத்தல் - விலக்கு தல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. ஊரிலுள்ளார் வெறுத்தற்குரிய தீச் செயல்களைச் செய் யாமையும், சோம்பியிராமல் முயற்சியோடிருத்தலும், இருவேந்தரது பகை தணித்தலும் இனியவென்பதாம்.

வி - ரை. ஊர் என்றது ஊரிலுள்ளாரை யாதலால் இடவாகு பெயர். மடிதல் - சோம்பியிருத்தல். மயங்குதல் - கலத்தல். அமர் - சண்டை. மறமன்னர் தானை தடுத்தலாவது - அரசரிருவர் பகை

கொண்டு போர்செய்யுங்கால் அவ்விருவர்க்கிடையே சென்று போரை விலக்கி அவரைச் சமாதானப்படுத்தல். (௩௩)

எல்லியம் போது வழங்காமை முன்னினிதே [தே
சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதன் மாண்பினி
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது.

ப - ரை. எல்லியம்போது - இராக்காலத்தில், வழங்காமை-சஞ்சரியாதிருத்தல், முன் இனிது-மிகவுமினிதாகும்; சொல்லுங்கால் - (ஒன்றைச்) சொல்லுமிடத்து, சோர்வு இன்றி - மறப்பில்லாமல், சொல்லுதல் - சொல்லுதலினது, மாண்பு - மாட்சிமை, இனிது - இனிதாகும்; புல்லிக்கொளினும்-வலியவந்து தழுவிக்கொண்டாலும், பொருள் அல்லார் - ஒரு பொருளாக மதிக்கப்படாதவராகிய கீழ்களது, கேண்மை - சிநேகத்தை, கொள்ளா - ஏற்றுக்கொள்ளாமல், விடுதல் - விட்டொழிதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. இராக்காலத்தில் வெளியில் சஞ்சரிக்காதிருத்தலும், ஒன்றைப் பேசும்போது முன்பின் செய்திகளை மறவாமற் பேசுதலும், வலியவந்து தழுவிக்கொண்டாலும் கீழ்களது சிநேகத்தைக் கொள்ளாது விடுதலும் இனியவென்பதாம்.

வி - ரை. எல்லி-இராத்திரி வழங்குதல்-சஞ்சரித்தல். சோர்வு-மறதி. புல்லுதல் - தழுவுதல். பொருளல்லார்-ஒரு பொருட்டன்மையுடைய ரல்லாதவர் (ஒன்றுக்கும் பற்றாதவர்). கேண்மை - கேளாந்தன்மை, (சிநேகம்). கொள்ளாது விடுதல் என்பது கொள்ளா விடுதல் என நிலைமொழியீறு தொகுத்தல் பெற்றது. (௩௪)

ஒற்றினா லொற்றிப் பொருடெரியு மாண்பினிதே
முற்றான் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே

பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றிவேல் வேந்தற் கினிது.

ப - ரை. ஒற்றினால்-ஒற்றரைக்கொண்டு, ஒற்றி-புறத்தே நிக ழுஞ் செயல்களை யறிந்து, பொருள் - உண்மைப்பொருளை, தெரியும் - தெரிந்து செய்கிற, மாண்பு - மாட்சிமை, இனிது - இனிதாகும்; முன் - (ஒருகாரியத்தைச் செய்தற்கு) முன்பே, தான் தெரிந்து - தான் ஆராயவேண்டுவனவற்றை ஆராய்ந்தறிந்து, முறைசெய்தல் - செய்யவேண்டிய கிரமப்படியே செய்தல், முன் இனிது - மிகவு மினிதாகும்; பற்று இலன் ஆய் - ஒருவர்மீது பற்றில்லாதவனாகி, பல் உயிர்க்கும் - பல வுயிர்களுக்கும், பாத்துற்று - இரங்கி, பாங்கு அறிதல்-நன்மையை யறிதல், வெற்றி வேல் - வெற்றிவேலைத் தாங்கிய, வேந்தற்கு - அரசனுக்கு, இனிது - இனிதாம், எ - று.

க - ரை. ஒற்றரைக்கொண்டு புறத்து நிகழுஞ் செய்திகளைத் தெரிந்துகொண்டு உண்மை கண்டு அதற்கேற்ப நடத்துதலும், செய்தற்குமுன்னே யாலோசித்துத் தெரிந்துகொண்டு முறைசெய்தலும், பக்ஷபாதமில்லாமல் எல்லாரையு மொப்பநாடுதலும் அரசனுக்குஇனியவா மென்பதாம்.

வி - ரை. ஒற்று - பண்பாகுபெயர். முறைசெய்தல்-செங்கோல் செலுத்தல். பற்று - அன்பு. பாத்துறல் - இரங்கல். பாங்கு-நன்மை. வெற்றி - சயம்.

(கூ)

ஒளவித் தழுக்கா றுரையாமை முன்னினிதே
செவ்வியராய்ச் செற்றுச் சினங்கடிந்து வாழ்வினிதே
கவ்வித்தாங் கொண்டுதாங் கண்டது காமுற்று
வெளவா விடுத லினிது.

ப - ரை. ஒளவித்து - மனங்கோணி, அழுக்காறு-பொறாமைச் சொற்களை, உரையாமை - சொல்லாமை, முன் இனிது - மிகவுமினி

தாகும்; செவ்வியர் ஆய் - மனச் செப்ப முடையவராய், சினம்-கோவ த்தை, செற்று-கோபித்து, கடிந்து-நீக்கி, வாழ்வு-வாழ்தல், இனிது - இனிதாகும்; கவ்விக்கொண்டு - உறுதியாய்ப் பற்றிக்கொண்டு, தாம்-தாங்கள், கண்டது - கண்ட பொருளை, காமுற்று - விரும்பி, வௌவா - அதனைக் கவர்ந்துகொள்ளாது, விடுதல் - ஒழிதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. பிறராக்கங்கண்டு பொறாமை பேசாமையும், கோவமில்லாமல் நடுவுநிலை யுள்ளவராயிருத்தலும், பிறர்பொருளைக் கவர்ந்துகொள்ள இச்சியாமையும் இனியவென்பதாம்.

வி - ரை. ஔவித்து உரையாமையெனவியையும். ஔவித்தல் - மனக்கோட்ட முடையராதல். செற்று என்பதற்குப் பகுதி செறு. கவ்வல் - உறுதியாய்ப்பற்றல். வௌவாது என்பது வௌவா என ஈறுதொகுத்த லாயிற்று. வௌவல் - கவர்தல். (௩௬)

இளமையை மூப்பென் றுணர்த லினிதே
கிளைஞர்மாட் டச்சின்மை கேட்ட லினிதே
தடமென் பணைத்தோட் டளிரிய லாரை
விடமென் றுணர்த லினிது.

ப - ரை. இளமையை - ஒருவன் தன் இளமைப்பருவத்தை, மூப்பு என்று-முதுமைப்பருவமென்று, உணர்தல்-அறிதல், இனிது-இனிதாகும்; கிளைஞர் மாட்டு - உறவினரிடத்து, அச்சு இன்மை - அஞ்சுதற் கேதுவாகிய துன்பமில்லாமையை, கேட்டல் - கேட்குதல், இனிது - இனிதாகும்; தடம் மென்பணை தோள்-பெரிய மெல்லிய பருத்ததோள்களையும், தளிர் இயலாரை - தளிர்போன்ற சாயலையும் உடையமாதரை, விடம் என்று உணர்தல்-விஷமென்றறிதல், இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. ஒருவன் தனது இளமைப்பருவத்தை முதுமைப்பருவமாக நினைத்தலும், உறவினரது க்ஷேமத்தைக்கேட்டலும், மாதரை நஞ்சென்றறிதலும் இனியவென்பதாம்.

வி - ரை. இளமை நீரிற்குமிழி போல்வதாதலால் 'இளமையை மூப்பென்றுணர்தலினிது' என்றும், உறவினர் நிர்ப்பயராய் வாழ்தலைக் கேட்டல் ஒருவனுக்கின்பந்தருவதாதலால் 'கிளைஞர்மாட்டச்சின்மை கேட்டலினிது' என்றும், ஆடவரைக் கொல்லுதற் கமைந்தவராதலால், 'தடமென்பணைத் தோட்டளிரிய லாரைவிடமென்றுணர்தலினிது' என்றும் கூறினார். மூப்பு - தொழிலாகுபெயர்; மூ - பகுதி. அஞ்சு - முதனிலைத்தொழிற்பெயர்; அது அச்சு என வலித்தல்பெற்றது. பணைத்தோள் - மூங்கில்போலுந் தோள் எனினுமமையும். இயல் - சாயல் (நிறம்). (கஎ)

சிற்றா ளுடையான் படைக்கல மாண்பினிதே
நட்டா ருடையான் பகையாண்மை முன்னினிதே
யெத்துணையு மாற்ற வினிதென்ப பால்படுங்
கற்றா வுடையான் விருந்து.

ப - ரை. சிற்றாள் உடையான்-சிற்றாளையுடையவனது, படைக்கலம் - ஆயுதம், மாண்பு - மாட்சிமையாக, இனிது - இனிதாகும்; நட்டார் உடையான் - சுற்றத்தாரையுடையவன், பகை ஆண்மை - பகைவரோடு கொள்பகையை யாளுந்தன்மை, முன் இனிது - மிகவுமினிதாகும்; பால்படும் - பால்சொரிகிற, கற்றா உடையான் - கறவற்பசுவையுடையவனது, விருந்து - விருந்தானது, எத்துணையும் - எவ்வகையாலும், ஆற்ற இனிது - மிகவுமினிதாகும், என்ப - என்று சொல்லுவர் பெரியோர், எ - று.

க - ரை. சிற்றாளுடையவனது ஆயுத மாட்சியும், உறவினரது உதவியுள்ளவன் பகைவரோடு பகைக்கு மாண்மையும், கற்றாவுடையவனிடம் விருந்தும் இனியவென்பதாம்.

வி - ரை. சிற்றாள் - சிறுஆள். நட்டார் - சிநேகர் எனினுமாம். ஆண்மை-ஆளுந்தன்மை. கன்று ஆ கற்றா என வலித்தல் பெற்றது; கன்றையுடைய பசு என்பது பொருள் (கறவற்பசு). விருந்து - விருந்துசெய்தல். (௩அ)

பிச்சைபுக் குண்பான் பிளிறாமை முன்னினிதே
துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே
யுற்ற பேராசை கருதி யறனொரூஉ
மொற்க மிலாமை யினிது.

ப - ரை. பிச்சைபுக்கு உண்பான் - ஐயமேற் றுண்பவன், பிளிறாமை - கோவியாமை, முன் இனிது - மிகவுமினிதாகும்; துச்சில் இருந்து - ஒதுக்குக் குடியாயிருந்து, துயர் கூரா - துன்பப்படாத, மாண்பு-மாட்சிமை, இனிது-இனிதாகும்; உற்ற-மிகுந்த, பேராசை-பெரிதாகிய ஆசையை, கருதி - எண்ணி, அறன் - தருமத்தை, ஒருவும் - நீங்குகிற, ஒற்கம் இல்லாமை - மனத்தளர்ச்சி யில்லாமை, இனிது - இனிதாகும், எ - று.

க - ரை. ஐயமேற்றுண் டியிர்வாழ்பவன் கோவமில்லாதிருத்தலும், ஒதுக்குக் குடியிருந்து துன்பப்படாமையும், மிகுந்த பேராசையால் அறநெறியைக் கைவிட்டு மனந் தளராதிருத்தலும் இனியவென்பதாம்.

வி - ரை. புக்கு - இறந்தகால வினையெச்சம்; புகு என்னும் பகுதியொற்றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. பிளிறல் - உறுமுதல்; அது இவ்விடத்துக் கோவித்தலைக் குறித்தது. துச்சில் - ஒதுக்கிடம். ஒற்கம் - தளர்ச்சி; பகுதி ஒல்கு. துயர்கூர்தல் - துன்பமிகுதல் எனினுமாம். (௩௯)

பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே
வித்துக்குற் றுண்ணா விழுப்ப மிகவினிதே

காமுறுத லின்னா' என்றும், பெரிய நகரத்தில் வறியனா யிருத்தல் தீதாதலால், 'நெடுமாட நீணகர்க் கைத்தின்மை யின்னா' என்றும், பிறர்மனை யுணவுக் கெதிர்பார்த்திருந்துண்டல் மிகுதுன்பமாதலால் 'வருமனை பார்த்திருந் தூணின்னா' என்றும், கெடுதிக்காலத்தில் கைவிடுவார் நட்புத் துன்பஞ்செய்தலால் 'கெடுமிடங் கைவிடுவார் நட்பு இன்னா' என்றும் கூறினார். காமுறுதல்-ஒருசொல்; இதற்குப் பகுதி-காமுறு. (௩௭)

நறிய மலர் பெரிது நாறாமை யின்னா
துறையறியா னீரிழிந்து போகுத லின்னா
வறியான் வினாப்படுத லின்னா வாங்கின்னா
சிறியார்மேற் செற்றங் கொளல்.

ப-ரை. நறிய மலர் - நல்லமலரானது, பெரிது நாறாமை - மிகவும் மணக்காமை, இன்னா—; துறை அறியாதவன் - துறையறியாதவன், நீர் இழிந்து போகுதல் - நீரிலிறங்கிச் செல்லுதல், இன்னா; அறியான்-அறிவில்லாதவன், வினாப்படுதல் (அறிவுடையோரால்)வினாவப்படுதல், இன்னா—; ஆங்கு - அவ்வாறே, சிறியார்மேல் - சிறியவர்மீது, செற்றம் கொளல் - கோவங்கொள்ளுதல், இன்னா—; எ-று.

க-ரை. நல்ல மலரானது மணக்காமையும், துறையறியாதவன் நீரிலிறங்கிச் செல்லுதலும், பேதையானவன் பெரியோரால் வினாவப்படுதலும், சிறியவர் மீது கோவங்கொள்ளுதலும் தீயவென்பதாம்.

வி-ரை. மணமில்லாதமலர் பயன்படுதலின்றாதலால் 'நறியமலர் பெரிது நாறாமையின்னா' என்றும், இறங்கு துறையறியாதவன் நீரில் இறங்கிச் செல்லுதல் அவனுக் கபாயத்தை யுண்டுபண்ணுமாதலால் 'துறையறியா னீரிழிந்து போகுத லின்னா' என்றும், அறிவிலான் அறிவுடையவரால் வினாவப்படின் இருதிறத்தார்க்கும் பயன் துன்பமேயாதலால் 'அறியான் வினாப்படுத லின்னா' என்றும், தன்னின் மெலியாரிடத் துண்டாகுங் கோவம் இம்மைக்கட்பழியும் மறுமைக் கட்பாவமும் பயத்தலின் சிறியார்மேற் செற்றங் கொளல் இன்னா என்றும் கூறினார். (௩௮)

பிறன்மனையாள் பின்னோக்கும் பேதைமை யின்னா
மறமிலா மன்னர் செருப்புகுத லின்னா
வெறும்புறம் வெம்புரவி யேற்றின்னா வின்னா
திறனிலான் செய்யும் வினை.

ப-ரை. பிறன் மனையாள் - பிறன் மனையாளுடைய, பின் - இடத்தை, நோக்கும் - பார்க்கிற, பேதைமை - அறியாமை, இன்னா—; மறம் இலா - வீரத்தன்மையில்லாத, மன்னர்-அரசர், செரு - போர்க்களத்தில், புகுதல்-பிரவேசித்தல். இன்னா—; வெறும் புறம் - வெறுமையாகிய முதுகினையுடைய, வெம் புரவி - வேகத்தையுடைய குதிரைமேல், ஏற்று - ஏறுதல், இன்னா—; திறன் இலான் - செய்வகையறியாதவன், செய்யும் வினை - செய்யுங்காரியம், இன்னா—; எ - று.

க-ரை. பிறன்மனையா ளிடத்தைப்பார்க்கும் பேதைமையும், வீரதன்மை யில்லாத அரசர் போர்முகத்திற் பிரவேசித்தலும், குதிரையின் வெறு முதுகிலேறுதலும், செய்யும்வகை யறியாதவன் செய்யுங் காரியமும் தீயவென்பதாம்.

வி-ரை. பிறர்மனை நயத்தல்போலப் பெரும்பாவ மொன்றில்லை யாதலால், 'பிறன்மனையாள் பினனோக்கும் பேதைமை யின்னா' என்றும், வீரத்தன்மை யில்லாத அரசர் போர்க்கெழுதல் அவமானத்திற் கேதுவாதலால், 'மறமிலா மன்னர் செருப்புகுத லின்னா' என்றும், கல்லணை யில்லாத குதிரைமேலேறுதல் அபாயத்துக் கேதுவாதலால் 'வெறும்புறம் வெம்புரவி யேற்றின்னா' என்றும், வகையறியாதவன் செய்யுங் காரியம் முற்றுப்பெறா தாதலால் 'திறனிலான் செய்யும் வினை இன்னா' என்றும் கூறினார். வெறும்புறம் - கல்லணையில்லாத முதுகு. ஏற்று - தொழிற்பெயர். (௩௬)

கொடுக்கும் பொருளில்லான் வள்ளன்மை யின்னா
கடித்தமைந்த பாக்கினுட் கற்படுத லின்னா
கொடுத்து விடாமை கவிக்கின்னா வின்னா
மடுத்துழிப் பாடா விடல.

ப-ரை. கொடுக்கும் - கொடுத்தற்குரிய, பொருள் இல்லான் - பொருளில்லாதவனது, வள்ளன்மை-கொடைத்தன்மை, இன்னா—; கடித்து அமைந்த - பிளந்தமைந்த, பாக்கினுள் - பாக்கினிடத்தில், கல் படுதல் - கல்லுண்டாயிருத்தல், இன்னா—; கொடுத்து - பொருள்கொடுத்து, விடாமை - அனுப்பாமை, கவிக்கு - கவிகளுக்கு, இன்னா—; மடுத்தழி - தானத்துக்கேற்க, பாடாவிடல் - அகப்படாதொழிதல், இன்னா—; எ - று.

க-ரை. பொருளில்லாதவனது உதாரத்துவமும், கடித்த பாக்கினுள்ளே கல்லிருத்தலும், கவிகளுக்குக் கொடுத்தனுப்பாமையும், கொண்ட தானத்துக் ககப்படாதொழிதலும் தீயவென்பதாம்.

வி - ரை. பொருளில்லாதவனது ஔதாரியம் தீதாதலால், 'கொடுக்கும் பொருளில்லான் வள்ளன்மை யின்னா' என்றும், கடித்த பாக்கில் கல்லிருக்குமாயின் அது மூர்ச்சை முதலிய தீமைகளை யுண்டாக்கலால் 'கடித்த மைந்த பாக்கினுட் கற்படுத லின்னா' என்றும், வித்வான்களுக்குப் பொருள்கொடுத் தனுப்பாமை துன்பமாதலால் 'கொடுத்து விடாமை கவிக்கின்னா' என்றும், தானத்துக்கேற்க அகப்படா தொழிதல் தீதாதலால், 'மடுத்தழிப்பாடாவிடல் இன்னா' என்றும் கூறினார். கவிபாடுவோனைக் கவியென்றது வடநூன் மதம்பற்றி யென்க. படாவிடல் என்பது பாடாவிடல் என நீட்டல் பெற்றது. (௪0)

அடக்க முடையவன் மீளிமை யின்னா
தொடக்க மிலாதவன் றற்செருக் கின்னா
வடைக்கலம வவ்வுத லின்னாவாங் கின்னா
வடக்க வடங்காதார் சொல்.

ப-ரை. அடக்கம் உடையவன்-ஐம்பொறியடக்கமுடைய ஒருவன், மீளிமை - சொல்வன்மை, இன்னா—; தொடக்கம் இலாதவன் - தொடங்கிய காரியத்தைச் செய்யமாட்டாதவன், தற்செருக்கு - தன்னைத்தானே மதித்தல், இன்னா—; அடைக்கலம்-அடைக்கலப் பொருளை, வவ்வுதல் - கவர்ந்து கொள்ளுதல், இன்னா—; ஆங்கு - அவ்வாறே, அடக்க - அடக்கவும், அடங்காதார் - அடங்காதவருடைய, சொல் - சொல்லானது, இன்னா—; எ-று.

க-ரை. அடக்கமுடையவனது மீளிமையும், தொடங்கிய காரியத்தைச் செய்யமாட்டாதவன் தன்னைத்தானே மதித்தலும், அடைகலம் வைத்த பொருளைக் கவர்ந்து கொள்ளுதலும், அறிவுடையோர் அடக்கினும் அடங்காதவரது வாய்ச்சொல்லும் தீயவென்பதாம்.

வி-ரை. மீளிமை - வீரத்திறம் எனினுமாம். துடக்கம் - ஆரம்பம்; இதற்கு துடங்கு பகுதி. அடைக்கலம் - அடைக்கலப்பொருள். அடக்கம்-தொழிற்பெயர்; அடங்கு பகுதி. ஐம்பொறி யடக்க முடையவன் வீரத்திறம் பேசுதல் தீதாதலால் 'அடக்க முடையவன் மீளிமையின்னா, என்றும்' ஒருகாரியத்தைத் தொடங்கி முடிக்கமாட்டாதவன் தன்னைத்தானே மதித்தல் தீதாதலால் 'துடக்க மிலாதவன் றற்செருக் கின்னா' என்றும், ஒருவர் கொண்டுவந்து காப்பாற்றிவைத்துக் கேட்கும்போது கொடுக்கவேண்டுமென்று சொல்லி நம்பி வைத்த பொருளைக் கவர்ந்துகொள்ளுதல் போலப் பெரும்பாவம் பிறிதொன்றின்மையால் 'அடைக்கலம் வவ்வுத லின்னா' என்றும், அடங்காதாருடைய வாய்ச்சொல்லுந் தீதுண்டாக்கலால் அடக்க வடங்காதார் சொல் இன்னா; என்றும் கூறினார். (௪௧)

## இன்னா நாற்பது மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

---

உ

சங்கச்செய்யுள்.

காரியாசான் செய்த

# சிறுபஞ்சமூலம்

## மூலமும்,

மஹாவித்வான் கா. இராமசாமி நாயுடு அவர்களால்

இயற்றப்பட்ட

## விருத்தியுரையும்.

இவை

பென்ஷன் சுபேதார்-தஞ்சை. சாம்பசிவம்பிள்ளை

அவர்கள் குமாரர்

தஞ்சை - எஸ். குமாரசுவாமிபிள்ளையால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

---

1909.

 விலை அணா 4.

கடவுள் துணை.

# சிறுபஞ்சமூலம்

## மூலமும் உரையும்.



### கடவுள் வாழ்த்து.

முழுதுணர்ந்து மூன்றொழித்து மூவாதான் பாதம்
பழுதின்றி யாற்றப் பணிந்து-முழுதேத்தி
மண்பாய ஞாலத்து மாந்தர்க் குறுதியா
வெண்பா வுரைப்பன் சில.

பதவுரை. முழுது உணர்ந்து-முற்று முணர்ந்து, மூன்று ஒழித்து-காமமுதலிய மூன்றையும் நீக்கி, மூவாதான்-மூவாதவனாகிய கடவுளது, பாதம்-திருவடியை, பழுது இன்றி-குற்றமின்றி, ஆற்ற-மிகவும், பணிந்து-வணங்கி, முழுது ஏத்தி - (அவனுடைய மங்கள) குணங்கள் முழுதும் துதித்து, மண்பாய - மண்பரந்த, ஞாலத்து-இவ்வுலகத்திலுள்ள, மாந்தர்க்கு-மக்களுயிர்க்கு, உறுதி ஆ - உறுதியுண்டாக, சிலவெண்பா - சிலவெண்பாக்களை, உரைப்பன்-(யான்) சொல்லுவேன், எ-று.

கருத்துரை. கடவுளுடைய திருவடியை வணங்கித் துதித்து, இவ்வுலகிலுள்ள மக்களுயிர்க் குறுதியைத் தருவதாகிய பொருளமைந்த சில வெண்பாக்களை யான் சொல்லுவேன் என்பதாம்.

விருத்தியுரை. ஆசிரியர் தாமெடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றினிது முடிதற்பொருட்டு, ஆன்றோ ராசாரப்படி இக்கடவுள் வாழ்த்துக் கூறலாயினர். முழுதுணர்தலை சர்வஜ்ஞத்வம் என்று கூறுவர் வடநூலார். மூன்று என்றது காம வெகுளி மயக்கங்களை. இவை யிறைவனுக் கியல்பாகவே யில்லையாதலால் 'மூன்றொழித்து' என்

றும், என்றுமொருதன்மையனு யிருத்தலால் 'மூவாதான்' என்றும் கூறினர். மூவாதான் என்பதற்குப் பகுதி மூ. பிறவிப் பெருங்கடற் கோர் பெருமரக்கல மாதலால் இறைவனது பாதத்திற்கண் வைத்தார். பழுது - வழிபாட்டின் முறையிற் குற்றம். காயத்தின் றொழிலாகிய பணிதலும், வாக்கின் றொழிலாகிய ஏத்துதலும் மனத்தின வழிபவாதலால் மனத்தின் றொழிலாகிய சிந்தித்தலுங்கொள்ளப்படும். படவே முக்கரண வழிபாடு மடங்கிற்று. உறுதி-அறம் பொருள் இன்பம் வீடு என்பன.

இச்செய்யுளில், நூற்பெயர்க்கேற்ப ஐந்தென்னுந் தொகை கோடல் யாங்ஙனமெனின், முக்குற்றமொழித்தலும், முழுதுணர்ச்சியும், மூவாமையும் ஆகிய ஐந்தினையுங் கொள்கவெனக் கூறாயிற்று. ()

ஒத்த வொழுக்கங் கொலைபொய் புலால்களவோ
டொத்த விவையல வோர்நாலிட்-டொத்த
உறுபஞ்ச மூலந்தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலஞ் சிறந்து.

ப-ரை. ஒத்த-பொருந்திய, ஒழுக்கம்-நல்லொழுக்கம், கொலை பொய் புலால் களவோடு ஒத்த இவை அல்ல-கொலை பொய் புலால் களவோடு பொருந்திய இவையல்லாதனவாகிய, ஓர் நால் இட்டு-ஒரு நான்கையுஞ் சேர்த்து, ஒத்த - பொருந்திய. உறு - மிக்க, பஞ்ச மூலம்-சிறுவிலைக்காலத்தை, தீர்-ஒழிக்கிற, மாரிபோல்-மழைபோல, சிறுபஞ்சமூலம்-சிறுபஞ்சமூலத்தை, சிறந்து - சிறப்பித்து, கூறீர் - (நீங்கள்) சொல்லுங்கள், எ-று.

க-ரை. சிறுவிலைக் காலத்தை யொழிக்கிற மழைபோல, மக்கட்குக்கொலை முதலியவற்றை யொழித்து நல்லொழுக்க முதலியவற்றைத் தருதலால், சிறுபஞ்சமூலத்தை நீங்கள் சிறந்தெடுத்துச் சொல்லுங்கள் என்பதாம்.

வி-ரை. சிறுபஞ்ச மூலமாவன-சிறிய ஐந்துவேர்கள்; அவை:— கண்டங்கத்திரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், நெருஞ்சில்வேர், பெருமல்லிவேர் என்பன, இவ்வைந்தும் மக்களுடற்குப்

பிணிமுதலியவற்றையொழித் திதஞ்செய்வதுபோல, உயிர்க்குறுதியைச் செய்வனவாகிய நல்லொழுக்க முதலிய வைந்தனையுங் கூறுதலால், இந்நூற்குச் சிறுபஞ்சமூலம் என்பது உவமையாகுபெயராயமைந்தது. நல்லொழுக்க முதலியவை வந்தாவன:—நல்லொழுக்கம், கொல்லாமை, பொய்கூறாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை என்பன. கூறீர் என்பதற்கு வினைமுதலாகிய நீங்கள் என்பது வருவிக்கப்பட்டது. ஒழுக்கம் என வாளாகூறினாரேனும் கொல்லாமைமுதலியவற்றிற்கேற்ப நல்லொழுக்கமென் றுரைக்கப்பட்டது. (உ)

பொருளுடையான் கண்ணதே போக மறனு
மருளுடையான் கண்ணதே யாகும்-அருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியு
முய்யான் பிறர்செவியிற் குய்த்து.

ப-ரை. போகம் - இன்பமானது, பொருள் உடையான் கண்ணதே ஆகும்-பொருளுடையவனிடத்ததே யாகும்; அறம்-அறமும், அருள் உடையான் கண்ணதே ஆகும் - அருளுடையவனிடத்ததே யாகும்; அருள் உடையான்-அருளுடையவன் பழி செய்யான்-பழிக்கப்படுங் காரியங்களைச் செய்யான்; பாவம் சேரான்-பாவத்தைத்தருங் காரியங்களைச் சேரான்; புறமொழியும் - புறங்கூற்று மொழிகளையும், பிறர் செவியிற்கு உய்த்து உய்யான்-பிறர் காதுகளிற் செலுத்தான், எ - று.

க-ரை. போகம் முதலிய வைந்தும் பொருளுடையான் முதலிய ஐவரிடத்தவே யாகும் என்பதாம்.

வி-ரை. பொருள் - செல்வம். அருள்-எல்லா வுயிர்களின்மேலு முளதாகுங் கருணை. அறன் - அறம் என்பதன்போலி. உய்த்தல் - செலுத்தல். (புகுத்தல்) பொருளுடையவன் இன்பமொன்றனையே நுகர்வான்; அருளுடையவன் அறப்பயனைக் கைக்கோடலேயன்றி

பழிபாவங்களைச் செய்யாமையும் புறங்கூறாமையு முடையனுவனெ ன்றதாயிற்று. (௩)

கற்புடைய பெண்ணமிர்து கற்றடங்கி னானமிர்து
நற்புடைய நாடமிர்தந் நாட்டுக்கு-நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனு
மாகவே செய்யி னமிர்து.

ப-ரை. கற்பு உடைய பெண்-கற்புள்ள பெண்ணானவள், அமிர்து-(தன் கணவனுக்கு) அமிர்தத்தோ டொப்பவளாவள்; கற்று-(அறிவு நூல்களைக்) கற்று, அடங்கினான்-அடங்கினவன், அமிர்து-(உலகத்தார்க்கு)அமிர்தத்தோ டொப்பவனுவன்; நற்புஉடையநாடு-நற்குணமுடையநாடு, அமிர்து-(அந்நாட்டரசனுக்கு) அமிர்தத்தோ டொப்பாகும்; அ நாட்டுக்கு-அந்த நாட்டுக்கு, நற்பு உடைய-நன்மையுள்ள, மேகம் சேர்-மேகத்தின் குணமமைந்த, கொடி-வெற்றிக் கொடியையுடைய, வேந்து-வேந்தனானவன், அமிர்து-அமிர்தத்தோ டொப்பவனுவான்; சேவகனும்-அவ்வேந்தனது சேவகனும், ஆகவே செய்யின்-அவனுக்கு நன்மையா மவற்றையே செய்வனுயின், அமிர்து-அவ்வேந்தனுக்கு அமிர்தத்தோ டொப்பவனுவன் என்பதாம்.

கு-ரை. கற்புடைய பெண் முதலானோர் அவள் கணவன் முதலானோர்க்கு அமிர்தத்தை நிகர்ப்பர் என்பதாம்.

வி-ரை. கற்பு-பாதிவிரத்தியம்; அது கணவன் முதலானோரிடத்து நடக்கவேண்டிய முறைமைக ளெல்லாவற்றையுங் கற்றல். கற்பு-தொழிற்பெயர். அடங்கினான் என மேல்வருதலால் கற்று என்பதற்கு அறிவு நூல்களைக்கற்று எனப் பொருளுரைக்கலாயிற்று. நாடு-தேசம். அடங்கினான் என்றது மனமொழி மெய்க ளடங்கப் பெற்றவனை. இவ்வடக்கம் அறிவு நூல்களைக் கல்லாதவனுக் குண்

டாத வருமையென்பது தோன்ற 'கற்றடங்கினன்' என்றார். மேகம்-பொருளாகுபெயர். மேகத்தின் குணம் - கைம்மாறு வேண்டாமை. செய்யின் என்பது செய்தலருமை தோன்ற நின்றது. (௪)

கல்லாதான் றான்காணு நுட்பமுங் காதிரண்டு
மில்லாதா ளெக்கழுத்தஞ் செய்தலு-மில்லாதா
னெல்லாப் பொருளில்லார்க் கீத்தளியா னென்றலு
நல்லார்கள் கேட்பி னகை.

ப-ரை. கல்லாதான்-(ஆசிரியனிடத்துக் கற்கவேண்டிய முறைப் படியே) கல்லாதவனாகிய ஒருவன், தான்காணும்-தானே ஆராய்ந்து காண்கிற, நுட்பமும் - நுண்பொருளும், காது இரண்டும் இல்லாதாள் - இரண்டுகாது மில்லாதவளாகிய ஒருத்தி, எக்கழுத்தம் செய்தலும்-(யான் அழகுடையேனென்று) இறுமாத்தலும், இல்லாதான் - பொருளில்லாதவன், ஒல்லா பொருள்-இசையாத வோர்பொருளை, இல்லார்க்கு - வறியார்க்கு, ஈத்து - கொடுத்து, அளியான் என்றலும்-அருளுடையானென்று சொல்லப்படுதலும், (ஆகிய இவற்றை) நல்லார்கள் கேட்பின் - நல்லோர்கள் கேட்பாராயின், நகை - சிரித்தற் கேதுவாம், எ-று.

க-ரை. கல்லாதவனொருவன் நுண்பொருள் காண்டல் முதலிய வற்றை நல்லோர்கள் கேட்டால் நகைப்பார்கள் என்பதாம்.

வி-ரை. தான்காணு நுட்பமும் என மேல்வருதலால் கல்லாதான் என்பதற்கு, ஆசிரியனிடத்துக் கற்கவேண்டிய முறைப்படியே கல்லாதவனாகிய வொருவன் எனப் பொருள் கூறலாயிற்று. கணவிய குழை முதலியவை யணியப்பெற்று முகத்திற்குப் பேரழகு செய்வது காதாகலால், அவை யில்லாதவள் யான் பேரழகுடையே னென்றல் சிரிப்புக் கிடமாதலால், 'காதிரண்டு மில்லாதா ளெக்க

ழுக்கஞ் செய்தலும்' என்றும், பொருளில்லாதவன் வறியார்க்குக் கொடுத்த அருளுடையா னெனப்படுதல் ஒருவாற்றானு மியைவதன் றாகலான் 'இல்லாதானெல்லாப் பொருளில்லார்க் கீத்தளியானென் றலும்' என்றும், பொருத்த மற்ற இக்காரியங்களை நல்லார்காணின் நகையாதிரார் ஆகலான், 'நல்லார்கள் கேட்பினகை' என்றும் கூறினார். கல்லாதான் றன்சானு நுட்பமும் என்பதற்கு, "கல்லாதா னொட்பங் கழிய நன்றாயினும், கொள்ளா ரறிவுடையார்" என்னுந் திருக்குறளை உதாரணமாகக் கோட லமையும். (ரு)

உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்றீண்
டிடம்பொழிய வேண்டுமே லீகை-மடம்பொழிய
வேண்டி னறிமடம் வேண்டேல் பிறர்மனை
யீண்டி னியையுந் திரு.

ப-ரை. உடம்பு - உடம்பெடுத்தல், ஒழிய வேண்டின்-உன்னை விட்டு நீங்க வேண்டுமாயின், உயர் தவம் ஆற்று - உயர்ந்த தவத்தைச் செய்வாயாக; ஈண்டு - இவ்வுலகத்தில், இடம் - எல்லா விடங்களிலும், பொழிய வேண்டுமேல் - (ஒருவன் தன் புகழினால்) நிறைய வேண்டுவானாயின், ஈகை-ஈதலைச் செய்க; மடம் பொழிய வேண்டின்-மெல்லியவீரம் தனக்குள்ளே நிறையவேண்டினானாயின், அறிமடம் - அறிவின்கண் அடங்கி யொழுகுக; பிறர்மனை வேண்டேல்-பிறர் மனைவியை விரும்பாதொழிக; ஈண்டின் - இவையாவும் பொருந்துமாயின், திரு இயையும்-செல்வம் வந்து தானே நிறையும், எ-று.

க-ரை. பிறவியை யொழிக்க வேண்டுமாயின் தவத்தைச் செய்க; புகழ் வேண்டுமாயின் ஈதலைச்செய்க; வீரம் வேண்டுமாயின் அறிவிலடங்குக; பிறன்மனை நயவாதொழிக; இவை பொருந்துமாயின் செல்வம தானேவந்து நிரம்பும் என்பதாம்

வி-ரை. வேறுவழியால் ஒழிக்கவொண்ணாத பிறவியையொழித் தற்குரியது தவமாதலால் அதனை 'உயர்தவம்' என்றார். ஆற்றுதல்-செய்தல். "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப் படும்", "கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின், "ஆற் றற்றலைப்பட்டவர்க்கு" என்னுந் திருக்குறட் செய்யுட்கள் இங்கு உதகரிக்கத்தக்கன. மனையி லுள்ளாளை மனையென்றே கூறினர் இடவாகு பெயரால். அன்றியும், இவளில்லாதது வீடன்று, காடா கும் என்றறிஞர் கூறுதலால் இவளிருத்தல்பற்றி மனையென்றா ரெனினு மமையும் (௯)

படைதனக்கு யானை வனப்பாகும் பெண்ணி
னிடைதனக்கு நுண்மை வனப்பா-நடைதனக்குக்
கோடா மொழிவனப்புக் கோற்கதுவே சேவகர்க்கு
வாடாத வன்கண் வனப்பு.

ப-ரை. யானை - யானையானது, படைதனக்கு - சேனைக்கு, வனப்பு ஆகும் - அழகாகும்; நுண்மை-நுட்பமானது, பெண் இடை தனக்கு - பெண்ணின் இடைக்கு, வனப்பு ஆம்-அழகாகும்; கோடா மொழி - ஒருபக்கத்துச் சாயாத சொல்லானது, நடை தனக்கு - ஒருவனது ஒழுக்கத்துக்கு, வனப்பு - அழகாகும் ; கோற்கு - செங் கோலுக்கு, அதுவே-அதுவேயழகாகும்; வாடாத வன்கண்-கெடாத வன்கண்மையானது, சேவகர்க்கு - சேவகரா ய[redacted]வர்க்கு, வன ப்பு - அழகாகும், எ - று.

க-ரை. யானை முதலியவை படை முதலியவற்றிற்கு அழகு செய்வன வென்பதாம்.

வி-ரை. நால்வகைப் படையுள்ளும் யானைப்படை சிறந்ததாக லான் 'படைதனக்கு யானை வனப்பாகும்' என்றும், இடை சிறுத் திருத்தல் மாதர்க்கழகாதலால் 'பெண்ணி னிடைதனக்கு நுண்மை

வனப்பாம்' என்றும், பக்ஷபாதமின்றிப்பேசுதல் ஒருவனது ஒழுக்கத்துக் கழகாதலால், 'நடைதனக்குக் கோடா மொழிவனப்பு' என்றும், செங்கோலுக்கும் அதுவே யாதலால் 'கோற்கதுவே' என்றும், சேவகர்க்கு ஒருகாலத்துங் குறையாத வீரத்தன்மையே யழகாதலால் 'சேவகர்க்கு வாடாத வன்கண் வனப்பு' என்றும் கூறினார். (எ)

பற்றினன் பற்றற்ரு னூறவசி யெப்பொருளு
முற்றின ஞகு முதல்வனூற்-பற்றினற்
பாத்துண்பான் பார்ப்பான் பழியுணர்வான் சான்றவன்
காத்துண்பான் காணுன் பிணி.

பதவுரை. பற்று அற்றான் - பற்றற்றவனாகிய இறைவனாற் சொல்லப்பட்ட, நூல் - நூற்பொருளை, பற்றினன்-பற்றியொழுகுவோன், தவசி-தவசியாவான்; எப்பொருளும்-எல்லாப் பொருள்களையும், முற்றினன் - முற்றவுணர்ந்தவன், முதல்வன் ஆகும் - முதல்வனுவான்; நூல் பற்றினல் - நூல்களின் பொருள்களைப் பற்றுதலால், பாத்து உண்பான் - பகுத்துண்பவன், பார்ப்பான் - பார்ப்பானுவான்; பழி உணர்வான் - பழிக்கேதுவான காரியங்களை யறிந்து விலக்குவோன், சான்றவன்-சான்ருேனுவான்; காத்து - (தான் உண்ணத்தகாதவற்றை யுண்ணுமல்) தடுத்து, உண்பான் - (உண்ணத் தகுவனவற்றை) உண்பவன், பிணி காணுன்-நோய்களைக் காணுதவனுவான், எ-று.

கருத்துரை. பற்றற்றவனது நூலைப்பற்றினவன் தவசியாவான்; எல்லாமறிந்தவன் முதல்வனுவான்; பகுத்துண்பவன் பார்ப்பானுவான்; பழியறிவோன் சான்ருேனுவான்; காத்துண்பவன் நோய்காணுதவனுவான் என்பதாம்.

விசேடவுரை. பற்றற்றான் என்றது முதற்கடவுளை; இவன் இயல்பாகவே பற்றற்றிருப்பவனுதலால் 'பற்றற்றான்' என்ருர். இதனை, "பற்றுக பற்றற்றான் பற்றினையப்பற்றைப், பற்றுக பற்றுவிடற்கு"

என்னும் திருக்குறளானு முணர்க. பற்றற்றானூல் என்றது முதனூலாகிய வேதத்தை. தவசி - தவஞ்செய்வோன். முதல்வன் - தலைமைப் பாடுடையவன். முதல்வனூற்பற்று-வேதார்த்தத்தில் சிரத்தை. பகுத்து எனற்பாலது பாத்து என மருவிற்று. சான்றவன் - கல்வியறிவொழுக்கங்களால் நிறைந்தவன். காத்தல் - தடுத்தல். (அ)

கண்வனப்புக் கண்ணோட்டங் கால்வனப்புச் செல்லாமை
யெண்வனப் பித்துணையா மென்றுரைத்தல்-பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் றன்னாடு
வாட்டானன் றென்றல் வனப்பு.

ப-ரை. கண் வனப்பு-கண்ணுக் கழகாவது, கண்ணோட்டம் - பிறர்மேல் கண்ணோடுதலாம்; கால் வனப்பு-காலுக்கழகாவது, செல்லாமை-பிறனிடத்தி லிரக்கப்போகாமையாம்; எண் வனப்பு-ஆலோசனைக்கழகாவது, இத்துணையாம் என்று உரைத்தல்-இந்தக்காரியம் இவ்வளவினதென்று துணிந்துரைத்தலாம்; பண் வனப்பு-பண்ணுக் கழகாவது, கேட்டார் நன்று என்றல் - கேட்டவர் நன்றென்று சொல்லுதலாம் ; கிளர் - படைகளோடுகூடி விளங்குகிற, வேந்தன் வனப்பு - அரசனுக் கழகாவது, தன் நாடு - தனது நாட்டை, வாட்டான் - வருத்தான், நன்று - இது அழகிது, என்றல் - என்று சொல்லுதற் குரியனாதலாம், எ-று.

க-ரை. கண்ணுக்குக் கண்ணோட்டமும், காலுக்கு இரக்கச் செல்லாமையும், சூழ்ச்சிக்குத் துணிந்துரைத்தலும், பண்ணுக்குக் கேட்டவர் நன்றென்றலும், அரசனுக்குத் தன்னாட்டி லுள்ளாரை வருத்தானென்று யாவராலும் புகழப்படுதலும் அழகென்பதாம்.

வி-ரை. கண்ணோட்டம் - கண்ணோட்டஞ் செய்தல்; இதனை வடநூலார் தாக்ஷிண்யம் என்பர். செல்லாமை - நடவாமை; இது இரக்கச் செல்லாமை யென்றிங்குப் பொருள்பட்டது. இரக்கச்

செல்லாமையால் காலுக் கழுகுண்டாய விடத்து காலையுடையவனுக் கழுகென்பது சொல்லாதே யமைந்தது. சூழ்ச்சி முடிவு காண்டற்குச் செய்வதாதலாலும், முடிவுகண்டு துணிந்துரையா விடத்து அச் சூழ்ச்சிக்குப் பயனில்லை யாதலாலும் 'எண்ணவனப் பித்துணையா மென்றுரைத்தல்' என்றார். பண் - இந்தளம், நட்டபாடை முதலியன; இராகம் எனினுமாம். இராகங்களாவன - நாட்டை, மத்தியமாவதி, தோடி, பைரவி, காம்போதி முதலியன. வாட்டுதல் - வருத்துதல்.

கொன்றுண்பா னாச்சாங் கொடுங்கரிப்போ வானாச்சா
நன்றுணர்வார் முன்கல்லா னாவுஞ்சா-மொன்றானுங்
கண்டுழி நாச்சாங் கடவான் குடிப்பிறந்தா
னுண்டுழி நாசசா முணர்ந்து.

ப-ரை. கொன்று - ஒருயிரைக் கொன்று, உண்பான் - அதன் தசையை யுண்பவனுடைய, நா - நாவானது, சாம் - அற்றுவிழும்; கொடு - கொடுமையாகிய, கரி - சாக்ஷிசொல்ல, போவான்-போகிற வனுடைய, நா - நாவானது, சாம் - அற்றுவிழும்; நன்று உணர்வார்முன் - மிகவுங் கற்றறிந்தவர்க்கெதிரே, கல்லான் - கல்லாதவனுடைய, நாவும் - நாவும், சாம் - அடங்கும்; ஒன்றானும் கண்டுழி - கடன்கேட்க வந்தவனைக் கடன்வாங்கினவன் கண்டபோது, நா - அவனது நாவும், சாம் - அடங்கும்; குடிப்பிறந்தான் - குடிப்பிறந்தானொருவன், கடவான் - ஒருவர்செய்த நன்றியை மறவாதவனாதலால், உண்டுழி - நன்றி செய்தவனிடத்து ஒரு தவறுண்டாயவிடத்து, உணர்ந்து - (அவன்செய்த நன்றியை) அறிந்து, நா-குடிப்பிறந்தவனது நாவானது, சாம்-அந்நன்றி செய்தவனது குற்றத்தை யெடுத்துச் சொல்லுதற்கஞ்சி அடங்கும், எ-று.

க-ரை. புலாலுண்போன் முதலியோருடைய நாக்கள் அடங்குமென்பதாம்.

வி-ரை. கொன்று என்பதற்குச் செயப்படுபொருளாகிய வுயிர் வருவித் துரைக்கப்பட்டது. கொன்றுண்பா னெச்சாம் என்றது கொன்றுண்பவனது நாவானது காலனது வாயா லறுபட்டுவிழும் என்றபடி. கொடுங்கரி - பொய்ச்சாட்சி. போவான் - நியாயஸ்தலத்துக் குப்போவோன். குடி-இருமரபுந் தூயவாகப்பெற்ற வுயர்குடி. நன்று-நன்மை யெனினுமாம். கண்டவுழி உண்டவுழி யென்பன கண்டுழி உண்டுழியென விகாரம் பெற்றன. (கo)

சிலம்பிக்குத் தன்சினை கூற்றநீள் கோடு
விலங்கிற்குக் கூற்ற மயிர்தான்-வலம்படா
மாவிற்குக் கூற்றமா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை.

ப-ரை. சிலம்பிக்கு - சிலந்திப்பூச்சிக்கு, தன் சினை-அதன் முட்டையே, கூற்றம் - யமனாகும்; விலங்கிற்கு - மிருகங்களுக்கு, நீள் கோடு - நீண்டகொம்புகளே, கூற்றம்-யமனாகும்; வலம்படா-வெற்றியுண்டாகாத, மாவிற்கு - கவரிமாவிற்கு, மயிர்தான் - அதன் மயிரே, கூற்றம் - யமனாகும்; ஞெண்டிற்கு - நண்டுக்கு, தன் பார்ப்பு ஆம் - தன் குஞ்சுகளே யமனாகும்; நாவிற்கு - ஒருவனது நாவுக்கு, நன்று அல் வசை - நன்மையல்லாத வசை கூறுதல், (கூற்றம்)-யமனாகும், எ - று.

க-ரை. சிலம்பிக்கு அதன் முட்டையும், மிருகங்களுக்கு அவற்றின் நீண்ட கொம்புகளும், கவரிமாவிற்கு அதன் மயிரும், நண்டுக்கு அதன் குஞ்சுகளும், ஒருவனது நாவுக்குப் பிறரை வசை கூறுதலும் யமனாகு மெனபதாம்.

வி-ரை சிலந்திப்பூச்சி முட்டையிட்டவுடன் தானழிதலால் 'சிலம்பிக்குத் தனசினை கூற்றம்' என்றும், மிருகங்களுக்கு நீண்ட கொம்பிருந்தால் அது மரங்கள் முதலியவற்றில் குத்தி முறியப்பெ

ற்று வருந்துமாதலாலும், அக்கொம்பு எவர்மீதாயினும் பட்டு அபாயம் விளைக்குமென்று அறுக்கப்படு மாதலாலும் 'நீள்கோடு விலங்கிற்குக் கூற்றம்' என்றும், கவரிமாவானது முட்செடி முதலியவற்றிற் பட்டுத் தன்மயிரொன் றுதிர்ந்தால் அது தன்னுயிரை விட்டுவிடுமாதலால் 'மயிர்தான் வலம்படா மாவிற்குக் கூற்றம்' என்றும், நண்டு தன் குஞ்சுகள் வெளிப்பட்டவுடனே இறந்துபோமாதலால் 'ஞெண்டிற்குத் தன்பார்ப்பு' என்றும், பிறர்பழி கூறுவோனடையும் பயன் இம்மையிற் பலராலும் இகழப்படுதலும், மறுமையில் எரிவாய் நிரயமுமேயாதலாலும் 'நாவிற்கு நன்றல் வசை' என்றும் கூறினார். நீள்கோடு விலங்கிற்குக் கூற்றம் என்றமையால் கொம்புகள் மிதமாயிருத்தலே நன்மையென்றதாயிற்று. விலங்கு - எருது முதலாயின. (கக)

நாணிலான் சால்பு நடையிலா னன்னோன்பு
மூணிலான் செய்யு முதாரத்தையு - மேணிலான்
சேவகமுஞ் செந்தமிழ் தேற்றான் கவிசெயலு
நாவகமே நாடி னகை.

ப-ரை. நாண் இல்லான் சால்பும்-நாணமில்லாதவனது அமைதியும், நடையிலான் நல் நோன்பும் - நல்லொழுக்க மில்லாதவனது நல்ல நோன்பும், ஊண் இல்லான் செய்யும் உதாரதையும்-தனக்கே உண்பொருளில்லாதவன் செய்கிற உதாரத்துவமும், ஏண் இல்லான் சேவகமும் - வலியில்லாதவனது சேவகமும், செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்-செந்தமிழ்த்தேர்ச்சியில்லாதவன் கவிசெய்தலும், (ஆகிய இவ்வைந்தும்) நாவகமே நாடின்-நாவினிடத்துக் கொண்டாராயின், நகை - சிரிப்புக்கிடமாம், எ - று.

க-ரை. நாணமில்லாதவன் அமைதி, நன்னடை யில்லாதவனது நோன்பு, உண்பொருளில்லாதவனது உதாரத்துவம், வலியில்லாதவனது சேவகம், செந்தமிழ்த் தேர்ச்சியில்லாதவன் கவிபாடுதல் என்னு மிவ்வைந்தும் பயனில வென்பதாம்.

வி-ரை. "அன்பு நாணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ டைந்து சால்பூன்றிய தூண்" என்ற திருக்குறளின்படியே, நாணில் வழி சால்பு நிலைபெறுமையின் 'நாணிலான் சால்பும்' என்றும், நல் லொழுக்கமில்லாதவனது நோன்பு முற்றுப்பெறாதாதலால் 'நடையி லானன்றோன்பும்' என்றும், தனக்கே யுண்பொருளில்லாதவன் பிறர்க்குபகரித்தல் முடியாதாதலால் 'ஊணிலான் செய்யு முதாரதை யும்' என்றும், உடல்வலி மனவலிகளில்லாதவன் சேவகனாயிருத்தல் தகாதாதலால் 'ஏணிலான் சேவகமும்' என்றும், செந்தமிழ்ப்பயிற்சி யும் தேர்ச்சியுமில்லாதவன் கவிசெய்யின், அது கற்றுவல்ல அறிஞ ரால் பழிக்கப்படுதலே யன்றி, அவர்க்கு நகையையும் விளைக்குமாத லால் 'செந்தமிழ்தேற்றான் கவிசெயலும்' என்றும் கூறினார். உம்மைக ளொருதும் எண்ணுப்பொருளில் வந்தமையால் எண்ணும்மைகள். நாவகமே நாடினசை யென்பதனைச்சால்பு முதலியவைந்தனிற்றிலும் சேர்த்துரைத்துக்கொள்க. நோன்பு - விரதம், தவம எனினுமாம். உதாரத்துவம் - பெருங்கொடைத்தன்மை. தேற்றாதான் என்பது தன்வினையில் வந்தது. (கஉ)

கோறலு நஞ்சூனைத் துய்த்தல் கொடுநஞ்சு
வேறலு நஞ்சுமா றல்லானைத்-தேறினு
னீடாங்கு செய்தலு நஞ்சா மிளங்கிளையை
நாடாதே தீதுரையு நஞ்சு.

ப-ரை. கோறலும் - ஒருயிரைக் கொல்லுதலும், நஞ்சு - ஒரு வனுக்கு நஞ்சுபோலும்; ஊனை துய்த்தல் - பிறிதொன்றின் தசை யைத் தின்னுதலும், கொடு நஞ்சு - கொடிய நஞ்சுபோலும்; மாறு அல்லானை - தனக்கெதிராகாதவனை, வேறலும் - எதிர்த்து வெல்லு தலும், நஞ்சு - நஞ்சுபோலும்; தேறினன் - ஒரு கருமத்துக்குரியவ னென் றாராய்ந்து தெளியப்பட்டவனாகிய வொருவன், நீடாங்கு செய்தலும் - (அக்கருமத்தின்மேல்விடாமல்) கால நீட்டிப்புச் செய்

தலும், நஞ்சு ஆம் - நஞ்சுபோலும்; இளங்கிளையை - இளையசுற்றத்தாரை, நாடாதே - ஆராயாமலே, தீது உரையும்-தீங்குரைத்தலும், நஞ்சு-நஞ்சுபோலும், எ-று.

கு-ரை. கொலைசெய்தலும், புலாலுண்டலும், நிகரில்லாதவனை யெதிர்த்து வெல்லுதலும், ஆராய்ந்து தெளிந்த ஒருவனை வினைமேற் செலுத்தாது காலநீட்டம் செய்தலும், இளங்கிளைஞரை ஆராயாது தீங்குசொல்லுதலும் ஆகிய இவ்வைந்தும் ஒருவனை நஞ்சுபோலத் துன்பஞ்செய்யு மென்பதாம்.

வி-ரை. துய்த்தல் என்பதனீற்றில் எண்ணும்மை கூட்டியுரைக்கப்பட்டது. கோறல் என்பதற்குப் பகுதி கொல்; வேறல் என்பதற்குப் பகுதி வெல் இளங்கிளை - புதியவுறவினர். தீதுரை என்பதில் உரை முதனிலைத் தொழிற்பெயர். கோறல் முதலிய வைந்தும் நஞ்சுபோல ஒருவனுயிர்க்குறுகண் செய்வனவாதலால் இவற்றைச் செய்யலாகா தென்பதிதனாற் போந்தபொருள். தீதுரையாவது மனம் வருந்தும்படியான பழி மொழிகளை யெடுத்துரைத்தல். நான்காவது நஞ்சு நீங்கலாக ஏனைய நான்கு நஞ்சும் பெயர்ப் பயனிலை. (கரு)

இடரின்னா நட்டார்க ணீயாமை யின்னா
தொடர்பின்னா நள்ளார்கட் டூயார்ப் - படர்பின்னா
கண்ட லவிர்பூங் கதுப்பினா யின்னாதே
கொண்ட விரதங் குறைவு.

ப-ரை. நட்டார்கள் - நட்டாரிடத்து, இடர் - (கண்ட) துன்பம், இன்னா - தீயது; (நட்டார்கள்)-நட்டாரிடத்து, ஈயாமை இன்னா- கொடாமை தீயது; நள்ளார்கள்-மனப்பொருத்த மில்லாதவரிடத்து, தொடர்பு இன்னா - நட்புக் கோடல் தீயது; தூயார் - மனந் தூயாரை, படர்பு - விட்டு நீங்குதல், இன்னா - தீயது, கொண்ட விரதம் குறைவு - ஒருவனெடுத்துக்கொண்ட விரதத்தைச் செய்து முடிக்காமல் குறையாய் விடுதல், இன்னாதே-தீமையைத் தருவதேயாம்,எ-று.

க-ரை. நட்டாரிடத்திற் றுன்பமிருக்கக் காண்டலும், அவர்கட் கீயாமையும், பகைவரை நட்டலும், தூயாரை நீங்குதலும், எடுத்த விரதத்தை முடிக்காமையும் ஆகிய இவ்வைந்தும் தீயவா மென்பதாம்.

வி-ரை. நண்பினர் துன்புறக் கண்டவன் அத்துன்பத்தை யொழிக்க முயலாவிடின் மிகுபாவமாதலால் 'இடரின்னா நட்டார் கண்' என்றும், அவர்க்கீயாமை உலோபகுணமாமாதலால், 'ஈயாமை யின்னா' என்றும், பகைவரை நட்புக்கோடல் அபாயகரமான பெருங் குற்றமாதலால் 'தொடர்பின்னா நள்ளார்கண்' என்றும், பெரியோரைக் கைவிடுதல் பெருந் துன்பத்துக் கேதுவாதலால் 'தூயார்ப் படர்பின்னா' என்றும், விரதக் குறைவு சாதப்பயன் றராமையால் 'இன்னாதே கொண்ட விரதங் குறைவு' என்றும் கூறினார். 'கண்ட லவிர்பூங் கதுப்பினாய்' என்றது மகடூஉ முன்னிலை; இதற்குத் தாழை மடலின மணங்கமழும் கூந்தலை யுடையாளே என்பது பொருள். கண்டல் - தாழை, கதுப்பு - மென்மயிர். (௧௪)

கொண்டான் வழியொழுகல் பெண்மகன் றந்தைக்குத்
தண்டான் வழியொழுக றன்கிளையஃ - தண்டாதே
வேல்வழி வெம்முனை வீடாது மன்னுடு
கோல்வழி வாழ்தல் குணம்.

ப-ரை. கொண்டான்வழி தன்னைக்கொண்ட கணவன் சொல் வழியே, ஒழுகல் - தவறாது நடத்தல், பெண்-பெண்குணமாகும்; தந்தைக்கு-தந்தைக்கு, தண்டான்-இடையறாதே, வழி-அவன சொல் வழியே, ஒழுகல் - தவறாது நடத்தல், மகன் - மகன் குணமாகும்; அஃது - அவன்போலவே வழியொழுகுதல், தன்கிளை-தன்கிளையின் குணமாகும்; அண்டாதே-பகைவரோடு கூடாதே, வேல்வழி-அவரை வெல்லும் வழியால், வீடாது-இடைவிடாமல் வாழ்தல், வெம்முனை-

அரசனது வெம்முனையின்கட் போயிருந்தார் குணமாகும்; மன்கோல் வழி வாழ்தல் - அவ்வரசனது கோல்வழியே வாழ்தல், நாடு குணம் - நாட்டின் குணமாகும், எ - று.

க-ரை. பெண் கணவன் சொல்வழியே யொழுகுதலும், மகன் தந்தையின் சொல்வழியே யொழுகுதலும், இளை அவன்போலவே வழியொழுகுதலும், வெம்முனையின்கட் போயிருந்தார் பகைவரோடு சேராதே அவரை வெல்லும் வழியால் இடைவிடாமல் வாழ்தலும், நாடு அரசனது கோல்வழியே வாழ்தலும, அவ்வவர்க்குரிய குணஙக ளாகும் என்பதாம்.

வி-ரை. ஒழுகுதல்-நடத்தல். தண்டுதல்-தடைபடல். அண்டு தல் - கூடுதல் வெம்முனை - கொடியபோர். வீடுதல்-இடையறுதல். மன் - அரசன். குணம் என்பதனைப் பெண்முதலிய வைவர்க்குங கூட்டி யுரைத்துககொள்க. (கரு)

பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை
யிழைத்ததீங் கெண்ணி யிருத்த - லிழைதத
பகைகெட வாழ்வதும் பலபொருளார் நல்லார்
நகைகெட வாழ்வது நன்று.

ப-ரை. பிழைத்தல்-(தனக்குப் பிறனொருவன் செய்த) பிழையை, பொறுத்தல் - பொறுத்துக்கொள்ளுதல், பெருமை - பெருமையாகும்; இழைத்த - பிறர்செய்த, தீங்கு - தீமையை, எண்ணியிருத்தல் - நினைத்துக்கொண்டே யிருத்தல், சிறுமை - சிறுமையாகும்; இழைத்த - தான்செய்த, பகை - பிழைகள், கெட-கெடும்படி, வாழ்தலும் - வாழ்வதும், பலபொருளார் - பலபொருள்களையு முதவினோரும், நல்லார் - நல்லோரும், நகை - இகழ்ந்து நகைத்தல், கெட - இல்லையாம்படி, வாழ்வதும்-வாழ்தலும், நன்று-நன்மையாம், எ - று.

க-ரை. தனக்குப் பிறன்செய்த பிழையைப் பொறுத்துக்கொள்ளுதல் பெருமையாகும்; பிறன் செய்த தீமையை நினைத்துக்கொண்டே யிருத்தல் சிறுமையாகும்; தான்செய்த பிழைகள் கெடும்படி வாழ்தலும், உதவிசெய்தவரும் நல்லோரும் நகைத்தல் இல்லையாம் படி வாழ்தலும் நன்மையாம் என்பதாம்.

வி-ரை. பிழைத்தல் - பிழைசெய்தல். எண்ணியிருத்தல் - மறவாதிருத்தல். இழைத்தல் - செய்தல். நகை - நகைத்தல் (தொழிற்பெயர்). பெருமை சிறுமை யென்பன பண்பாகுபெயர்களாய் அவற்றை யுடையாரை யுணர்த்தின. பின்பு அவர்கள் குணங்களை யுணர்த்தினமையால் முதலாகுபெயர்களுமாம். ஆதலால் இவை இருமடியாகுபெயர்கள். (கரு)

*கதநன்று சான்றாண்மை தீது கழிய*
*மதநன்று மாண்பில்லார் முன்னர்—விதநன்றாற்*
*கோய்வாயிற் கீழுயிர்க்கீ துற்றுக் குரைத்தெழுந்த*
*நாய்வாயு ணல்ல தசை.*

ப-ரை. மாண்பு இல்லார் முன்னர் கதம் நன்று - நற்குணமில்லாதார் முன்பு கோவம் நன்று; சான்றாண்மை தீது-சான்றாண்மை தீதாகும்; கழியமதம் நன்று - மிக்க வலிசெய்தல் நன்று; கோய் வாயின்-கோய்போலும் வாயையுடைய, கீழ் உயிர்க்கு-கீழ்மக்களுக்கு, ஈ - கொடுக்கிற, துற்று - உணவு, குரைத்து எழுந்த - குரைத்துக் கொண்டே எழுந்த, நாய் வாயுள் - நாயின்வாயிற் கொடுத்த, நல்ல தசை விதம் நன்று - நல்ல மாமிச விதத்தினும் நன்மையாம், எ-று.

க-ரை. நற்குண மில்லாதவர்க் கெதிரில் கோவமே நன்று; சான்றாண்மைதீது; மிக்கவலிசெய்தல் நன்று; கீழ்மக்கட் கீயுமுணவு நாய்வாயிற் கொடுத்த தசைக்கு நிகராகும் என்பதாம்.

வி-ரை. கதம் - கோவம். மதம் - வலி. சான்றாண்மை - சால்புடைமை. கழிய - கழியென்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்த வினையெச்சம். மாண்பு - நற்குணம். கோய்-கள்முகக்கும் பாத்திரம். இழுயிர் என்பதில் உயிர் மக்களுயிரை யுணர்த்திற்று. குரைத்தல் - சத்தித்தல். (கஎ)

நட்டாரை யாக்கிப் பகைபணித்து வையெயிற்றுப்
பட்டா ரகலல்கு லார்ப்படிந்—தொட்டித்
தொடங்கினா ரில்லகத் தன்பிற் றுறவா
வுடம்பினா னாய பயன்.

ப-ரை. நட்டாரை ஆக்கி - தம்மோடு நட்புச் செய்தவரைச் செல்வராக்கி, பகை பணித்து-பகைவரைத் தாழ்த்தி, வை - கூர்மையாகிய, எயிறு - பல்லினையுடைய, பட்டு ஆர்-பட்டாடை யணியப்பெற்ற, அகல் அல்குலார் - அகன்ற அல்குலையுடைய மாதரை, படிந்து - சேர்ந்து, ஒட்டி - தொடர்வுற்று, தொடங்கினார் (அகத்து)-முறையாயினா ரிடத்தும், இல் அகத்து - தாம்பிறந்த குடியிற் பிறந்தவரிடத்தும், அன்பின் - அன்பினால், துறவா-நீங்காமையும் ஆகிய இவ்வைந்தும், உடம்பினான் ஆய-இந்த அரிதான மக்கட் பிறப்புப் பிறந்ததனா லுண்டாகிய, பயன் - பயன்களாம், எ - று.

க-ரை. நட்டாரை உயர்த்தலும், பகைவரைத் தாழ்த்தலும், மாதரைச் சேர்ந்து உறவாதலும், அவரிடத்தும் தாம் பிறந்த குடியிற் பிறந்தவரிடத்தும் அன்புடைமையும் ஆகிய இவ்வைந்தும் உடம்பெடுத்ததனாற் பெற்ற பயன்களாம் என்பதாம்.

வி-ரை. ஆக்குதல் - செல்வத்தா லுயரச்செய்தல். பணித்தல்-தாழ்த்தல். அன்பின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. துறவாமை யென்பது துறவா என ஈறு தொகுத்தலாயிற்று. உடம்பு என வாளாகூறினாரேனும், நட்டா

ரை யாக்கல் முதலிய குணங்கள் பிறவுடம்புகட்கின்மையால் மக்களுடம்பு என்று பொருள் கூறலாயிற்று. (கஅ)

பொய்யாமை பொன்பெறினுங் கள்ளாமை மெல்லியலார்
வையாமை வார்குழலார் நச்சினு—நையாமை
யோர்த்துடம்பு பேருமென் றூனவா யுண்ணானேற்
பேர்த்துடம்பு கோட லரிது.

ப-ரை. பொன் பெறினும் - பொன் பெற்றானாயினும், பொய்யாமை - பொய் சொல்லாமையும்; கள்ளாமை - (பிறர்பொருளைக்) களவு செய்யாமையும்; மெல் இயலார் - எளியாரை, வையாமை - வையாமையும்; வார் குழலார் - மாதர், நச்சினும் - விரும்பினாலும், நையாமை மனந்தளராமையும்; உடம்பு பேரும் என்று ஓர்த்து - தன்னுடம்பு மெலியுமென்று அறிந்து, ஊன் - பிறிதோருடம்பின் தசையை, அவாய் - விரும்பி, உண்ணானேல் - ஒருவன் உண்ணானாயின், (அவன்) பேர்த்து - மீட்டும், உடம்பு கோடல் - பிறிதோருடம்பைக் கொள்ளுதல், அரிது - இல்லை, எ-று.

க-ரை. பொய் சொல்லாமையும், பிறர்பொருளைக் கள்ளாமையும், எளியாரை வையாமையும், பிறமாதர் விரும்பினும் அவரைத் தான் விரும்பாமையும், உடம்பு மெலியுமென்று ஊன் உண்ணாமையும், ஒருவன் உடையனாயின், அவன் வேறோருடம் பெடுக்கமாட்டான் என்பதாம்.

வி-ரை. பொன்பெறினும் பொய்யாமை யென்றதனால் அவனது நிராசை பெறப்பட்டது. கள்ளல்-பிறர்பொருளை வஞ்சித்துக் கொள்ளல். மெல்லியலார் - பொருளில்லாமையால் மெலிந்திருப்பவர். வார்குழலார் - நீண்ட கூந்தலையுடையவர். நச்சல் - விரும்புதல். நைதல் - மனந்தளர்தல். ஓர்ந்து என்பது ஓர்த்து என வலித்தல் பெற்றது. உண்ணானேல் என்பதில் ஏல் ஆனின் என்பதன் மரூஉ

பேர்த்துடம்பு கோடலரிது என்றது இனிப்பிறவான் என்றபடி. கோடல்-கொள்ளுதல். "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான், மனக்கவலே மாற்ற லரிது", "அறவாழி யந்தணன் றாள் சேர்ந்தார்க் கல்லாற், பிறவாழி நீந்த லரிது" என்னுந் திருக்குறட் செய்யுட்களில் அரிது என்பது இன்மைப் பொருள் தந்ததுபோல ஈண்டும் அரிது இன்மைப் பொருள்தந்து நின்றது. (கக)

தேவரே கற்றவர் கல்லாதார் தேருங்காற்
பூதரே முன்பொருள் செய்யாதா—ராதரே
துன்பமி லேம்பண்டி யாமே வனப்புடையே
மென்பா ரிருகா லெருது.

ப-ரை. கற்றவர் - அறிவு நூல்களைக் கற்றவர், தேவரே - தேவரை யொப்பாரே யாவர்; கல்லாதார் - அவற்றைக் கல்லாதவ ரைப்பற்றி, தேருங்கால்-ஆராய்ந்துபார்க்குமிடத்து, பூதரே - பசாசு களோ டொப்பவரேயாவர்; முன் - முதுமைப் பருவம் வருவதற்கு முன்பே, பொருள் செய்யாதார் - பொருளைத் தேடி வைத்துக் கொள்ளாதவர், ஆதரே-அறிவிலாரேயாவர்; பண்டு-முன்னே, யாம்- யாம் (செல்வ முடையோமா யிருந்ததனல்), துன்பம் இலேம்-துன்ப முடையே மல்லேம், வனப்பு உடையேம் - அழகுடையேம், என் பார் - என்று சொல்லுவோர், இருகால் எருது - இருகால் மாடுகளு க்கு நிகராவர், எ-று.

க-ரை. அறிவு நூல்களைக் கற்றவர் தேவரை நிகர்ப்பார்; கல் லாதவர் பிசாசுகளை நிகர்ப்பார்; முதுமைப்பருவம் வருதற்கு முன் பே பொருள்தேடி வைத்துக்கொள்ளாதவர் அறிவிலாதவரே யாவர்; யாம் முன்னே செல்வரா யிருந்தமையால் துன்பமிலேம், அழகுளேம் என்பவர் இரண்டுகால் மாடுகளை நிகர்ப்பார் என்பதாம்.

வி-ரை. தேவரே என்பதில் ஏகாரம் தேற்றம், அன்றிப் பிரி நிலை யெனினுமாம்; பூதரே, ஆதரே என்பனவு மன்ன. தேர்தல்

ஆராய்தல். முன்பொருள் செய்தலாலது - உடம்பு தளர்ந்து அங்கு மிங்கும் ஓடிப் பொருள்தேட இயலாத முதுமைப் பருவம் வருதற்கு முன்பே, அப்பருவத்தி லுதவும்பொருட்டு இளமைப் பருவத்திற்றானே பொருளீட்டி வைத்துக்கொள்ளுதல். நாற்காலெருதிற் பிரித்தற்கு 'இருகா லெருது' என்றார். (உ0)

கள்ளான்சூ தென்றுங் கழுமான் கரியாரை
நள்ளா னுயிரிரங்க நாவாடான்—நள்ளானு
யூண்மறுத்துக் கொள்ளானே லானுடம் பெஞ்ஞான்றுந்
தான்மறுத்துக் கொள்ளான் றளர்ந்து.

ப-ரை. கள்ளான் - (பிறர் பொருளைக்) களவு செய்யாதவனாய், சூது - சூதாட்டத்தில், என்றும் - எக்காலத்தும், கழுமான்-பொருந்தாதவனாய், கரியாரை - கீழ்மக்களை, நள்ளான் - நட்புக்கொள்ளாதவனாய், உயிர் இரங்க-பிறவுயிர்களிரங்கும்படி, நா ஆடான்-நாவாடாதவனாய், ஊண் நள்ளான் ஆய்-ஊனுணவைப் பொருந்தாதவனாய், மறுத்து-தடுத்து, கொள்ளானேல்-அவ்வூனுணவை ஒருவன் கொள்ளாதிருப்பானாயின், தான் - அவன்றான், மறுத்து - மீட்டும், ஊன் உடம்பு-தசையோடு கூடிய வுடம்பை, எஞ்ஞான்றும் - எந்நாளும், தளர்ந்து - ஒழுக்கம் தளர்ந்து, கொள்ளான் - எடுக்கமாட்டான், எ-று.

க-ரை. கள்ளாமலும், சூதாடாமலும், கீழ்மக்களை நட்புக்கொள்ளாமலும்,பிறர் மனம் வருந்தும்படி வன்சொற் சொல்லாமலும், ஊனுண்ணாமலும், ஒருவனிருப்பானாயின், அவன் மீட்டும் பிறக்கமாட்டான் என்பதாம்.

வி-ரை. கள்ளல் - திருடல். கழுமல் - பற்றல். கரியார் - திருடர். இரங்கல் - வருந்தல். நாவாடல் - பேசுதல். உயிர் என்றது மக்களுயிரை, இரங்குதற்குரியது அதுவே யாதலான். (உக

பூவாது காய்க்கு மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார்—தாவா
விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமை செல்லு முணர்வு.

ப-ரை. பூவாது காய்க்கும் - பூவாமலே காய்க்கின்ற, மரமும் உள - மரங்களுமுள்ளன; நன்று அறிவார் - நன்மையை யறிபவர், மூவாது மூத்தவர் - ஆண்டுகளால் மூவாராயினும் அறிவினால் மூத்தவரோடொப்பர்; நூல் வல்லார்-நூல்களைக் கற்றுவல்லவர் (அப்பெற்றியரேயாவர்); தாவா - கெடாதிருக்க, விதையாமை - பாத்திகட்டி விதைக்காமலே, நாறுவ - முளைப்பனவாகிய, வித்து உள - வித்து முளவாயிருக்கின்றன; மேதைக்கு - அறிவுடையவனுக்கு, உரையாமை - பிறர் அறிவியாமலே, உணர்வு செல்லும் - அறிவுதோன்றும். எ - று.

க-ரை. பூவாமற் காய்க்குமரம்போல அறிவுடையார் ஆண்டுகளால் மூவாராயினும் அறிவினால் மூத்தவரேயாவர்; நூல்களைக் கற்று வல்லாரும் அத்தன்மையரே; பாத்திகட்டி விதைக்காமலே முளைக்கிற வித்துமுண்டு; அதுபோல, அறிவுடையார்க்குப் பிறர் அறிவியாமலே அறிவு தானேதோன்றும் என்பதாம்.

வி-ரை. பூவாது காய்க்குமரம் - பலா முதலாயின. மூவாது, மூத்தவர் என்பவற்றிற்குப் பகுதி மூ. விதையாமை நாறுவவித்து என்றது பாத்திகட்டி விதைக்காமல் தானே முளைக்கும் வித்து; அவை பறவையெச்சம் முதலாயினவற்றாலுள்ள வித்து. மேதை-பேரறிவு; அது அதனையுடையானையுணர்த்தினமையால்பண்பாகுபெயர்.(உஉ)

பூத்தாலுங் காயா மரமுமுள நன்றறியார்
மூத்தாலு மூவார்நூ றேற்றாதார்—பாத்திய

புதைத்தாலு நாறாத வித்துள பேதைக்
குரைத்தாலுஞ் செல்லா துணர்வு.

ப-ரை. பூத்தாலும்-பூத்திருந்தனவாயினும், காயா-காய்க்காத, மாமும் உள - மரங்களுமுண்டு; (அதுபோல) நன்று அறியார் - நன்மையறியாதவர், மூத்தாலும்-ஆண்டுகளால் முதிர்ந்தாலும், மூவார் - அறிவினால் முதிரார்; நூல் தேற்றாதார் - அறிவு நூல்களைக் கற்றுத் தெளியாதவர் (அத்தன்மையரேயாவர்); பாத்தி புதைத்தாலும் - பாத்திகட்டிப் புதைத்தாலும், நாறாத வித்து உள - முளைக்காத வித்துமுண்டு; (அதுபோல) பேதைக்கு - அறிவிலானுக்கு, உரைத்தாலும் - பிறர் சொன்னாலும், உணர்வு செல்லாது - அறிவு தோன்றாது, எ-று.

க-ரை. பூத்தாலுங் காய்க்காத மாமுண்டு; அதுபோல, நன்மையறியாதவர் ஆண்டின் முதிர்ந்தாலும் அறிவின் முதிரார்; அறிவு நூல்களைக் கற்றுத் தெளியாதவர் அத்தன்மையரேயாவர். பாத்தி கட்டிப் புதைத்தாலும் முளைக்காத வித்துமுண்டு; அதுபோல, அறிவிலானுக்குப் பிறர் சொன்னாலும் அறிவு உண்டாகாது என்பதாம்.

வி-ரை. பூத்தாலுங் காயாமரம் என்றது பாதிரிமா முதலானவற்றை. தேற்றாதார் - தன்வினைப்பொருளில் வந்தது. நாறல் - முளைத்தல். பேதை - அறிவிலான். (உங)

வடிவிளமை வாய்த்த வனப்பு வணங்காக்
குடிகுலமென் றைந்துங் குறித்து—முடியாத்
துளங்கா நிலைகாணார் தொக்கிர் பசுவா
விளங்காற் றுறவா தவர்.

ப-ரை. வடிவு - உருவு, இளமை - இளம்பருவம், வாய்த்த வனப்பு - பெற்ற அழகு, வணங்கா குடி - தாழாத குடிப்பிறப்பு,

குலம் - உயர்குலம், என்கிற ஐந்தும் - என்று சொல்லப்படுகிற ஐந்தும், குறித்து - தாம் குறித்து, முடியா - நுகர்ச்சி முடியப்பெற்று, துளங்கா நிலை காணார் - அழியாத நிலையைக் காணமாட்டார்; (ஆதலால்) இளங்கால் துறவாதவர் - இளம்பருவத்திலே துறவாதவர், தொக்கு - கூடி, ஈர் - பாரத்தை யிழுக்கின்ற, பகடு - எருதோடொப்பர், எ-று.

க-ரை. உருவு, இளம்பருவம், அழகு, உயர்குடி, உயர்குலம் இவ்வைந்தும் முடிவுபோக நுகர்வது அருமையாதலால், இளமைப் பருவத்திற்றுனே துறவாதவர் பாரத்தை யிழுத்துச் செல்லுகிற எருதை நிகர்ப்பர் என்பதாம்.

வி-ரை. வணங்காக்குடி யென்றமையால் உயர்குடியென் றுரைக்கலாயிற்று. வணங்கா என்பதனை குலம் என்பதன்முன் சேர்த்து உயர்குலம் என்றுரைத்துக்கொள்க. என்ற ஐந்தும் என்பது என்றைந்தும் என நிலைமொழி யீறு தொகுத்தல் பெற்றது. தொக்கு என்பதற்குப் பகுதி தொகு. துளங்கா நிலை-அசையா நிலை. ஈர்த்தல்-இழுத்தல். ஆல் - அசை. துறத்தல் - இருவகைப் பற்றுக்களையும் விடுதல். இருவகைப் பற்றுக்களாவன - அகப்பற்று புறப்பற்று என்பன. நான் என்றல் அகப்பற்று, எனது என்றல் புறப்பற்று; இவற்றை அஹங்காரம் மமகாரம் என்பர் வடநூலார். (உச)

கள்ளுண்டல் காணிற் கணவற் பிரிந்துறைதல்
வெள்கில ராய்ப்பிறரிற் சேற—லுள்ளிப்
பிறர்கரும மாராய்த லீப்பெண் கிளமைத்
திறமதுதீப் பெண்ணின் றொழில்.

ப-ரை. கள் உண்டல் - கள்ளுண்டலும், காணில் - ஆராய்ந்து பார்க்கின், கணவன் - தன் கணவனை, பிரிந்து உறைதல்-(புணர்ச்சி வேண்டாதே) பிரிந்துறைதலும், வெள்கு இலர் ஆய் - நாணுதல்

இல்லாதவராய், பிறர் இல் சேறல் - பிறர்மனைக்குச் செல்லுதலும், பிறர் கருமம் உள்ளி - பிறர் கருமத்தை நினைத்து, ஆராய்தல் - பிறருடனாராய்தலும், தீ பெண் - தீய பெண்டிரோடு, கிளைமை - சிநேகமுடைமையும், (ஆகிய ஐந்தும்) திறமது - தனக்கே யுரியதாக, தீ பெண்ணின்தொழில் - தீய பெண்டிரின் தொழில்களாம், எ-று.

க-ரை. கள்ளுண்டல், கணவனைப் பிரிந்துறைதல், பிறர் மனைக்குச் செல்லுதல், பிறர் கருமத்தைப் பிறருடனாராய்தல், தீயபெண்டிரோ டிணங்குதல் ஆகிய ஐந்தும் தீப்பெண்ணின் தொழில்களாமென்பதாம்.

வி-ரை. வெள்கு - முதனிலைத் தொழிற்பெயர். உள்ளல் - நினைத்தல். கருமம் - காரியம். ஆராய்தல்-ஆலோசித்தல். கிளைமை - உறவாந்தன்மை (இணக்கம்). திறன் - கூறுபாடு (பங்கு). பஞ்ச மகா பாதகங்களுள் ஒன்றாதலால் கள்ளுண்டலை முதற்கட் கூறினார். தீப்பெண்ணின் தொழில்கள் வேறு பலவுளவாயினும் இவ்வைந்தும் அவற்றின் மிக்கன வென்பது தோன்ற இவ்வாறு கூறலாயினர். கள்ளுண்டல் தன் மதிமயக்கத்துக்கும் தன் குடிப்பழிக்கு மேதுவாதலாலும், கணவனைப் பிரிந்துறைதல் கற்பழிவாதலாலும், பிறர்மனைக்குச் செல்லுதல் அவமான மாதலாலும், பிறர்கரும மாராய்தல் தனக்குரிய தன்மையாலும், தீப்பெண்டிரிணக்கம் தனக்குத் தீங்கு பயததலாலும் இவ்வைந்தும் 'தீப்பெண்ணின் தொழில்' என்றார். (உ௫)

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள்வெள வன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமி—ஒருங்குணர்ந்து
தீசொல்லே காமின் வருங்காலன் றிண்ணிதே
வாய்சொல்லே யன்று வழக்கு.

ப-ரை. பெருங்குணத்தார் - பெருங்குணத்தாரை, சேர்மின் - சென்றடையுங்கள்; பிறன்பொருள்-பிறன்பொருளை வெளவல்மின் -

கவராதேயுங்கள்; கருங்குணத்தார் - தீக்குணத்தாரது, கேண்மை - நட்பை, கழிமின் - விடுங்கள்; ஒருங்கு உணர்ந்து - முற்றுமறிந்து, தீ சொல்லே - (பிறரைச் சொல்லும்) தீய சொற்களையே, காமின் - (சொல்லாது) தடுங்கள்; காலன்வரும்-யமன்வருவான், திண்ணிதே-இது உண்மையே, வாய்ச்சொல்லே அன்று-இது வாய்ச் சொல்லே யன்று, வழக்கு - உண்மை வழக்கேயாம், எ-று.

க-ரை. நற்குண முடையாரைச் சேருங்கள்; பிறன்பொருளைக் கவராதேயுங்கள்; தீக்குண முடையாரை யொழியுங்கள்; தீயசொற்களை வழங்காதிருங்கள்; காலன் வருவான்; இது உண்மையென்பதாம்.

வி-ரை. பெருங்குணம் - பெருமைக் கேதுவாகிய சாந்தமுதலிய நற்குணங்கள். பிறன்-அந்நியன். அஞ்ஞானம் கருமையாதலால் கருங்குணத்தார் என்றது அஞ்ஞானிகளை. அஞ்ஞானிகள் - அறிவிலாதார். கருங்குணத்தார் கேண்மை கழிமின் என்றமையால் அவரைக் கழித்தல் சொல்லாதே யமையும். "யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்னுந் திருக்குறளின் பொருளை அடியொற்றி இவரும் 'தீச்சொல்லே காமின்' என்றார். காத்தல்-தம்மிடத் துண்டாகாது தடுத்தல்; காவாராயின், அத் தீச்சொற் பயனாகிய துன்பத்தை யநுபவிப்ப ரென்றதாயிற்று. திண்ணிது என்பதில் திண்மை உண்மை யென்னும் பொருளில் வந்தது. (உசு)

வான்குருவிக் கூடரக்கு வாலுலண்டு கோற்றருதல்
தேன்புரிந்தி யார்க்குஞ் செயலாகா—தாம்புரி இ
வல்லவர் வாய்ப்பன வென்னுரொ ரோவொருவர்க்
கெல்காதோ ரொன்று படும்.

ப-ரை. வான் குருவி கூடு - வாலிய தூக்கணங் குருவியினாற் செய்யப்படும் கூடும், அரக்கு - (பேரெறும்புகளாற் செய்யப்படும்) அரக்கும், வால்-வாலிய, உலண்டு - உலண்டு என்னும் புழுக்களால் நூற்கப்பட்ட நூலும், கோல் தருதல்-(வேறொருவகைப் புழுக்களாற் செய்யப்பட்ட) கோற்கூடும், தேன் - தேனீக்களாற் றிரட்டப்பட்ட தேன்பொதியும், (ஆகிய இவ்வைந்தும்) புரிந்து-விரும்பி, யார்க்கும்-யாவர்க்கும், செயல் ஆகா - செய்தல் முடியா; (ஆதலால்) வல்லவர் - எல்லாம் கற்று வல்லவரும், தாம் புரீஇ - தாம் விரும்பி, வாய்ப்பன என்னார் - நமக்கிவை வாய்ப்பாகச் செய்யலாமென்று கருதவுமாட்டார், ஒரோவொருவர்க்கு-ஒவ்வொருவர்க்கு, ஒல்காது - குறையாது, ஒரொன்று - ஒரோவொரு அருமையாகிய செய்கை, படும்-உண்டாயிருக்குமாதலால், எ-று.

க-ரை. தூக்கணங் குருவியின்கூடு முதலியவற்றைச் செய்தற் கருமை நோக்கி, அவற்றை, எல்லாங்கற்று வல்லவரும் செய்யலாமென்று மனத்தினால் நினைக்கவுமாட்டார் என்பதாம்.

வி-ரை. வான் என்பதற்கு அறிவினால் மேம்பட்ட என்றுரைத்தலுமாம். அரக்கு, தேன் என்பவற்றைச் செய்தற்குரிய பேரெறும்பும், தேனீக்களும் வருவித் துரைக்கப்பட்டன. உலண்டு - கோற்புழு. புரீஇ-சொல்லிசை யளபெடை. ஒல்கல் - குறைதல். படுதல் - உண்டாதல். செய்தலருமை நோக்கி, வல்லவர் வாய்ப்பனவென்னார் என்பதில் என்னார் என்பதற்குச் செய்யக் கருதவுமாட்டார் என்றுரைக்கப்பட்டது. இதனால், அற்பவுயிர்களாற் செய்யப்படுங் காரியங்கள் எல்லாங் கற்று வல்லவராலுஞ் செய்யலாகாதென்பது கூறப்பட்டது. (உஎ)

அறனட்டா னன்னெறிக்க ணிற்க வடங்கா
புறனட்டான் புன்னெறிபோ காது—புறனட்டான்

கண்டெடுத்துக் கட்களவு சூது கருத்தினாற்
பண்டெடுத்துக் காட்டும் பயின்று.

**பொழிப்புரை.** அறத்திற்குப் புறமாகிய பாவவினைகளை யுலகத்தின்கண்ணே நட்டான், சொல்லியடங்காத புல்லிய நெறியிற் போகாதே குற்றமில்லாத அறத்தினைச் சொல்லும் நூலினை யுலகத்துள்ளே நட்ட முழுதுணர்ந்த அறிவினாற் சொல்லப்பட்ட நன்னெறியின்கண்ணே நின்றொழுகுக; பாவநெறியினை நட்டவன் ஆராய்ந்தெடுத்துக் கள்ளினையும், களவினையும், சூதினையும் தன் கருத்தினாலே பயின்று பண்டுசெய்தாரை யெடுத்துக் காட்டும், எ-று. (உஅ)

ஆணாக்கம் வேண்டாதா னாசா னவற்கியைந்த
மாணாக்க னன்பான் வழிபடுவான்—மாணாக்கன்
கற்பனைத்து மூன்றுங் கடிந்தான் கடியாதா
னிற்பனைத்து நெஞ்சிற்கோர் நோய்.

**ப-ரை.** ஆண் ஆக்கம் வேண்டாதான்-பிரமசரியம் காப்பவன், ஆசான்-ஆசிரியனென்றற்குரியவன்; அவற்கு இயைந்த மாணாக்கன்-அவனுக்கேற்ற மாணவனாவான், அன்பான் - அன்புடையோனும், வழிபடுவான் - வழிபடுவோனும் என்றிருவகையர்; மாணாக்கன் - மாணாக்கனாவான், கற்பு அனைத்தும் - கற்குமளவும், மூன்றும் - காம வெகுளி மயக்கங்கள் என்கிற மூன்றையும், கடிந்தான் - ஒழித்தவனே; கடியாதான் - (அவற்றைக்) கடியாதவன், நிற்பு அனைத்தும் - நிற்குமளவும், நெஞ்சிற்கு - ஆசிரியனது மனத்திற்கு, ஓர் நோய் - ஒரு நோய்போல்வான், எ-று.

**க-ரை.** பிரமசரியங் காப்பவன் ஆசிரியனாவான், அவனை அன்புசெய்து வழிபடுவோர் முதலியோர் மாணாக்கராவார் என்பதாம்.

**வி-ரை.** ஆணாக்கம்வேண்டாமை-பிரமசரியம். ஆணாக்கம் என்றது ஆண்மக்கட்குரிய இணைவிழைச்சு முதலியவற்றை. வேண்டா

தான் - விரும்பாதவன். இவ்வாறு கூறுதலால் இணைவிழைச்சு முதலியவை யில்லாதவனே ஆசிரியனாயிருத்தற்குரியா னென்றதாயிற்று. வழிபடுவான் - ஆசிரியனேவியதை செய்வோன். காமவெகுளி மயக்கங்களை முக்குற்றமென்பர். காமவெகுளி மயக்கங்களைக் கடிந்துநின்று ஆசிரியனிடத்துக் கற்பார் நன்மாணாக்கர் என்றும், அவற்றைக் கடியாதுநின்று கற்பவர் தீமாணாக்கர் என்றும் சொல்லப்படுவர். (உக)

நெய்தன் முகிழ்த்துணை யாங்குடுமி நேர்மயிரு
முய்த லொரு திங்கள் நாளாகுஞ்—செய்த
னுணங்குநா லோதுதல் கேட்டல்மா ணாக்கர்
வணங்கி வலங்கொண்டு வந்து.

ப-ரை. (மாணாக்கர்க்கு) குடுமி-குடுமியானது, நெய்தல் முகிழ்துணை ஆம் - நெய்தல் மொட்டினளவினதாயிருத்தல் தகுதி; நேர் - நீண்ட, மயிரும் - மயிரும், உய்தல் - கழுவாதொழிதல், ஒரு திங்கள் நாள் ஆகும் - ஒருமாதகாலமாகும்; மாணாக்கர் செய்தல் - மாணாக்கர் செய்கையானது, வந்து வணங்கி - (ஆசிரியனை) வந்து தொழுது, வலங்கொண்டு - பிரதக்ஷிணஞ் செய்து, நுணங்கு நூல் ஓதுதல் - நுண்ணிய நூல்களை யோதுதலும், கேட்டல்-கேட்டலுமாம், எ-று.

க-ரை. மாணாக்கனுக்குக் குடுமி நெய்தல் மொட்டினளவாயிருத்தல்வேண்டும். அவன் தலைமயிர் ஒருமாதம்வரையிலுங் கழுவாதிருக்கலாம். ஆசிரியனை வலம்வருதலும், அவனிடத்தோதுதலும், பாடங் கேட்டலும் அவனுக்குரிய செய்கைகள் என்பதாம்.

வி-ரை. நெய்தல் - ஆம்பல். முகிழ் - மொட்டு (மொக்கு). துணை - அளவு. உய்தல் - ஒழிதல் (கழுவாதொழிதல்); அதாவது தலைமுழுகாதொழிதல். செய்தல் - செய்கை. நுணங்குதல் - நுட்பமாதல். ஓதல் - படித்தல். நேர்மயிர் - வினைத்தொகை நிலைத்தொடர். கேட்டல் - சிரவணஞ் செய்தல். (கூ0)

ஒருவ னறிவானு மெல்லாம்யா தொன்று
மொருவ னறியா தவனு—மொருவன்
குணனடங்கக் குற்றமில் லானு மொருவன்
கணனடங்கக் கற்றானு மில்.

ப-ரை. எல்லாம் அறிவான் ஒருவனும் - எல்லாவற்றையும் அறிவானொருவனும், யாது ஒன்றும் அறியாதவன் ஒருவனும் - யாதொன்றையு மறியாதானொருவனும், குணன் அடங்க இல்லான் ஆம் ஒருவனும் - குணமுழுது மில்லாதானொருவனும், குற்றம் இல்லானுமொருவன் - குற்றமுழுது மில்லாதானொருவனும், கணன் அடங்க கற்றானும் - நூற்றொகுதிமுழுதும் கற்றானொருவனும், இல் - இவ்வுலகிலில்லை, எ-று.

க-ரை. எல்லாமறிந்தவனும், யாதுமறியாதவனும், குணமில்லாதவனும், குற்றமில்லாதவனும், எல்லா நூல்களுங் கற்று வல்லவனும் உலகத்தில இல்லையென்பதாம்.

வி-ரை. அறிவானும் என்றவும்மை பிரித்து ஒருவன் என்பதனீற்றில் கூட்டப்பட்டது. அறியாதவனும் என்றவும்மை பிரித்து ஒருவன் என்பதனீற்றில் கூட்டப்பட்டது. அடங்க - முழுதும. குணம் குணன் எனவும், கணம் கணன் எனவும் போலியாயிற்று. கற்றானும என்றவும்மை பிரித்து ஒருவன் என்பதனீற்றில் கூட்டப்பட்டது. கற்றானும் என மேல்வருதலால், கணன் நூற்றொகுதியென் றுரைக்கப்பட்டது. (கக)

உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட்செய் யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி யிவைவிடுவா னாயி
னிழிவன் றினிது தவம்.

ப-ரை. உயிர்நோய் செய்யாமை - பிறிதோருயிர்க்குத் துன்பஞ் செய்யாமையும், உறுநோய் மறத்தல் - பிறவுயிர்களால் நேர்ந்த துன்பத்தை மறந்துவிடுதலும், செயிர் நோய் பிறர்கண் செய்யாமை - கோவத்தால் பிறரிடத்துத் துன்பஞ் செய்யாமையும், (ஆகிய இம் மூன்றையும் ஒருவன் உடையனாய்) செயிர் நோய் விழைவு வெகுளி- குற்றத்தைச் செய்யும் துன்பத்தைத் தருகிற ஆசையும் கோவமும் ஆகிய, இவை-இவற்றை, விடுவான் ஆயின் - விடுவானானால், தவம் - (அவன் செய்யும்) தவமானது, இழிவு அன்று - இழிவன்றி, இனிது- இன்பத்தைத் தருவதாகும், எ-று.

ப-ரை. பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யாமையும், பிறவுயிர்களால் தனக்குவந்த துன்பத்தை மறத்தலும், கோவமிகுதியால் பிறர்க்குத் தீங்குசெய்யாமையும் ஆகிய இவற்றை யுடையனாய், விழைவு வெகுளிகளை யொருவன் விட்டுவிடுவானானால், அவனுடைய தவமானது அவனுக்கு இனிதாய் முடிவுறும் என்பதாம்.

வி-ரை. உயிர் பிறர் என்றது முறையே அஃறிணையுயிரையும் மக்களையும். உயிர்நோய் செய்யாமை யுறுநோய் மறத்தல் என்பதற் கிணங்க, "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை' என்றார் பெருநாவலரும். மறத்தல் - நினைவிலு மில்லாமல் விட்டொழித்தல். விழைவு வெகுளி என்பவற்றை காமக்ரோதம் என்பர் வடநூலார். (௩௨)

வேட்பவன் பார்ப்பான் விளங்கிழைக்குக் கற்புடைமை
கேட்பவன் கேடில் பெரும்புலவன்—பாட்டவன்
சிந்தையா ளாகுஞ் சிறத்த லுலகினுட்
டந்தையா ளாகுங் குலம்.

ப-ரை. வேட்பவன் பார்ப்பான் - வேள்வி செய்பவன் பார்ப்பானவான்; விளங்கிழைக்குக் கற்புடைமை - மாதுக்குக் கற்புடைமை

சிறந்தது; கேட்பவன் - பலநூல்களையும் ஆசிரியனை யடுத்துக் கேட்பவன், கேடு இல் - அழிவில்லாத, பெரும்புலவன் - பெரியபுலவனுவான்; அவன் - அப்புலவன், சிந்தையான் ஆகும் பாட்டு - மனத்தானாராய்ந்து பாடும்பாட்டு, உலகினுள் - உலகத்தில், சிறந்தது - மேம்பட்டது; குலம் - ஒருவனது குலனுடைமை, தந்தையான் ஆகும் - அவனது தந்தையாலே அழகுபெற்று விளங்கும், எ-று.

க-ரை. யாகஞ் செய்பவன் பார்ப்பான்; கற்புடையவள் பெண்; பலநூல்கள் கேட்டறிந்தவன் பெரும்புலவன்; அவனாற் பாடப்படும் பாட்டு உலகிற் சிறந்தது; ஒருவனது குலனுடைமை யழகுபெற்று விளங்குவது அவனது தந்தையாலேயா மென்பதாம்.

வி-ரை. வேட்டல் - யாகஞ்செய்தல். விளங்கிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். கற்பு - பதிவிரதாதர்மம். குலம் - குலனுடைமை, அதாவது உயர் குடிப்பிறப்பு. (௩௩)

வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிக
னுய்ப்பானே யாசா னுயர்கதிக்கு—உய்ப்பா
னுடம்பினார் வேலி யொருப்படுத்தூ னாத்
தொடங்கானேற் சேறற் றுணிவு.

ப-ரை. வைப்பானே-பொருளை யீட்டிவைப்பவனே, வள்ளல் - வள்ளலென்று சொல்லப்படுவோன்; வழங்குவான் - அப்பொருளைப் பிறர்க்குக் கொடுப்பவனே, வாணிகன் - வாணிகனென்று சொல்லப்படுவோன்; உய்ப்பானே ஆசான் - (அக்கொடையினுலாய பயன் விளைவு மறுமைக்குத் தனக்கு விளைத்துக்கொள்ளுதலால்) ஒருவர்க்கு ஆசிரியனுவான், உயர் கதிக்கு உய்ப்பான் - உயர்கதியிற் செலுத்தவல்லோன், உடம்பின் ஆர் வேலி - உடம்பாகிய வேலியை, ஒருப்படுத்து (போக்கி)-ஒருப்படுத்து நீக்கி, ஊன் - அவற்றின்

தசையை, ஆர - உண்ண, தொடங்காரேனல் - ஆரம்பியாதாயின், சேறல் - (அவன்) உயர்கதியிற் செல்லுதல், துணிவு - உண்மையாம், எ - று.

கு-ரை. பொருளீட்டி வைப்பவன் வள்ளல்; அதனை வழங்குவோன் வாணிகன்; அக்கொடைப்பயனைத் தனக்கு விளைத்துக் கொள்வோன் ஆசிரியன்; உயர்கதியிற் செலுத்த வல்லவன் ஒருயிரை வதைத்து அதன் தசையை யுண்ணானாயின் அவன் உயர்கதியடைதல் உண்மை யென்பதாம்.

வி-ரை. வள்ளல் - வரையாது கொடுப்போன். வழங்கல் - தாராளமாகக் கொடுத்தல். வாணிகன் - வியாபாரி. உய்த்தல் - செலுத்தல். உயர்கதி - மோக்ஷம். உடம்பின் என்பதில் இன் அல்வழிச்சாரியை. ஒருப்படுத்தல் - சம்மதப்படுத்தல். ஆர்தல் - உண்டல். தொடங்காரேனல் என்பதில் எல் எனின் என்பதன் மரூஉ. சேறல் - செல்லுதல். (௩௪)

வைததனா லாகும் வசைவணக்க நன்றாகச்
செய்ததனா லாகுஞ் செழுங்குலமுஞ்—செய்த
பொருளினா லாகுமாம் போக நெகிழ்ந்த
வருளினா லாகு மறம்.

ப-ரை. வைததனால்-(ஒருவன் பிறனை) வைததனால், வசை ஆகும்-(அவனுக்கு) வசையுண்டாகும்; நன்றாக வணக்கம் செய்ததனால் - நன்மை வணக்கம் என்பவற்றைப் பிறர்க்குச் செய்ததனால், செழுங் குலமும் ஆகும்-வளமையாகிய குடிப்பிறப்புமாகும்; செய்த பொருளினால் - ஈட்டின பொருளினால், போகம் - இன்பம், ஆகும் - உண்டாகும்; நெகிழ்ந்த -(பிறர்பொருட்டுத்) தன்மனம்நெகிழ்ந்த, அருளினால் - அருள்காரணமாக, அறம் ஆகும் - அறமுண்டாகும், எ-று.

க-ரை. ஒருவனை ஒருவன் வைததனால் வசையும், வணக்கத்தால் உயர்குடிப்பிறப்பும், பொருள்செய்ததனால் இன்பமும், அருளினால் அறமும் உண்டாமென்பதாம்.

வி-ரை வைதல் - இட்டுரைத்தல். வசை - பழி. வணக்கம்-பணிவு. செய்தபொருள் என்பதில் செய்த என்பது ஈட்டிய எனப் பொருள் பட்டது. போகம் - அநுபவம் - இன்பம். நெகிழ்தல் - உருகுதல். அருள் - காரணங்கருதாது ஒருதன்மைத்தா யெல்லார்மீதுஞ் செல்லும் பெருங்கருணை. (டுரு)

இல்லியலார் நல்லறமு மேனைத் துறவறமு
நல்லியலி னாடி யுரைக்குங்கா—னல்லியற்
றானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமா
ஞானத்தால் வீடாக நாட்டு.

ப-ரை. இல் இயலார்-மனைவாழ்க்கை யியற்கையாகவுடையார் (செய்த), நல் அறமும் - நல்ல அறமும், ஏனை துறவறமும்-மற்றைத் துறந்தோர் செய்யும் நல்ல அறமும், நல் இயலின் - நன்மையாகிய முறையால், நாடி - ஆராய்ந்து, உரைக்குங்கால் - சொல்லுமிடத்து, நல் இயல் தானத்தால் போகம் - நல்லியலாகிய கொடையினால் செல்வநுகர்ச்சியும், தவத்தால் சுவர்க்கம் ஆ - தவத்தினால் சுவர்க்க நுகர்ச்சியாகவும், ஞானத்தால்-ஞானத்தினால், வீடு ஆக-வீடாகவும், நாட்டு - நிலைபெறுத்துவாயாக, எ-று.

க-ரை. இல்லறத்தார் செய்த அறமும், துறவறத்தார் செய்த அறமும், ஆராயின், கொடையால் செல்வநுகர்ச்சியும், தவத்தால் சுவர்க்கமும், ஞானத்தால் வீடும் பெறுவரென்பதாம்.

வி-ரை. இல்-இல்வாழ்க்கை. இயலார் - இயல்பாகவுடையவர். நல்லியல்-நன்மையாகிய முறைமை, அதாவது ஒருபாற்கோடாமை.

(நடுவுநிலைமை). தானம் - கொடுத்தல். போகம்-இன்பநுகர்ச்சி. வீடு-முத்தி. (௩௬)

மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பு
முகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

ப-ரை. மயிர் வனப்பும்-தலைமயிரா லுண்டாகும் அழகும், கண் கவரும்-(கண்டாரது) கண்களைக் கவர்தற்குரிய, மார்பின் வனப்பும்-மார்பினாலுண்டாகும் அழகும், உகிர் வனப்பும் - நகத்தாலுண்டாகும் அழகும், காதின் வனப்பும் - செவியினாலுண்டாகும் அழகும், செயிர் தீர்ந்த - குற்றம் நீங்கின, பல்லின் வனப்பும் - பல்லினாலுண்டாகும் அழகும், வனப்பு அல்ல - அழகல்ல; நூற்கு இயைந்த - நூல்கட்குப் பொருந்திய, சொல்லின் வனப்பே - சொல்லழகே, வனப்பு - அழகாகும், எ-று.

க-ரை. தலைமயிரினழகும், மார்பினழகும், நகத்தினழகும், செவியினழகும், பல்லினழகும் ஆகிய இவற்றினும், நூல்களிலுள்ள சொல்லழகே சிறந்த தென்பதாம்.

வி-ரை. மயிர்வனப்பு என வாளாகூறினாரேனும், அது ஆண்மக்கள் பெண்மக்களுடைய தலைமயிரையே குறித்தது. கண் கவர்தலாவது - பிறிதோரிடத்துச் செல்லாது தன்னிடத்தே பதிந்து பறிப்பரிதாய் நிற்குமாறு பார்ப்பவர்கள் கண்களை வயப்படுத்தல். மயிர் வனப்பு முதலிய ஐவகைவனப்பினும் கல்வியழகே சிறந்ததென்றற்கு இவ்வாறு கூறினார். இளமைப்பருவத்திலுள்ள மயிர்வனப்பு முதலியவை முதுமைப்பருவத்தில் நரை முதலியவற்றாற் கெட்டொழிதல் போலாது, கல்வியழகு மேன்மேலுஞ் சிறந்து நிற்றலால், 'நூற்கியைந்தசொல்லின் வனப்பேவனப்பு' என்றார். இதற்குதாரணம்: நாலடி

யார், "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு, மஞ்ச ளழகு மழகல்ல-நெஞ்சத்து, நல்லம் யாமென்னு நடுவு நிலைமையால், கல்வி யழகே யழகு." (௩௭)

தொழீஇ யட வுண்ணார் தோழரிற் றுஞ்சார்
வழீஇய பிறர்பொருளை வௌவார்—கெழீஇக்
கலந்தபிற் கீழ்காணார் காணாய் மடவாய்
புலந்தபிற் போற்றார் புலை.

ப-ரை. தொழீஇ - தொழுத்தையானவள், அட - சமைத்து வைக்க, உண்ணார் - (அவ்வுணவை அறிவுடையார்) உண்ணமாட்டார்; தோழர் - நண்பரது, இல் - வீட்டில், துஞ்சார் - (தனியே புகுந்து) உறங்கமாட்டார்; வழீஇய - மறந்த, பிறர் பொருளை - பிறரது பொருள்களை, வௌவார் - கவர்ந்துகொள்ளமாட்டார்; கெழீஇ - தழுவி, கலந்தபின் - சிலரைநட்டபின்பு, கீழ் - (அவரது) கீழ்மையாகிய குணத்தை, காணார் - ஆராய்ந்து பார்க்கமாட்டார்; புலந்தபின் - (சிலரொடு) பகைத்தபின்பு, புலை - (அவரது) கீழ்மைக் குணத்தை, போற்றார் - போற்றுது அவரை வஞ்சித்துக் கெடுப்பார், எ-று.

க-ரை. தொழுத்தை சமைத்ததை யுண்டலும், தோழர்வீட்டில் தனியேபுகுந்துறங்கலும், பிறர்மறந்துவைத்த பொருளைக் கவர்ந்து கொள்ளலும், ஒருவரைச சிநேகித்த பின்பு அவரது தீக்குணத்தை யாராய்தலும், ஒருவரைப் பகைத்தபின்பு அவரை வஞ்சித்துக் கெடுக்காது அவரது இழிகுணத்தைப் போற்றுதலும் அறிவுடையார் செயல்களன்றென்பதாம்.

வி-ரை. தொழுத்தை - அடிமைப்பெண். அடல் - சமைத்தல், வழுவிய எனற்பாலது வழீஇயவென அளபெடுத்தது. இது சொல்லிசையளபெடை. கெழீஇ என்பதுமது. காணாய் - பாராய். மடவாய்.

மகடூஉ முன்னிலை. இவ்வாறு மகடூஉ முன்னிலையாய்க் கூறல் கவி மரபு. இது "பல்லவத்தின் சந்தமடிய வடியான் மருட்டிய தாழ் குழலே", "வேய்புரையு மென்றோளி", "சிறுநுதற் பேரமர்க்கட் செய்ய வாயைய நுண்ணிடையாய்", "வாரும்வட முந்துயிலு முகிண்முலை வாணுதலே" என்றற்றொடக்கத்தனவற்று லினிது விளங்கும். புலத்தல் - பகைத்தல். (நஅ)

பொய்யாமை நன்று பொருணன் றுயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்கால்—பல்லார்முற்
பேணாமை பேணுந் தகைய சிறிதெனினு
மாணாமை மாண்டார் மனம்.

ப-ரை. பொய்யாமை - பொய்சொல்லாதிருத்தல், நன்று - (ஒருவற்கு) நன்மையாம்; பொருள்நன்று-பொருள் செய்தல் நன்மையாம்; உயிர்-பிறிதோருயிர், நோவ - வருந்த, கொல்லாமை - கொல்லாதிருத்தல், நன்று - நன்மையாம்; கொழிக்குங்கால் - ஆராயுமிடத்து, பேணும் தகைய-(ஒருவன் தான்) விரும்புந் தன்மையவற்றை, பல்லார்முன் பேணாமை - பலரறிய விரும்பாமை, (நன்று - நன்மையாம்); மாண்டார்-மாட்சிமைப்பட்டாரது, மனம்-மனமானது, சிறிது எனினும் - சிறிதாயினும், மாணாமை-(மனைவாழ்க்கைக்கு மீள்கைக் கண்) ஒருப்படாமை, (நன்று - நன்மையாம்), எ-று.

க-ரை. ஒருவன் பொய் சொல்லாதிருத்தலும், பொருள்செய்தலும், பிறிதோருயிரைக் கொல்லாதிருத்தலும், தான் விரும்புமவற்றைப் பலரறிய விரும்பாமையும், தவசிகளுடைய மனம் இல்வாழ்க்கையில் மீளாமையும் நன்மையென்பதாம்.

வி-ரை. பொய்யாமை - எதிர்மறைத் தொழிற்பெயர்; உடன் பாட்டில் பொய்த்தல் எனவரும். பொய்யாமை யென்பதற்கு மெய்

சொல்லுதல் என்பது பொருள். பொருணன்று என்பதில் செய்த வென வொருசொல் வருவித்துச் சேர்த்துரைக்கப்பட்டது. கொழித்தல்-ஆராய்தல். பேணல் - விரும்பல். மாண்டார் - மாட்சிமையுடையவர், மனமிறந்தவர் எனினுமாம். பொய்யாமை நன்று என்றதனால் பொய்த்தல் தீது என்பதும், பொருணன்று என்றதனால் பொருள் செய்யாமை தீது என்பதும், கொல்லாமை நன்று என்றதனால் கொல்லுதல் தீது என்பதும், பேணாமை நன்று என்றதனால் பேணுதல் தீது என்பதும், மாணாமை நன்று என்றதனால் மாண்டல் தீது என்பதும் பெறப்பட்டன. (௩௧)

பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லா
ருண்டா ரடிசிலே தோழரிற்—கொண்டாரா
யாக்கைக்குத் தக்க வறிவில்லார்க் காப்படுப்பிற்
காக்கைக்குக் காப்படுத்த சோறு.

ப-ரை. பண்டாரம் - பண்டாரத்தினையும், பல் கணக்கு - பல கணக்கினையும், கண்காணி - கண்காணியையும், இல்லார் - தன் சோயிலினுள்ளுறையு மங்கையரையும், உண்டு ஆர் அடிசில்-தனக்குண்ணவாக்கு முணவினையும், பாத்து-பகுத்து, யாக்கைக்கு தக்க-மக்களுடம்பிற்குத்தக்க, அறிவில்லார்-அறிவிலாரையும், தோழரின் கொண்டாராய் - தன்தோழரைப்போலக் கொண்டவராய், கா படுப்பின் - காவாவிடின், (அக்காவல்) காக்கைக்கு-காகத்திற்கு, சோறு காப்பு அடுத்த - சோற்றுக்காவலமைந்தாற்போலும், எ-று.

க-ரை. பண்டார முதலியோரைக் காவாவிடின், அக்காவல் சோற்றுக்காவற் றொழிலைக் காகத்திற் கிட்டாற்போலும் என்பதாம்.

உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி—நடையிட்டா

ரிவ்வகை யைவரையு மென்று மணுகாரே
செவ்வகைச் சேவகர் சென்று.

ப-ரை. உடை இட்டார் - (தமக்கஞ்சி) உடுத்த புடவையைப் போகவிட்டவர், புல் மேய்வார் - புற்பறித்து வாயிலிட்டார், ஓடு நீர் புக்கார்-ஓடுகிற நீரிற் புகுந்தவர், படை இட்டார்-கைப்படையை விட்டவர், பற்று ஏதும் இன்றி - பற்றுச் சிறிதுமில்லாமல், நடையிட்டார் - (ஓடமாட்டாது) நிலைதளர்ந்திருந்தவர், இவ்வகை ஐவரையும் - இவ்வகைப்பட்ட ஐவரையும், செவ்வகை சேவகர் - செவ்வகையினராகிய சேவகர், என்றும் - எந்நாளும், சென்று - தீங்குசெய்யச் சென்று, அணுகார் - சேரமாட்டார், எ-று.

க-ரை. உடுக்கையிழந்தவர் முதலிய ஐவரையும் வருத்தாதொழிதல் வீரர்க்குரிய தருமமென்பதாம்.

வி-ரை. உடை-உடுக்கை, தொழிலாகுபெயர்; இது ஆடையென்னும் பொருளுணர்த்துவது. படை - படுத்தற்குரியது. படுத்தல்-சொல்லுதல். ஆயுதம் என்பது பொருள். செவ்வகைச் சேவகர் என்றது-அறம்பொருள் செய்யுஞ்சேவகரை. இவர் உடையிட்டார் முதலிய ஐவரையும் சென்றணுகி வருத்தலாகாதென்பதிதனாற் போந்த பொருள். (சக)

பூவாதாள் பூப்புப் புறக்கொடுத் தாளிலிங்கி
யோவாதாள் கோல மொருபொழுதுங்—காவாதாள்
யாரியார் பிறர்மனையா ளுள்ளிட்டிவ் வைவரயுஞ்
சாரார் பகைபோற் சலித்து.

ப-ரை. பூவாதாள் - பூப்பில்லாத கன்னியும், பூப்பு புறக்கொடுத்தாள் - பூப்புத் தவிர்ந்தவளும், இலிங்கி - இலிங்கியும், ஒருபொழுதும் - ஒருகாலத்தும், கோலம் ஓவாதாள் காவாதாள் - கோலஞ்செய்

தலை யொழியாதவளாய்த் தன் கற்பைக்காவாத வேசையும், யார் யார் பிறர் மனையாள்-பிறராகிய யாவர்க்குமுரிய மனையாளும், உள்ளிட்ட இ ஐவரையும் - உள்ளிட்ட இந்த ஐவரையும், பகைபோல் சலித்து - பகைவரைப்போல வெறுத்து, சாரார் - (அறிவுடையார்) சேரார் எ - று.

க-ரை. பூப்பில்லாத கன்னி, பூப்பொழிந்தவள், இலிங்கி, வேசை, பிறன்மனைவி என்னும் இவ்வைவரையும் அறிவுடையார் சேரார் என்பதாம்.

வி-ரை. பூவாதாள்-திரளாதபெண். பூப்புப்புறக்கொடுத்தாள் - பூப்பு நின்றுவிட்டவள். இலிங்கி-தவஞ்செய்யுங் கன்னிகை. தன்னை யெப்பொழுதும் அலங்கரித்துக்கொண்டு, ஆடவரை மயக்குமவளாதலாலும், கற்புப்பேணாதவளாதலாலும், வேசையை, 'ஓவாதாள்கோல மொருபொழுதுங் காவாதாள்' என்றார். உள்ளிடல் - அடக்கல். சலித்தல் - வெறுத்தல். பகைபோல் - பகைவரை வெறுத்தல்போல. சார்தல் - பொருந்தல். பகை - பண்பாகுபெயர். (சஉ)

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

ப-ரை. வருவாய்க்கு தக்க வழக்கு அறிந்து - தம் கணவரது வருவாய்க்குத் தகுதியையும் அதற்கேற்ப வழங்குதலையும் அறிந்து, சுற்றம் வெருவாமை வீழ்ந்து - சுற்றத்தார் வெருவாவண்ணம் அவர்களை விரும்பித்தழுவி, விருந்து ஓம்பி - விருந்தினரை உபசரித்து, திருவாக்கும் - செல்வத்தை மேன்மேலும் உயரச்செய்கிற, தெய்வத்தை - தேவதையை, எஞ்ஞான்றும் - எந்நாளும், தேற்றம் தெளி

வாகிய, வழிபாடு செய்வதே-வழிபடுதலைச் செய்வதே, பெண்டீர் சிறப்பு - மாதர்க்குச் சிறப்பாவன, எ-று.

க-ரை. தம் கணவரது வருவாயினளவை யறிதலும், அதற்கேற்ப வழங்குதலும், சுற்றத்தாரைத் தழுவலும், விருந்தினரை யுபசரித்தலும், தெய்வவழிபாடும், ஆகிய இவ்வைந்து தொழில்களும் மாதர்க்குச் சிறப்பாவன வென்பதாம்.

வி - ரை. வருவாய் - வருமானம். வழக்கு - வழங்கல், அதாவது செலவுசெய்தல். சுற்றம் - சூழ்ந்திருப்பவர், இது தொழிலாகு பெயர். வெருவாமை - எதிர்மறை வினையெச்சம். விருந்து - பண்பாகு பெயர். ஓம்புதல்-உபசரித்தல். தெற்ற எனப் பாடமோதி சடக்கெனவெனப் பொருள்கூறலுமாம். வழிபாடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்; முதனிலை வழிபடு. சிறப்பைத் தருமவற்றைச் சிறப்பென்றார் கருவியாகுபெயரான். (சரு)

நாள்கூட்ட மூர்த்த மவற்றோடு நன்றாமக்
கோள்கூட்டம் யோகங் குணனுணர்ந்து—தோள்கூட்ட
லுற்றானு மல்லா னுமைந்து முணர்வானும்
பெற்றானட் கொளக பெரிது.

ப-ரை. நாள் கூட்டம் - நாட்பொருத்தம், மூர்த்தம் - முகூர்த்தம், அவற்றோடு-அவற்றுடனே, நன்றாம்-நன்மையாகிய, அ கோள் கூட்டம் - அந்தக் கிரகப்பொருத்தம், யோகம்-யோகமும், குணன்-(இவற்றாலுண்டாகிற) நன்மையும், உணர்ந்து-ஆராய்ந்தறிந்து, பெற்றால்-(இவையைந்தும் நன்மையாயிருக்கிற) நாளைப் பெற்றால், ஐந்தும் உணர்வான்-இவ்வைந்தனையு மறிந்து சிலநன்மையாகிய காரியங்களைச் செய்வோனும், தோள்கூட்ட லுற்றானும் - (ஒருவனோடொருத்தியைத்) தோள் கூட்டலுற்றவனும், பெரிது நாள் கொள்க - மிகவும் நல்லநாளாகக் கொள்க, எ-று.

க-ரை. ஒருவனே டொருத்தியைச் சேர்க்கலுற்றவனும், வேறு சில நற்காரியங்களைச் செய்யலுற்றவனும், நாட்பொருத்த முதலிய வைந்தும் நன்மையா யமையப்பெற்ற நாளை யாராய்ந்தறிந்து, அந்த நாளை நல்லநாளாகக் கொள்க என்பதாம்.

வி-ரை. மூர்த்தம் - நன்முகூர்த்தம். கிரகம் - ஞாயிறு முதலாயின. தோள்கூட்டல் - தோள் புணர்வித்தல். "நலக்குரியார் யாரெனி னுமநீர் வைப்பிற் - பிறர்க்குரியா டோடோயா தார்" என்பது திருக்குறள். நாட்கொள்ளல் - நன்னாளாகக் கோடல். (சச)

பேணடக்கம் பேணுப் பெருந்தகைமை பீடுடைமை
நாணொடுக்க மென்றைந்து நன்றாகப்—பூணொடுக்கம்
பொன்வரைக்கோங் கேர்முலைப் பூந்திருவே யாயினுந்
தன்வரைத் தாழ்த்த லரிது.

ப-ரை. பேண் - உறவினரைப் பேணலும், அடக்கம்-அடக்கமுடைமையும், பேணு - (பிறனொருவனைப்) பேணுதை, பெருந்தகைமை - பெருந்தன்மையும், பீடு உடைமை - பெருமையுடைமையும், நாண் ஒடுக்கம் - நாணத்தாலுண்டாகும் ஒடுக்கமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட ஐந்தனையும், (பொருந்தாது), பூண் ஒடுக்கம் - பூணடங்கின, பொன்வரை-பொன்மலைபோன்ற, கோங்கு ஏர்-கோங்கரும்பி னழகையுடைய, முலை - தனங்களையுடைய, பூ திருவே ஆயினும்-தாமரைமலரில் வாழ்கின்ற இலக்குமியேயாயினும், தன்வரை - (தன் கொழுநனைத்) தன்னளவின், தாழ்த்தல்-தாழ்த்துதல், அரிது - (நன்மையாதல்) இல்லை, எ-று.

க-ரை. ஒருத்தி, திருமகளை நிகர்த்தவளேயாயினும், சுற்றந் தழால் முதலிய ஐந்தனையும் கைவிட்டுத் தன்கணவனைத் தன்னளவிற் றாழ்த்துதல், அவனுக்கு நன்மையைத் தருதலில்லை யென்பதாம்.

வி-ரை. பேண் - முதனிலைத்தொழிற்பெயர். அடக்கம் - ஒடுக்கம்; பகுதி அடங்கு. பேணல் - காத்தல். பீடு - பெருமை. பூண் - ஆபரணம். பொன்வரைக் கோங்குசேர்முலை என்பதற்குப் பொன்மலையும் கோங்கரும்புமாகிய இவற்றினழகையுடைய தனம் எனினுமமையும். பூ - செந்தாமரைமலர் எனக்கொள்க மேல் திருவென வருதலான். தாழ்த்தல் - கீழ்ப்படுத்தல். அரிது ஈண்டின்மை குறித்தது.

வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலு
நீர்சான் றுயரவே நெல்லுயருஞ் - சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்
ஓவா துரைக்கு முலகு.

ப-ரை. வார்சான்ற - நீட்சிமிகுந்த, கூந்தல் - கூந்தலையுடையாய், வரம்பு - வயல்வரம்பு, உயர - உயரவே, நீர்சான்று - நீர்நிறைந்து, உயரவே - உயர்ந்துவரவே, நெல் உயரும் - நெல் உயர்ந்து விளையும்; சீர் சான்ற - சிறப்புமிக்க, தாவா - அழியாத, குடி உயர - குடிகள் உயரவே, தாங்கு அரு - பகைவரால் தாங்குதற்கரிய, சீர் - சிறப்பினையுடைய, கோ - அரசன், உயரும் - உயர்வான், (என்று) உலகு - இவ்வுலகமானது, ஓவாது உரைக்கும் - ஒழியாமற் சொல்லிநிற்கும் எ-று.

க-ரை. வரம்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோனுயர்வான் என்பதாம்.

வி-ரை. வார் - நீட்சி. சான்ற - சால என்னு முரிச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம். வரம்பு என வாளா கூறினாரேனும், மேல் வருவனவற்றிற் கேற்ப, வயல்வரம்பு என்றுரைக்கப்பட்டது. சான்று சால என்னு முரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். இது உயர வென்னும் வினைகொண்டது. தாவா எதிர்மறைப் பெயரெச்சம். இது குடியென்னும் பெயர்கொண்டது. கோ என்னும் ஓரெழுத்

தொருமொழி னகரச் சாரியை பெறாது கோ என்றே நின்றது. என்று என ஒருசொல் வருவித் துரைக்கப்பட்டது. ஒவாது என்னும் வினையெச்சம் உரைக்கும் என்னும் வினைகொண்டது. தாவா ஓயாது என்பவற்றிற்குப் பகுதிகள் முறையே தா ஓ. உலகு இட வாகுபெயராய் உலகிலுள்ளாரை யுணர்த்திற்று. உலகு-உயர்ந்தோர் எனினுமாம். வார்சான்ற கூந்தல்-அண்மைவிளி, மகடூஉ முன்னிலை.

அழியாமை யெத்தவமுஞ் சார்ந்தாரை யாக்கல்
பழியாமை பாத்தல்யார் மாட்டு—மொளியாமை
கன்றுசா வப்பால் கறவாமை செய்யாமை
மன்றுசார் வாக மனை.

ப-ரை. எ தவமும் - எவ்வகைப்பட்ட தவத்தினையும், அழியாமை - கெடுக்காமையும், சார்ந்தாரை - தம்மை வந்தடுத்தவரை, ஆக்கல் - உயரச்செய்தலும், பழியாமை - பிறர்தம்மைப் பழியாமல், யார்மாட்டும் - யாவரிடத்தும், ஒளியாமை - மறைக்காமல், பாத்தல்- பகுத்துண்டலும், கன்று சாவ - கன்று இறத்தலும்,பால்கறவாமை- (அந்தக்கன்றையீன்ற தாய்ப்பசுவின்) பாலைக்கறவாமையும், மன்று சார்வு ஆக - மன்றையடுத்திருக்க, மனை செய்யாமை - மனையெடாமையும், (ஆகிய இவை நன்மையென்று சொல்லுவர் பெரியோர்), எ-று.

க-ரை. தவத்தை யழிக்காமையும், அடைந்தாரை யாக்குதலும், பகுத்துண்டலும், கன்றுசெத்தபசுவைப் பால்கறவாமையும், மன்று சார்வாக மனையெடாமையும் நற்செயல்களா மென்பதாம்.

வி-ரை. தவத்தையழித்தலாவது-தவத்திற்கு இடையூறு செய்தல். தவத்திற் கிடையூறுசெய்தல் மஹாபாதகமாதலால் அழியாமை யெத்தவமும் என அதனை முற்கூறிவற்புறுத்தினர் பழியாமை-எதிர்மறைத் தொழிற்பெயான்று. எதிர்மறை வினையெச்சம். இதுவும்

ஒளியாமையும பார்த்தல் என்னும் வினைகொண்டு முடிந்தன. கன்று சாவ என்றதனுல் பால் கறவாமை யென்றது அதன் தாயப் பசுவி னிடத்தென்பது பெறப்பட்டது. மன்று - சபை. நீதித்தலம் எனி னுமாம். மனைசெய்தல - வீடெடுத்தல் (வீடுகட்டுதல்). (சஎ)

நசைகொல்லார் நச்சியார்க் கென்றுங் கிளைஞர்
மிசைகொல்லார் வேளாண்மை கொல்லா—ரிசைகொல்லார்
பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய் நன்குணர்ந்தா
ரென்பெறினுங் கொல்லா ரியைந்து.

ப-ரை. நசியோர்க்கு - தம்மை விரும்பினவரது, நசை - விருப் பத்தை, என்றும் - எக்காலத்தும், கொல்லார் - கொல்லமாட்டார்; கிளைஞர்மிசை - தங்கிளைஞர் மிசையுமிசையை, கொல்லார்-கொல்ல மாட்டார்; வேளாண்மை கொல்லார் - உபகாரத்தைக் கொல்லமாட் டார்; இசை கொல்லார் - தமக்குவரும் புகழைக் கொல்லமாட்டார்; நன்கு உணர்ந்தார் - அறத்தை யறிந்தவர், என்பெறினும் - எவ்வின் பத்தைப் பெறலாயிருப்பினும், இயைந்து - மனமிசைந்து, கொல் லார் - ஒருயிரையுங் கொல்லமாட்டார்; பொன் பெறும் - பொன்னிற த்தைப்பெற்ற, பூ - அழகாகிய, சுணங்கின் - தேமலையுடைய, மெல் முலையாய் - மெல்லிய தனங்களையுடையாளே, எ-று.

க-ரை. நன்குணர்ந்தார், நசைகொல்லார், கிளைஞர்மிசைகொல் லார், வேளாண்மை கொல்லார், இசைகொல்லார், ஒருயிரையுங் கொல்லார் என்பதாம்.

வி-ரை. நசை - விருப்பம். கொல்லல் - கெடுத்தல். கிளைஞர் - உறவினர். மிசை - மிசையப்படுவது (சோறு); மிசைதல் - உண்டல். வேளாண்மை - ஒருவர் தமக்குச் செய்தநன்றி, என்பெறினும் என் றது எவ்வகைப்பட்ட மேம்பாட்டினைப் பெறலாயிருப்பினு மென்ற

படி. பொன்பெறுஞ் சுணங்கின் மென்முலையாய் என்றது மகடூஉ முன்னிலை. நன்கு என்றது தருமத்தை, அதனினுமிக்க நன்மை பயப்பதொன் றின்மையான். (௨௮)

நீண்டநீர் காடு களர்நிவந்து விண்தோயு
மாண்ட மலைமக்க ளுள்ளிட்டு—மாண்டவ
ராய்ந்தன வைந்து மரணா வுடையானை
வேந்தனா நாட்டல் விதி.

ப-ரை. நீண்ட நீர் - மிகுந்த நீரும், காடு - காடும், களர் - சேறும், நிவந்து விண் தோயும் - உயர்ந்து ஆகாயத்தைத் தொடுகிற, மாண்டமலை - பெரியமலையும், (மாண்ட) மக்கள் - மாட்சிமைப்பட்ட காலாட்களும், உள்ளிட்டு - அகப்படுத்து, மாண்டவர் - பெரியோர், ஆய்ந்தன - ஆராய்ந்தெடுத்தனவாகிய, ஐந்தும் - இவ்வைந்தனையும், அரண் ஆ உடையானை - தனக்கு அரணாகவுடையவனை, வேந்தன் ஆ நாட்டல் - அரசனாக நியமித்தல், விதி - விதியாகும், எ-று.

க-ரை. நீர், காடு, சேறு, மலை, காலாட்கள் என்னுமிவ் வைந்தனையும் தனக்கரணாக வுடையவனை அரசனாக நியமித்தல் விதியாகு மென்பதாம்.

வி-ரை. நீண்ட நீர் - ஆழ நீளங்களுள்ள நீர், காடு - குறுங்காடு பெருங்காடுகள். களர் - காலாழுஞ் சேற்றுநிலம். மாண்டமலை - "விசும்பினுங்கேணி நெறியன்ன சின்னெறிமேல் மழைதூங், கசும்பினிற் றுன்னியளை நுழைந்தா லொக்குமைய மெய்யே, இசும்பினிற் சிந்தைக்கு மேறற்கரிது" என்றபடியே, பகைவாணுகாமை வெருவி யோட்டெடுத்தற் குரியமலை. மாண்டமக்கள் - போர்த்தொழிலிற் கைவந்தமக்கள். மாண்டவர் - கல்வி கேள்வி யறிவொழுக்கங்களிற் சிறந்தவர். மாண் தவர் எனப்பிரித்து, மாட்சிமைப்பட்ட தவத்தினை

யுடையவர் என்றுரைத்தலுமாம். மாண்ட என்னும் அடை மக்களுக்குங் கூட்டப்பட்டது. அரண் - காவல். விதி - முறைமை. (௪௯)

பொச்சாப்புக் கேடு பொருள்செருக்குத் தான்கேடு
முற்றாமை கேடு முரண்கேடு—தெற்றத்
தொழின்மகன் றன்னொடு மாறாயி னென்று
முழுமகற்குக் கேடி னுரை.

ப-ரை. பொச்சாப்பு கேடு - மறதி கேடாம்; பொருள் செருக்கு கேடு - பொருள் மிகுதியா யுடைமையாற் களித்தல் கேடாம்; முற்றாமை கேடு - தான் அறிவு முதிராமை கேடாம்; முரண் கேடு - பிறரொடு மாறுபடுதல் கேடாம்; தெற்ற-தெளிவாக, தொழில் மகன் தன்னொடு - தனக்குத் தொழில்செய்யு மகனோடு, மாறு ஆயின் - மாறுபட்டுச் சீறுவனாயின், என்றும் - எந்நாளும், உழுமகற்கு - உழுமகனுக்கு, கேடின் உரை - கேடாகச் சொல்லக்கடவை; எ-று.

க-ரை. மறதி, பொருட்செருக்கு, பேரறிவின்மை, முரண், தொழின்மகனோடு மாறுபடல், இவ்வைந்தும் உழுமகன் உடையனாயின், அவன் கெட்டொழிதல் திண்ணமென்பதாம்.

வி-ரை. பொச்சாப்பு - கடைப்பிடி யின்மை; கடைப்பிடி - கருமமுடிக்குந் துணிவு. பொருள் செருக்கு-பொருள் மிக்குடைமை யான்வருஞ் செருக்கு. செருக்கு - களிப்பு. செருக்குத்தான் கேடு என்பதில் தான் அசை. தொழின்மகன் றன்னோடு என்பதில் தன் சாரியை. முற்றல்-அறிவு முதிர்தல். முரணல்-பகைத்தல். தொழின் மகன்-வேலைக்காரன். மாறுபடல் சீறுதற்காதலால், மாறாயின் என்பதற்கு மாறுபட்டுச் சீறுவனாயின் எனப்பொருள் கூறலாயிற்று. உழுமகன் - உழுதொழில் செய்து வாழுமகன். கேடினுரை - கேடாகச் சொல்லுக எனப் பொருள்படலால் இன் அல்வழிச்சாரியை. (௫௦)

கொல்லாமை நன்று கொலைதீ தெழுத்தினைக்
கல்லாமை தீது கதந்தீது— நல்லார்
மொழியாமை முன்னே முழுதுங் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி.

ப-ரை. கொல்லாமை நன்று - ஒருயிரையுங் கொல்லாமை நன்மையாம்; கொலை தீது - கொல்லுதல் தீமையாம்; எழுத்தினை கல்லாமை தீது - எழுத்தைக் கற்றுக்கொள்ளாமை தீமையாம்; கதம் தீது - பிறரைக் கோபித்தல் தீமையாம்; நல்லார் மொழியாமை முன்னே - அறிவுடையார் தமக்குச் சொல்வதற்கு முன்பே, கிளைஞர் முழுதும் பழியாமை - தன்னைச் சேர்ந்தவரெல்லாரும் பழியாதவழியொழுகுவான், பல்லார் - பலர்க்கும், பதி - இறைவனாதற்குரியன், எ-று.

கு-ரை. ஒருயிரையுங் கொல்லாதிருத்தல் நன்மை, கொல்லுதல் தீமை, எழுத்தைக் கல்லாமை தீமை, கோவம் தீமை, அறிவுடையார் சொல்வதற்கு முன்பே ஒருவராலும் பழிக்கப்படாத நல்வழியில் நடத்தலையுடையோன் பலர்க்கும் இறைவனாயிருத்தற்குரியன் எனபதாம்.

வி-ரை. "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்."

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங், கொல்லாமை சூழு நெறி."

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற், செல்லா துயிருண்ணுங் கூற்று."

"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்கதான்பிறி, தின்னுயிர் நீக்கும் வினை."

என்றற் றொடக்கத் தான்றோர் செய்யுட்களான் மிகச் சிறந்தெடுத்துக் கூறப்பட்டமையான், இவரும் 'கொல்லாமை நன்று' என்றார். கொலை - தொழிற்பெயர். எழுத்தினைக் கல்லாமை - வித்தையைக் கல்லாமை. கதம் - கோவம். பதி - தலைவன். (கக)

உண்ணாமை நன்றவா நீக்கி விருந்துகண்மா
றெண்ணாமை நன்றிகழ் றீதெளியா—ரெண்ணி
னரியரா வார்பிறரிற் செல்லாரே யுண்ணார்
பெரியரா வார்பிறர் கைத்து.

ப-ரை. அவா நீக்கி - (துறந்து) அவாவினை யொழித்து, உண்ணாமை - உண்ணாது நோற்றல், நன்று - நன்மையாம்; விருந்து - விருந்தினரை, கண்மாறு எண்ணாமை - கண்மாறுதல் நினையாமை, நன்று - நன்மையாம்; எளியார் இகழல் - தம்மி னெளியாரை யிகழ்ந்துரைத்தல், தீது - தீமையாம்; எண்ணின் - ஆராயுமிடத்தில், அரியர் ஆவார் - பெறுதற் கரியராவார் (யாரெனின்), பிறர் இல் செல்லாரே-பிறரில்லாளை விரும்பி அவரிடத்திற் செல்லாதவரே; பெரியர் ஆவார் - பெரியராவார் (யாரெனின்), பிறர் கைத்து உண்ணார் - பிறர்பொருளை யுண்ணாதவரே, எ-று.

க-ரை. ஆசை யொழித்துத் துறந்து உண்ணாது நோற்றல் நன்மை; விருந்ினரைக் கண்ணோட்டஞ் செய்தல் நன்மை; எளியாரை யிகழ்தல் தீமை; பிறர்மனை நோக்காதவர் அரியர்; பிறர்பொருளுண்ணாதவர் பெரியர் என்பதாம்.

வி-ரை. உண்ணாமை நோற்றற்கே யாதலால், உண்ணாமையென்பதற்கு உண்ணாது நோற்றல் என்றுரை வரையலாயிற்று. விருந்து - பண்பாகுபெயர். கண்மாறெண்ணாமை - கண்ணோட்டஞ் செய்தல். எளியார் இகழ்தல் என்றமையால் தம்மினெளியா ரென்பது தானே பெறப்பட்டது. இல் - இடவாகுபெயர். கைத்து - பொன் (பொருள்). (கஉ)

மக்கட் பெறுதன் மடனுடைமை மாதுடைமை
யொக்க வுடனுறைத லூணமைவு—தொக்க
வலவலை யல்லாமை பெண்மகளிர்க் கைந்து
தலைமகனைத் தாழ்க்கு மருந்து.

**ப-ரை.** மக்கள் பெறுதல் - தான் மக்களைப் பெறுதலும், மடன் உடைமை - அடக்க முடைமையும், மாது உடைமை - அழகுடைமையும், ஒக்க உடன் உறைதல் - (கணவனது) கருத்துக்கிசைய அவனோடுறைதலும், ஊண் அமைவு-(அவனுண்ணும்) உணவினை விரும்புதலும், தொக்க - கூடிய, ஐந்து - ஐந்து குணங்களும், அலவலை அலலாமை - அற்ப காரியங்களல்லாமையால், பெண் மகளிர்க்கு - பெண்டிர்க்கு, தலைமகனை - தம்கொழுநனை, தாழ்க்கும் - தம்மிடத்தில் வணக்குகிற, மருந்து - மருந்தாகும்; எ-று.

**க-ரை.** மக்கட்பேறும், அடக்க முடைமையும், அழகுடைமையும், கணவனுடைய கருத்துக்கிசைய அவனோ டுடனுறைதலும், அவனுண்ணும் உணவை விரும்புதலும் ஆகிய இவ்வைந்து குணங்களும் பெண்டிர்க் கிருக்குமாயின், அவை அவர் கணவரை வணக்கு மருந்தாகும் என்பதாம்.

**வி-ரை.** மகளிர்க்கு மக்கட்பேறுபோலச் சிறந்ததொன் றின்மையான் அதனை முற்கூறினார். மடன் - மடம் என்பதன் போலி; இது அறியாமையெனப் பொருள்படுவ தாயினும் இங்கு அடக்கமெனப் பொருள்பட்டது. மாது-விருப்பம், அது இங்கு விருப்பத்தைத் தருவதாகிய அழகை யுணர்த்திற்று. ஊணமைவு - கணவன் உண்டு எஞ்சின மிச்சிலையுண்ண விரும்புதல். அலவலை-அற்பகாரியம். தலைமகன் - ஒருசொல்; இது கணவனென்னும் பொருட்டு. தாழ்த்தல் - வணக்குவித்தல். (௩௩)

கொண்டான் கொழுந னுடன்பிறந்தான் றன்மாமன்
வண்டார்பூந் தொங்கன் மகன்றந்தை—வண்டாரா
யாப்பார்பூங் கோதை யணியிழையை நற்கியையக்
காப்பார் கருது மிடத்து.

ப-ரை. கொண்டான்-கணவனும், கொழுநனுடன் பிறந்தான்-கணவனுடன் பிறந்தவனும், தன் மாமன் - தன்மாமனும், வண்டு ஆர் - வண்டுகள் மொய்க்கின்ற, பூ தொங்கல் - புஷ்பமாலையை யணிந்த, மகன் - மகனும், தந்தை - தந்தையும், யாப்பு ஆர் - தொடுத்தலமைந்த, பூ கோதை - மலர்மாலையை யணிந்த, அணியிழையை-ஒருமாதை, கருதுமிடத்து - நினைக்குமிடத்து, நன்கு இயைய - நன்மையுண்டாக, காப்பார் - காப்பவராவர், வண்தாராய் - வளவிய பூமாலையை யுடையவளே, எ-று.

க-ரை. கணவன், கணவனுடன் பிறந்தவன், மாமன், மகன், தந்தை, இவ்வைவரும் ஒரு மாதைக் கற்புக்கழிவு வாராமற் காப்பவராவர் என்பதாம்.

வி-ரை. வண்டாராய் என்றது மகடூஉ முன்னிலை. வண்டார் பூந்தொங்கன் மகன் என்றமையால் அறிவறிந்த மகனெனக்கொள்க. அணியிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர்; ஆபரணமணிந்த பெண்ணென்பது பொருள். நன்கியையக் காத்தலாவது - கற்பாகிய நன்மை யமையக் காத்தல், இது சிறைக்காவல். யாப்பு - தொழிற்பெயர்; கட்டுத லென்பது பொருள். கோதை - மாலை. (௩௪)

ஆம்பல்வாய் கண்மனம் வார்புருவ மென்றைந்து
தாம்பல்வா யோடி நிறைகாத்த—லோம்பார்
நெடுங்கழைநீண் மூங்கி லெனவிகழ்ந்தா ராட்டு
கொடுங்குழை போலக் கொளின்.

ப-ரை. ஆம் - உண்டாகிய, பல் - பல்லும், வாய் - வாயும், கண் - கண்ணும், மனம் - மனமும், வார் புருவம்-நீண்டபுருவமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட வுறுப்பைந்தையும் (கண்டு), தாம் பல்வாய் ஓடி - தாம் பலவிடங்களிலோடி, நிறை காத்தல் ஓம்பார் - தமது நிறையைக் காவாத ஆடவர், ஆட்டும் - அசைவிக்கிற, கொடுங்குழை - கொடுங்குழை யணிந்த பெண்ணை, நெடு கழை நீள் மூங்கில் என - நெடிதாய்த் திரண்ட நீண்மூங்கில்போலக் கருதி, இகழ்ந்தார் - இகழ்ந்தாராய், போல - அம்மூங்கிலைப்போல, கொளின் - கொள்வாராயின், (அவ்வாடவர் நிறைகாத்த லோம்புவர்) எ-று.

க-ரை. பல்லும், வாயும், கண்ணும், மனமும், புருவமும், ஆகிய ஐந்துறுப்பையும் உடைய பெண்களை மூங்கில்போலக் கருதி யிகழ்ந்த ஆடவர், தமது நிறை காப்பவராவர் என்பதாம்.

வி-ரை. மாதரை மூங்கில்போலக்கொண் டிகழ்த லாவது, மூங்கிலிலுள்ள முத்து அவர் பல்லாகவும், மூங்கிலின் குழல் அவர் வாயாகவும், மூங்கிலின்கண் அவர் கண்ணாகவும், மூங்கிலின் பொய்ப்பட்ட வுள்ளம் அவர் மனமாகவும், மூங்கிலின் வில் அவர் புருவமாகவும் கொண்டிகழ்தல். இவ்வகையாய்க் கருதினால் அவர்மேலன்பு நிகழாது வெறுப்புண்டா மென்றதாயிற்று. குழல் - மூங்கிலினுட்புரை. கண்-மூங்கிற்கணு. உள்ளம்-உள்ளிடம். (௫௰)

பொன்பெறுங் கற்றான் பொருள்பெறு நற்கவி
யென்பெறும் வாதி யிசைபெறு—முன்பெறக்
கல்லார்கற் றாரினத் தால்லார் பெறுபவே
நல்லா ரினத்து நகை.

ப-ரை. கற்றான் - கற்று வல்லவன், பொன் பெறும் - பொன்னைப் பெறுவான்; நல் கவி - பாடவல்லவன், பொருள் பெறும் -

(அரசனால்) எல்லாப் பொருள்களையும் பெறுவான்; வாதி - வாது செய்து வெல்லவல்லவன், என்பெறும்-எதுபெறுவானெனின், இசை பெறும் - (வென்றான் என்றும்) புகழைப் பெறுவன்; முன்பெற - கால முண்டாக, கல்லார் - (கல்வி) கல்லாதாரும், கற்றார் இனத்தர் அல்லார் - கற்றாரினத்த ரல்லாதாரும், நல்லார் இனத்து - நல்லோர் கூட்டத்தினடுவே, நகை பெறுப - அவரால் நகைக்கப்படுதலைப் பெறுவர், எ-று.

க-ரை. கற்றுவல்லவன் பொன்பெறுவன்; கவிபாட வல்லவன் அரசனால் நன்குமதிக்கப்பட்டு அவனு லெல்லாப் பொருள்களையும் பெறுவான்; வாதுசெய்து வென்றவன் புகழ்பெறுவன்; கல்லாதவரும், கற்றாரினத்த ரல்லாதாரும் நல்லோர்களால் நகைக்கப் பெறுவர் என்பதாம்.

வி-ரை. கவியேற்றுக் கொள்ளுதற் குரியவன் அரசனாதலால் நற்கவி பொருள்பெறும் எனபதற்கு நல்ல கவிபாட வல்லவன் அரசனால் எல்லாப் பொருள்களையும் பெறுவான் என்று பொருள் கூறலாயிற்று. வாதி - தர்க்கவாதஞ் செய்பவன். முன்பெற - இளமைக் காலத்தில். கல்லார் என்பதற்குச் செயப்படு பொருளாகிய கல்வி வருவிக்கப்பட்டது. நகை-நகைக்கப்படுதல். நல்லார் என்றது கற்று வல்ல பெரியோரை. (ருக)

நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்
தொல்லை யுயிர்க்கூற்றங் கோலாகி—யொல்லுமெனின்
மாயம் பிறர்பொருட்கண் மாற்றுக மானத்தா
னுயி னழித லறிவு.

ப-ரை. நல்ல - (பிறர்செய்த) நல்லனவற்றை, வெளிப்படுத்து - வெளியாக்கி, தீய - (பிறர்செய்த) தீயனவற்றை, மறந்தொழிந்து - நினையாது மறந்தொழிந்து, உயிர்க்கு - (இடையூறு நேரிட்ட) பிற

வுயிர்களுக்கு, ஒல்லை - விரைவில், ஊற்றங்கோல் ஆகி - ஊன்றுகோலாகி, ஒல்லும் எனின் - தனக்கியலுமாயின், பிறர் பொருள்கண் - பிறர்பொருளிடத்தில், மாயம் - வஞ்சனைசெய்தலை, மாற்றுக - ஒழிக; மானத்தால் - மானத்தின்பொருட்டு, அழிதல் - தான் சாதலை, ஆயின் - (ஒருவன்) ஆராய்வனாயின், அறிவு - (அவனுக்கதுவே) அறிவாவது, எ-று.

க-ரை. பிறர்செய்த நன்மையை வெளிப்படுத்தித், தீமையை மறந்து, பிறவுயிர்களுக் கிடையூறு நேரிட்டால் அவ்விடையூற்றை யொழித்து ஊன்றுகோலாகி, பிறர்பொருளை வஞ்சித்த லொழிந்து, மானத்தின்பொருட்டுச் சாதலே நன்மையென் றொருவன் ஆராய்வானாயின், அதுவே அவனுக்கறிவாவது என்பதாம்.

வி-ரை. மறந்து என்றது மறந்தொழிந்து என்றமையால் மனத்து நினைத்தலுமாகா தென்றதாயிற்று. ஊற்றங்கோல் - ஊன்றுகோல். ஒல்லுதல் - இசைதல். ஆய்தல் - ஆராய்தல். மானத்தால் என்பதில் ஆல் என்னுமூன்றுவது நான்காவதன் பொருட்டுப் பொருளில் வந்தது. (ருஎ)

தன்னிலையுந் தாழாத் தொழினிலையுந் துப்பெதிர்ந்தா
ரின்னிலையு மீடி லியனிலையுந்—துன்னி
யளந்தறிந்து செய்வா னரசமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்ற லான்.

ப-ரை. தன் நிலையும் - தனது நிலைமையினையும், தாழா-தாழ்தலில்லாத, தொழில் நிலையும் - (தான் தொடங்கிச் செய்யும்) வினையினது நிலைமையினையும், துப்பு - வலியினால், எதிர்ந்தார் - (தன்னோடு) எதிர்த்தவராகிய பகைவரிடத்துளதாகிய, இன் நிலையும் - இனிய நிலைமையினையும், ஈடு இல் - கேடில்லாத, இயல் நிலையும் - உலகவழக்கு நிலைமையினையும், துன்னி - முன்புகுந்து, அளந்து

அறிந்து - ஆராய்ந்தறிந்து, செய்வான் - செய்வோன், அரசன் - அரசனுவான்; யாதும் - எல்லாவற்றையும், பிளந்து அறியும் - பாகுபடுத்தறிகின்ற, பேராற்றலான் - பெரிய ஆற்றலையுடையவன், அமைச்சன் - அமைச்சனுவான், எ-று.

கு-ரை. தனது நிலைமை, தான் செய்யத் தொடங்கின வினையினது நிலைமை, வந்தெதிர்த்த பகைவரது நிலைமை, உலகியலின் நிலைமை, என்பவற்றை யாராய்ந்து செய்பவனே அரசனுவான்; இவற்றையேயன்றி மற்றெல்லாக் காரியங்களையும் பகுத்தறிய வல்லவனே அமைசசனுவான் என்பதாம்.

வி-ரை. தாழ்தல் - தாமதித்தல். துப்பு - வலி. ஈடு - அழிவு. இயல் - உலகியல். அளத்தல்-பிரமாணங்களால் அளவிடல். யாதும் என்றது அரசனுக்குச் சொன்ன நான்கேயன்றி மற்றெல்லாவற்றையுமென்றபடி. ஆற்றல் - வினைமுடிக்குந் திறம். (௫அ)

பொருளபோக மஞ்சாமை பொன்றுங்காற் போந்த
வருள்போகா வாரறமென் றைந்து—மிருடீரக்
கூறப படுங்குணததான் கூர்வேல்வல் வேந்தனுற்
றேறப் படுங்குணத்தி னுன்.

ப-ரை. பொருள் - பொருளும், போகம் - இன்பமும், அஞ்சாமை - (இடுக்கண் வந்தால் அதற்கு) அஞ்சாமையும், பொன்றுங்கால் - பிறிதோருயிர் அழியவந்த விடத்து, போந்த அருள் - மிக்க அருளும், போகா - நீங்காத, ஆர் - அரிய, அறம் - அறமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட இவ்வைந்தும், இருள் தீர - குற்றந்தீர, கூறப்படும் - சொல்லப்படுகிற, குணத்தான் - தன் குணங்களாக வுடையவன், கூர் - கூரிய, வேல் - வேற்படையையுடைய, வல் வேந்தனல் - வலிய அரசனல், தேறப்படும் - (ஒரு கருமத்தின்

மேற் செலுத்தத் தக்கவனென்று) தெளியப்படுகிற, குணத்தி ஞன் - குணத்தை யுடையவனென்று சொல்லப்படுவோன், எ-று.

க-ரை. பொருளும்,இன்பமும்,இடுக்கண்வந்த காலத்து அதற கஞ்சாமையும், பிறிதோருயிர் அழியவந்தவிடத்து அதற் கிரங்கும் அருளுடைமையும், அருமையாகிய அறமும், என்று சொல்லப்பட்ட இவ்வைந்தனையு முடையவன், அரசனு லொருகருமத்தின்மேற் செலுத்துதற் குரியனுவான் என்பதாம்.

வி-ரை. இன்பமுதலியவற்றை நுகர்தல் பொருளில்வழி கூடா மையின், பொருளை முன்வைத்தார். அஞ்சாமை யென்றது இடுக்க ணழியாமையை. இடுக்க ணழியாமையாவது - வினையின்கண் முயல் வான், தெய்வத்தானுதல், பொருளின்மையானுதல், மெய்வருத்தத் தானுதல் தனக்கிடுக்கண் வந்துழி, அதற்கு மனங்கலங்காமை. "இடு க்கண் வருங்கா னகுக வதனை, அடுத்தூர்வ தஃதொப்ப தில்" என் பது திருக்குறள். அறம்போலச் சிறந்தது மக்களுயிர்க்குப் பிறி தொன்றின்மையான் 'ஆரறம்'என்ருர். என்றைந்தும் என்பதில்,நிலை மொழி யீற்றகரம் தொகுத்தல். தேறல்-தெளிதல் (நம்புதல்). (கூ௫)

நன்புலத்து வையடக்கி நாளுமா டோம்போற்றிப்
புன்புலத்தைச் செய்தெருப் போற்றியபி—னின்புலத்தின்
பண்கலப்பை யென்றிவை பாற்படுப் பானுழவோன்
நுண்கலப்பை நூலோது வார்.

ப-ரை. நன் புலத்து - விளைபுலத்திலுள்ள, வை-வைக்கோலை, அடக்கி - (தன்னிடத் துள்ளதாகத்) திரட்டி, நாளும்-நாள்தோறும், மாடு-உழுபகடுகளை, போற்றி-பாதுகாத்து, புன் புலத்தை - புல்லிய புலத்தை, செய்து - நன்புலமாகத் திருத்தி, எருபோற்றியபின் - எருவினுல் அதனைப் போற்றின பின்பு, பண் - பண்ணப்பட்ட, கல

ப்பை என்றிவை - கலப்பை யென்பவைகளை, இன்புலத்தின்பால் படுப்பான் - நன்புலத்தின் பகுதிப் படுப்பவன், உழவோன் - உழவனென்று (சொல்லுவர்), நுண் - நுண்ணிய, கலப்பை நூல் - உழவு நூலை, ஓதுவார்-ஓதியுணர்ந்த அறிவுடையார், எ-று.

க-ரை. விளை புலத்திலுள்ள வைக்கோலைத் திரட்டித் தன்னிடத்திற் சேர்த்து, உழுபகடுகளைக் காப்பாற்றி, புன்புலத்தை நன்புலமாகத் திருத்தி, எருப்பெய்த பின்பு, கலப்பை முதலியவற்றை அந்த நன்புலத்தின்பாற் படுப்பவன் உழவனென்று சொல்லுவர் உழவுநூலோதி யுணர்ந்த அறிவுடையோர் என்பதாம்.

வி-ரை. நன்புலம்-நன்செய், இதனை நஞ்சை யென்பது உலக வழக்கு. அடக்கல்-தன்னிடத்திற் சேர்த்தல். மாடோ என்னுமோகாரம் இசைநிறை. புன்புலம் - புன்செய், இதனைப் புஞ்சை யென்பது உலகவழக்கு. எருப்போற்றல்-எருப்பெய்தல். செய்தல் - திருத்தல். இன்புலம் - நன்செய்; இது இன்பந்தருதலால் 'இன்புலம்' என்றார். என்ற இவை யெனற்பாலது என்றிவையென நிலைமொழி யீற்றகரம் தொகுத்தலாயிற்று. உழவோன் என்பதனீற்றில் என்று என ஒரு சொல்வருவித் துரைக்கப்பட்டது. (௬0)

ஏலாமை நன்றீ தறீதுபண் பில்லார்க்குச்
சாலாமை நன்றுநூல் சாயினுஞ்—சாலாமை
நன்று தவனனி செய்தறீ தென்பாரை
யின்றுகா றியாங்கண் டிலம்.

ப-ரை. ஏலாமை - (ஒருபொருளை ஒருவரிடத்துச் சென்றிரந்து அவர் கொடுக்க) ஏற்றுக்கொள்ளாமை, நன்று - நன்மையாம்; பண்பு இல்லார்க்கு - நற்குண மில்லாதவர்க்கு, ஈதல் - (அவர் வேண்டிய தொருபொருளை) கொடுத்தல், தீது - தீமையாம்; நூல் சாலாமை - நற்குண மில்லாதவர்க்கு நூல்களை) நிரம்ப அறிவியாமை, நன்று -

நன்மையாம்; சாயினும் சாலாமை நன்று - சாய்ந்தாலும் ஒருவன் சால்புடையனல்லாமை நன்மையாம்; நணி தவம் செய்தல் - மிகுதியாய்த் தவஞ்செய்தல், தீது-தீமையாம், என்பாரை-என்று சொல்லுவோரை, இன்றுகாறு - இன்றளவும், யாம் கண்டிலம் - நாம் கண்டிலேம், எ-று.

க-ரை. ஒருபொருளை யொருவரிடத்துச் சென்று இரந்து அதனை யவர் கொடுக்க ஏற்றுக்கொள்ளாமை நன்று; நற்குணமில்லாதவர்க்குக் கொடுத்தல் தீது; நற்குண மில்லாதவர்கரு நூல்களை நிரம்பக் கற்பியாமை நன்று; ஒருவன் சால்புடையனல்லாமை நன்றென்றும், மிக்க தபஞ்செய்தல் தீதென்றும் சொல்லுவோரை இதுவரையும் யாம் கண்டிலேம் என்பதாம்.

வி-ரை. ஏலாமை சாலாமை யென்பன எதிர்மறைத் தொழிற்பெயர்கள். இவற்றிற்குப் பகுதிகள் முறையே ஏல் சால் என்பன. பண்பு - குணம், அது இங்கு நற்குணத்தைக் குறித்தது. சாலாமை யென்பது நிரம்ப வறிவியாமை யெனவும் சால்புடைய னல்லாமை யெனவும் இருவகையாய்ப் பொருள் கொள்ளக்கிடந்தது. சாய்தல் - கெடுதல். தம்போல்வாரையு முளப்படுத்த 'யாம் கண்டிலம்' என்றார். 'இன்றுகா றியாங்கண் டிலம்' என்றமையால் இனிக் காண்டுமோ வென்னு மையம் நிகழ்தற் கிடமாயிற்றென்க. (சுக)

அரம்போற் கிளையடங்காப் பெண்வியக்கத் தொண்டு
மரம்போன் மகன்மாறாய் நின்று— கரமபோலக்
களளநோய் காணு மயலேந்து மாகுமே
யுளளநோய் வேண்டா வுயிர்க்கு.

ப-ரை. அரம்போல் - அரம்போலத் தன்னைத் தேய்க்கின்ற, கிளை - உறவும், அடங்கா - தனக்கடங்காத, பெண் - மனைவியும், வியக்கத்தொண்டு - அடங்காதன செய்யும் அடிமையும், மரம்

போல் மகன் - மரம்போன்ற தன் புதல்வனும், மாறு ஆய் நின்று - மாறுபட்டு நின்று, காம்போல-நஞ்சுபோல, கள்ளம் நோய்காணும் - வஞ்சனையாகிய நோயைச் செய்கிற, அயல் - அயலிருப்பும், ஐந்தும் - ஆகிய இவ்வைந்தும், ஆகும் எல் - உளவாயின், உயிர்க்கு - உயிர்களுக்கு, உள்ளநோய் - மற்றொரு மனோவியாதி, வேண்டா - வேண்டப்படாது, எ-று.

க-ரை. அரம்போலத் தன்னைத் தேய்க்கின்ற உறவும், தனக்கடங்காத மனைவியும், அடங்காதன செய்யும் அடிமையும், மரம்போன்ற தன் புதல்வனும், நஞ்சுபோல நோயைச் செய்கிற அயலிருப்பும், ஆகிய இவ்வைந்தும் ஒருவனுக் குளவாயின், அவனுயிர்க்கு வேறொரு மனோவியாதி வேண்டப்படாது என்பதாம்.

வி-ரை. அரம்போல என்றமையால் அதன்றொழிலாகிய தேய்த்தல் வருவிக்கப்பட்டது. கிளை - தொழிலாகுபெயர். தொண்டு - பண்பாகுபெயர். மரமபோல மகன் என்றது மரம்போல் அறிவில்லாதமகன் என்றபடி. காம் - நஞ்சு. அயல் - அயன்மை, இது பண்பாகு பெயராய் அயலிருப்பாரை யுணர்த்திற்று. எல் - எனின் என்பதன் மரூஉ. உள்ளம் - உள்ளிடம், அது அங்குள்ள மனத்தை யுணர்த்தலால் இடவாகுபெயர். உயிர் என்றது மக்களுயிரை அரம் போற் கிளை முதலியவற்றை யுணர்தற்குரிய ததுவே யாதலான். கிளை முதலியவற் றிறுதியில் எண்ணும்மைகள் தொக்கன. (கூஉ)

நீரற நன்று நிழனன்று தன்னில்லுட்
பாரற நன்றுபாத் துண்பானேற்—பேரற
நன்று தளிசாலை நாட்டற் பெரும்போக
மொன்றுமாஞ் சால வுடன்.

ப-ரை. நீர் அறம் - நீரறஞ் செய்தல், நன்று - நன்மையாம்; நிழல் நன்று - நிழலறஞ்செய்தல் நன்மையாம்; தன் இல்லுள் - தன்

வீட்டில், பார் அறம் நன்று - பிறர் உறைய இடங்கொடுத்தலாகிய அறம் நன்மையாம்; பாத்து - பிறவுயிர்களுக்குப் பகிர்ந்து, உண்பானேல் - உண்பானாயின், பேர் அறம் - (அது) பெரிய அறமாம்; தளி சாலை-கோயிலோடு சாலைகளை, நாட்டல்-நிலைபெறுவித்தல், நன்று - நன்மையாம்; (இவ்வைந்தனையுஞ் செய்தவர்க்கு) பெரும்போகம் - பேரின்பம், உடன் - உடனே, சால - மிகுதியாக, ஒன்றும் - உண்டாகும், எ-று.

க-ரை. நீர் அறம், நிழலறம், பாரறம், பாத்துண்டலாகிய அறம், கோயிற்சாலைகளை நிலைபெறுவித்தலாகிய அறம், என்னும் இவ்வைந்தனையுஞ் செய்தார்க்கு உடனே பேரின்பம் வாய்க்கும் என்பதாம்.

வி-ரை. நீரறம் - தண்ணீர் வார்த்தலாகிய தருமம். நிழலறம் - சோலை முதலியவற்றால் நிழலையுண்டாக்கி அதுவாயிலாக வருவோரது இளைப்பாற்றுதலாகிய தருமம். பாரறம் - தன் வீடு நாடி வருவோர்க்குத் தங்கியிருக்கு மிடங் கொடுத்தலாகிய தருமம். பாத்துண்டல் - உண்டற்குரிய எல்லாப் பொருள்களையும் பிறருக்குப் பகிர்ந்துண்டல். தளி-கோயில். சாலை - கோயிலைச்சார்ந்த சாலை. நாட்டல் - அழியாது நிலைபெறச் செய்தல். ஒன்றுமாம் என்பதில் ஆம் அசையிடைச்சொல். "மணியுமா மென்றும் பெருமை சிறுமை, அணியுமாந் தன்னை வியந்து" என்னுந் திருக்குறளில் ஆமிரண்டும் அசை நிலைகளாய் வந்தமை காண்க. சால - உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; இது ஒன்றும் என்னும் வினைகொண்டது. ()

பிடிப்பிச்சைப் பின்னிறை யையங்கூழ் கூற்றோ
டெடுத்திரந்த வுப்பித் துணையோ—டடுத்து
சிறுபய மென்னார் சிதவலிப் பீவார்
பெறுபயன்பின் சாலப் பெரிது.

ப-ரை. பிடிப்பிச்சை - ஒரு பிடியுளடங்கும் பிச்சை, பின்னிறை - விரலிறையு ளடங்கும் பிச்சை, ஐயம் - உண்டோ இல்லையோ வென்றையப்படும் பிச்சை, கூழ் - கூழ்வார்த்தல், கூற்றோடு எடுத்திரந்த உப்பு - ஒருவன் சொல்லப்பட்ட ஓடெடுத்திரந்த வுப்பு, இத்துணையோடு அடுத்து-இத்துணையும் பொருந்தி, சிறுபயன் என்னார்-சிறுபயனைத் தருவனவென்று நினையாதவராய், சிதவலிபபு - மனவுறுதியோடு, ஈவார் - கொடுப்பவர், பின் - பின்பு, பெறுபயன் - அடையும் பயன், சால பெரிது - மிகப்பெரிது, எ-று.

க-ரை. பிடிப்பிச்சை முதலியவை சிறியவை, இவைதரும் பயனும் சிறியனவென்று நினையாது கொடுப்பவர், பின்பு பெறும்பயன் மிகப்பெரிது என்பதாம்.

வி-ரை. பிச்சை - பிச்சைச்சோறு. விரலிறை - விரற்சந்திலடங்கும் பிச்சை. ஐயம் - சந்தேகம். கூழ் - மாச்சாதம். ஓடு - பிக்ஷாபாத்ரம். இத்துணை - இவ்வளவும். சித்தவலிப்பு - சிதவலிப்பெனத் தொகுத்தல் பெற்றது. சித்தம் - மனம். பிடிப்பிச்சை முதலியவை தரும் பயன் சிறிதென் றெண்ணாமல் மனவுறுதியோடு கொடுப்பவர் இக்கொடையால் பின்பு பெறும்பயன் மிகப் பெரிதென்ப திதனாற் கூறப்பட்டது. "இறப்பச் சிறிதென்று தில்லென்று தென்றும்,அறப்பயன் யார்மாட்டுஞ் செய்க - முறைப்புதவின், ஐயம்புகூஉந் தவசி கடிஞைபோல், பைய நிறைத்து விடும்" என்பது நாலடியார். (கூச)

வெந்தீக்காண் வெண்ணெய் மெழுகுநீர் சேர்மண்ணுப்
பந்தன் மகற்சார்ந்த தந்தையென்—றைந்தினு
ளொன்றுபோ லுண்ணெகிழ்ந் தீயிற் சிறிதெனினுங்
குன்றுபோற் கூடும் பயன்.

ப-ரை. வெம் தீ - வெப்பமாகிய நெருப்பை, காண் - கண்ட; வெண்ணெய் - வெண்ணெயும், மெழுகு - மெழுகும், நீர் சேர் மண் -

நீர் சேர்ந்தமண்ணும். உப்பு-உப்பும், அந்தம்-அழகையுடைய, மகனை சார்ந்த - மகனைத் தழுவிய, தந்தை - தகப்பனும், என்ற ஐந்தினுள்-என்று சொல்லப்பட்ட ஐந்தினுள்ளே, ஒன்றுபோல் - ஒன்றுபோல, உள நெகிழ்ந்து - (இரவலரைக்கண்டு) மனமிரங்கி, ஈயின் - ஒருவன் கொடுப்பானாயின், சிறிது எனினும்-(ஈயப்பட்டபொருள்) சிறிதாயினும், பயன் - (அதனாலுளதாகும்) பயன், குன்றுபோல் கூடும்-மலைபோல மிகப் பெரிதாய வந்துசேரும், எ-று.

க-ரை. நெருப்பைக்கண்ட வெண்ணெய முதலியபொருள்களி லொன்றைப்போல மனமுருகி இரவலர்க்கு வேண்டும்பொருள் சிறிதாய இயைந்தவளவிற் கொடுத்த வொருவனுக்கு அச்சிறுகொடையா லுண்டாகும்பயன் மலைபோல மிகப்பெரிதா மென்பதாம்

வி-ரை. நெருப்பைக்கண்ட வெண்ணெய் மெழுகு என்பவை போலவும், நீர்சேர்ந்தமண் உப்பு என்பவைபோலவும், மகனைத் தழுவிய தந்தைபோலவும், இரவலரைக்கண்டு மனநெகிழ்ந்து ஒருவன் கொடுக்கும்பொருள் சிறிதாயினும் அக்கொடையால் அவனுக்கு குண்டாகும் பயன் மலைபோல மிகப்பெரிதா மெனபதிதனாற் கூறப்பட்டது. வெண்ணெய முதலியவற்றினிறுதியில் எண்ணும்மைகள் தொக்குநின்றன. இவ்வாறு மனநெகிழ்ந்தீயாத ஈகையாற் பயனில்லையென்பதும் இதனாற்போந்த பொருள். காண் வெணணெய - வினைத்தொகை நிலைத்தொடர். நெருப்பைக் காண்டலும் விரைந்துருகுவன வெண்ணெய் மெழுகுகளாதலால் அவற்றை முற்கூறினர் (கூ௫)

குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசித்
துளந்தொட் டுழுவய லாக்கி—வளந்தொட்டுப்
பாகு படுங்கிணற்றோ டென்றிவ்வைம் பாற்படுத்தா
னேகுஞ் சுவர்க்கத் தினிது.

ப-ரை. குளம் தொட்டு - குளத்தைக் கல்லி, கோடு பதித்து - மரக்காவைநட்டு, வழிசீத்து-வழிசீத்துத் திருத்தி, உள்ளம் தொட்டு-

(மேடாயின நிலங்களை)உள்ளே தோண்டி, உழுவயல் ஆக்கி-உழுவய லாகச்செய்து, வளம் தொட்டு-வளம்படத்தோண்டி, பாகுபடும் கிணற்றோடு - பாகுபடுத்தப்பட்ட கிணறெடுத்தலோடுகூடி, என்ற இவ் வைம்பால் படுத்தான் - என்ற இந்த ஐந்துபகுப்பையுஞ் செய்தவன், சுவர்க்கத்து - சுவர்க்க லோகத்தில், இனிது - இனிதாக, ஏகும் - செல்வான், எ-று.

க-ரை. குளம்வெட்டுதல் முதலிய அறங்களைந்தனையும் செய்த வன், சுவர்க்கலோகத்தை யடைவா னென்பதாம்.

வி-ரை. தொடுதல் - தோண்டுதல். கோடு-மரக்கிளை, அது சினையாகுபெயராய் மரத்தை யுணர்த்தி, அது அவ்வாகுபெயராய் மாக்காவை யுணர்த்தினமையால் இது இருமடியாகுபெயர். சீத்தல்-திருத்திச்சுத்தப்படுத்தல். உள்ளம் - உள்ளிடம். பாகுபடுதல் - பகுக் கப்படுதல். செய்யவேண்டிய பகுப்புக்களெல்லாஞ் செய்தல். இனிது ஏகும் என்றது, இடையூற்று னிலத்துப் பெரும்பாம்பாய் வீழ்ந்த நகுஷனபோலாது இடையூறின்றிச் செல்வான் என்றபடி. (சுசு)

போர்த்து முரிநதிட்டும் பூசிபு நீட்டியு
மோர்த்தொரு பான்மறைத தூண்பான்மே—யோர்த்த
வறமாமேற் சொற்பொறுக்க வன்றேற் கலிக்கட்
டுறவறம்பொய் யில்லறமே வாய்.

ப-ரை. போர்த்தும் - முழுமெய்யும் தோன்றுமற் போர்த்தும், உரிநதிட்டும்-உடுத்தவுடையைக் களைந்தும்,பூசியும்-உடம்பு முழுதும் நீறுபூசியும், நீட்டியும்-சடையைநீட்டியும், ஓர்த்து ஒருபால்மறைத்து- ஆராய்ந்து உடம்பில் ஒரு பக்கத்தை மறைத்தும், உண்பான் - உண் டற்கு, மேய் ஓர்த்த - மேவி யாராய்ந்து கொண்டனவாகிய இவ்வே டங்களைந்தும், மேல் சொல் அறம் ஆம - மேலோர் சொல்லிய துற வறமே; பொறுக்க-(துறவறமாயின் பிறர்சொல்லிய கடுஞ்சொற்களை) பொறுத்துக் கொள்க; அன்றேல் - பொறாராயின், கலிக்கண் - இக்

கலிகாலத்தில், துறவறம் பொய் - துறவறம் பொய்யாம்; இல்லற மே வாய் - இல்லறமே மெய்யாம், எ-று.

க-ரை. முழுமெய்யுந் தோன்றுமற் போர்த்தல் முதலிய வேடங் களைந்தும் மேலோர்சொல்லிய துறவறத்துக் குரியனவே யாயினும், பிறர்சொல்லுங் கடுஞ்சொற்களைப் பொறாராயின், அத்துறவறத்தாற் பயனில்லை, இல்லறமே பயனுடைத் தென்பதாம்.

வி-ரை. போர்த்தும் முதலிய வும்மைகள் எண்ணும்மைகளாத லால் மறைத்து என்பதனீற்றிலும் அவ்வும்மை சேர்க்கப்பட்டது. உண்பான் என்பதில் பான் எதிர்கால வினையெச்ச விகுதி. மேவி யென்பது மேய் என்றாயது. வாய்மை - மெய், இது வாய் என ஈறு தொகுத்தலாயிற்று. போர்த்தல் முதலிய வேடங்களாற் பயனில்லை, துறவறத்திற்குரிய பொறுமை யில்லையாயின் அத்துறவானது பொய் த்துறவேயென்ப திதனாற் போந்தபொருள். "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு" என்பது திருக் குறள். (கஎ)

தான்பிறந்த வின்னினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து—தான்பிறராற்
சாவ வெனவாழான் சான்றோராற் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்த லன்று.

ப-ரை. தான் பிறந்த இல் நினைந்து - தான் பிறந்த குடியை நினைத்து, தன்னை கடைப்பிடித்து - தன்னை நல்லொழுகத்தில் வழுவாதபடி கடைப்பிடித்து, தான் பிறரால் கருதற்பாடு உணர் ந்து - தான் பிறரால் மதிக்கப்படுதற்குரிய செய்கைகளை யறிந்து, தான் பிறரால் சாவ என வாழான் - தான் பிறரால் செத்தொழிக வென்று சொல்லும்படி யொழுகாது, சான்றோரால் - பெரியோரால், பல் யாண்டும் - பல வருடத்தளவும், வாழ்க என - வாழ்கவென்று,

சொல்லும்படி, வாழ்தல் - ஒருவன் உயிர் வாழ்ந்திருத்தல், நன்று - நன்மையாம், எ - று.

க-ரை. ஒருவன் தான் பிறந்த குடியின் பெருமையை நினைத்தல் முதலியவற்றை யுடையனாய் உயிர்வாழ்தல் நன்மையா மென்பதாம்.

வி-ரை. இல் - குடி, இது இதன் பெருமையைக் குறித்தலால் முதலாகுபெயர். கடைப்பிடித்தல் - உறுதியாய்ப் பற்றுதல். வாழான் - முற்றெச்சம். சான்றோர்-கல்வியறி வொழுக்கங்களால் நிறைந்தவர், சால் என்பதிதன் பகுதி. 'சான்றோரால் பல்யாண்டும் வாழ்கவென' என்றது பெரியோர் ஒருவனது நல்லொழுக்கங் கண்டு மனமகிழ்ந்து இவன் இவ்வுலகத்தில் பல்யாண்டும் இனிது வாழ்ந்திருப்பானாகவென்று ஆசிகூறும்வண்ணம் என்றபடி. (சு அ)

நெடுக்கல் குறுக்கல் துறைநீர்நீ டாடல்
வடுத்தீர் பகல்வா யுறையே—வடுத்நீரா
வாகுமந் நான்கொழித்தைந் தடக்கு வானாகின்
வேகும்பம் வேண்டான் விடும்.

ப-ரை. (ஒருவன்) நெடுக்கல் - மயிரைச்சடையாக நீட்டுதலும், குறுக்கல் - மயிரைக் குறைத்தலும், துறைநீர் - கங்கை முதலாகிய நதித்துறைகளின் புண்ணிய தீர்த்தங்களில், நீடு ஆடல்-நெடிதாகப் போயாடுதலும், வடு தீர் பகல் - குற்றம் நீங்கின பகற்காலத்தில், வாயுறை - உண்ணுதலும் என்று சொல்லப்படுகிற, வடுநீரா ஆகும்-குற்றம் நீங்காதனவாகிய, அ - அந்த, நான்கும் ஒழித்து - நான்கையுமொழித்து, ஐந்து அடக்குவானாயின் - ஐம்புலன்களையும் அடக்குவானாயின், (அவன்) வே - மயானத் தீயில் வேதற்குரிய, கும்பம் - குடம்போன்ற வுடம்பினை, வேண்டான் விடும் - விரும்பாதவனாகி விட்டொழிவான், எ-று.

க-ரை. ஒருவன் மயிரைச் சடையாக நீட்டுதல் முதலிய நான்கையும் ஒழித்து, ஐம்புலன்களேயும் அடக்குவானாயின் அவன் இந்தச் சரீரசம்பந்தத்தை யொழித்துப் பிறவியற்றவனாவான் என்பதாம்.

வி-ரை. நெடுக்கல் - பிறவினை, நெடுகச்செய்தல் என்பது பொருள். குறுக்கல் என்பதுமது, குறுகச்செய்த லென்பது பொருள். துறை - நீர்த்துறை. வாயுறை - உணவு. ஐம்புலன்களாவன - சத்த பரிச ரூப ரச கந்தங்கள். வே - முதனிலைத் தொழிற்பெயர், வேதல் என்பது பொருள். குடம் உடைந்தொழிதல்போல அழிந்தொழிதலால் உடம்பைக் 'கும்பம்' என்றார். கும்பம் - உவமையாகுபெயர். வேண்டான் முற்றெச்சம். வேகும்பம் வேண்டான்-விடும்பிறவி யில்லாதவனாவா னென்றபடி. "மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்" என்பது திருக்குறள். (௬௬)

கொன்றான் கொலையை யுடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்கால்—கொன்றதனை
யட்டா னிடவுண்டா னைவரினு மாகுமெனக்
கட்டெறிந்த பாவங் கருது.

ப-ரை. கொன்றான் - ஒருயிரைக் கொன்றவன், கொலையை உடன்பட்டான் - கொலைக்கஞ்சாமல் உடன்பட்டவன், கோடாது - நாணாமல், கொன்றதனை கொண்டான் - கொல்லப்பட்ட தோருயிர் நின்ற வுடம்பாகிய மாமிசத்தை விலைக்குக் கொண்டவன், கொழிக்குங்கால் - ஆராயுமிடத்து, கொன்றதனை அட்டான் - கொல்லப்பட்டதனுடைய வூனைசசமைத்தவன், இட உண்டான் - சமைத்ததனை யிடவுண்டவன் (என்று சொல்லப்படுகிற), ஐவரினும்-இந்த ஐவரிடத்தும், கட்டு எறிந்த பாவம்-வரம்பழித்ததனு லுண்டாகிய பாவமானது, ஆகும் என-நிகழும் என்று, கருது-நீ கருதுவாயாக, எ-று,

க-ரை. ஒருயிரைக்கொன்றவன், கொலைக்கு உடன்பட்டவன், கொன்றதனை விலைக்குக் கொண்டவன், அதனைச் சமைத்தவன், சமைத்ததனையுண்டவன் என்னும் இவ்வைவரும் பாவிகளென்பதாம்.

வி-ரை. கொலை - தொழிற்பெயர், கொல்லுதல் என்பது பொருள். உடன்படல்-சம்மதித்தல். கோடல்-நாணல். அஞ்சல். கொழித்தல் - ஆராய்தல். அடுதல் - சமைத்தல். கட்டெறிதல் - வரம்பு கடத்தல், மேலோர் கொலை செய்யலாகாதென விதித்த ஏற்பாட்டைக் கடத்தல். இதற்கு உதாரணம் : கொலைமறுத்தல், "கொன்றான் கொலச்சொன்னான் கூசவறுத்தானட்டான்" என்னு முதற் குறிப்பினையுடைய செய்யுள். (எ0)

சிறைக்கிடந்தார் செத்தார்க்கு நோற்பார் பலநா
ளுறைக்கிடந்தா ரொன்றிடையிட் டுண்பார்—பிறைக்கிடந்து
முற்றனைத்து முண்ணா தவர்க்கீந்தார் மன்னவராய்க்
கற்றனைத்தும் வாழ்வார் கலந்து.

ப-ரை. சிறை கிடந்தார் - சிறையின் கண் கிடந்தவரும், செத்தார்க்கு நோற்பார்-செத்தவர்க்கு நன்மைவேண்டி உண்ணாது நோற்பவரும், பலநாள் உறை கிடந்தார்-பலநாளும் தமது பிணிக்கு மருந்தாக உண்ணாது கிடந்தவரும், ஒன்று இடையிட்டு உண்பார் - ஒருநாளிடையிட் டுண்பவரும், பிறை கிடந்து-பிறையா யிருந்து, முற்றனைத்தும் - அது நிரம்புமளவும், உண்ணாதவர்க்கு - உண்ணாதவரும் ஆகிய இவ்வைவருக்கும், ஈந்தார் - உணவு கொடுத்தவர்கள், மன்னவர் ஆய் - அரசராய்ப் பிறந்து, அனைத்தும் கலந்து கற்று - எல்லா நூல்களையும் ஒருமிக்கக்கற்று, வாழ்வார் - நீடுவாழ்வார்கள், எ - று.

க-ரை. சிறைகிடந்தார் முதலிய ஐவருக்கும் உணவு கொடுத்தவர்கள் கல்வியறிவுள்ள அரசராய் நீடுவாழ்வார்களென்பதாம்.

வி-ரை. சிறை - சிறைச்சாலை, காவற்சாலை. உண்ணாது நோற்றல் - உபவசித்தல். பலநாளுறை கிடந்தார் - பலநாளும் உண்ணாது கிடந்தவர்(லங்கணஞ்செய்தவர்). ஒருநாளிடையிட்டுண்பார்-இரண்டு நாளுக் கோர்தரம் உண்பவர். பிறைக்கிடந்து முற்றனைத்து முண்ணார் - சாந்திராயண விரதங்காப்பவர், இவர் தவசிகளெனப்படுவர். வாழ்வார் என்றது பிறவியற்று என்று மொருதன்மையராய் முத்தி யுலகில் வாழ்ந்திருப்பார் என்றபடி. (எக)

ஈன்றெடுத்தல் சூல்புறஞ் செய்தல் குழவியை
யேன்றெடுத்தல் சூலேற்ற கன்னியை—யான்ற
வழிந்தாளை யில்வைத்தல் பேரறமா வற்ற
மொழிந்தார் முதுநூலார் முன்பு.

ப-ரை. ஈன்று எடுத்தல் - தாய் தானீன்ற குழவியை யோம்பி வளர்த்தல், சூல் புறம்செய்தல்-தான்கொண்ட சூலை யழியாது புறப் படுத்தல், குழவியை - (வளர்ப்பவரில்லாத) குழவியை, என்று எடுத தல்-என்று வளர்த்தல்,சூல் ஏற்ற கன்னியை-சூல்கொண்ட கன்னி யையும், ஆன்ற அழிந்தாளை - மிகவுமழிந்தவளையும், இல்வைத்தல் - தன் வீட்டில் வைத்துப் பாதுகாத்தலும், (ஆகிய இவ்வைந்தும்) முது நூலார்-பழைய நூலறிவுள்ள பெரியோர், முன்பு - முற்காலத் தில், பேர் அறம் ஆ-பெரிய அறமாக, அற்ற மொழிந்தார் - மிகவும் சொன்னார்கள், எ - று.

க-ரை. ஈன்றெடுத்தல் முதலிய ஐந்தும் பெரிய அறமாக முற் காலத்தில் நூலறிவையுடைய பெரியோர் சொன்னார்கள் என்பதாம்.

வி-ரை. ஈன்றெடுத்தல் என்றெடுத்தல் என்பவற்றில் எடுத் தல் வளர்த்தல் என்னும் பொருட்டு. புறஞ்செய்தல்-வெளிப்படுத்தல், மகப்பெறுவித்தல் எனினுமாம். என்றெடுத்தல் - கண்டெடுத்த குழ வியை வளர்த்தல், சூலேற்ற கன்னி - கருப்பங்கொண்ட கன்னி.

ஆன்றவழிந்தாள் - அழிந்த மனையாள் என்றலு மொன்று. முது நூலார்-வேதாகமாதிகளாகிய பழைய நூல்களை யாராய்ந்தறிந்தவர். என்று எற்ற என்பவற்றிற்குப் பகுதி ஏல். பேரறமாமொழிந்தார் எனவியையும். (௭௨)

வலியழிந்தார் மூத்தார் வடக்கிருந்தார் நோயால்
நலிபழிந்தார் நாட்டறைபோய் நைந்தார்—மெலிவொழிய
வின்னவரா மென்றாரா யீந்த வொருதுற்று
மன்னவராச் செய்யு மதித்து.

ப-ரை. வலி அழிந்தார் - வலியழிந்தவர், மூத்தார் - முதியர், வடக்கிருந்தார்-உழைத்துண்ணமாட்டாத சோம்பர், நோயால் நலிபு அழிந்தார் - பிணியினால் நலிந்தழிந்தவர், நாட்டு அறைபோய் நைந்தார் - தமது நாடுவிட்டுப்போய்த் தளர்ந்தவர், (என்று சொல்லப்படுகிற இவ்வைவருடைய) மெலிவு ஒழிய - தளர்ச்சி நீங்கும்படி, இன்னவர் ஆம் என்னார் ஆய் - இன்னாராவரென்று ஆராயாமல், ஈந்த - கொடுத்த, ஒரு துற்று - ஒரு கவளவுணவு, (கொடுத்தவரை அடுத்த பிறவியில்) மதித்து - கணித்து, மன்னவர் ஆ செய்யும் - அரசராகச் செய்யும், எ - று.

க-ரை. வலியழிந்தார் முதலிய வைவருக்கும் ஒருதுற்றுணவு கொடுத்தவர் அவ்வறப்பயனால் அரசராய்ப் பிறப்பார் என்பதாம்.

வி-ரை. வலி - சரீரபலம். மூத்தார்-வயது முதிர்ந்தவர். வடக்கிருந்தார் - உழைத்துண்ணமாட்டாத அசக்தர். நலிபு - செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அறைபோதல் - ஓடிப்போதல். இன்னவர் ஆம் என்னாராய் - உற்றார் அயலாரென்று ஆராயாமல். ஒருதுற்று - சிறிதுணவு எனினுமாம். ஒருதுற்றுக் கொடுத்தவர்க்கே இங்ஙனம் அரசராகப்பிறத்தல் பயனெனின், விசேடமாக அன்னதா

னம் செய்பவர்க்குண்டாகிற பயன் இவ்வளவென்று மதித்துரைத்த வியையாதென்றவாறாயிற்று. (எங)

கலங்காமை காத்தல் கருப்பஞ் சிதைந்தா
லிலங்காமை பேரறத்தா லீற்றம்—விலங்காமைக்
கோடல் குழவி மருந்து வெருட்டாமை
நாடி னறம்பெருமை நாட்டு.

ப-ரை. கருப்பம் - வயிற்றுட் கருவானது, கலங்காமை - அழியாமல், காத்தல்-காத்தலும், (கருப்பம்)சிதைந்தால்-கருப்பம் சிதைந்தால், இலஙகாமை - (பிறர்க்கு) வெளிப்படாமல், பேர் அறத்தால் ஈற்றம் - மறையப்பெயர்த்து வாங்குதலும், குழவி-குழவியை, விலங்காமை கோடல்-இடைவிலங்காமற் செய்து கொள்ளுதலும், மருந்து-(குழவிபிறந்து நோய்கொண்டால் அதற்கு) மருந்தும், வெருட்டாமை - (அக்குழவியை) அச்சுறுத்தாமையும், (ஆகிய இவ்வைந்தினையும்) நாடின் - ஆராயின், பெருமை அறம் - பெரிய அறமென்று, நாட்டு - நிலைபெறுத்துவாயாக, எ - று.

க-ரை. கருப்பம் கலங்காமை காத்தல் முதலிய ஐந்தும் பேரறமாக நாட்டுவாயாக என்பதாம்.

வி-ரை. கலங்காமை இலங்காமை விலங்காமை என்பன எதிர் மறை வினையெச்சங்கள், இவற்றுள் ஆமை மூன்றும் வினையெச்ச விகுதிகள். வெருட்டாமை - எதிர்மறைத் தொழிற்பெயர். இலங்குதல் - பிறர்க்குப் புலப்படுதல், ஈற்றம் - ஈன்றல். விலங்காமை - விலகாமை. வெருட்டாமை யென்பதற்குப் பகுதி வெருட்டு, இது பிற வினைப்பகுதி; தன்வினைப்பகுதி வெருள். அறம் பெருமையென்பன முன்பின்னாகமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டன. (எச)

சூலாமை சூலிற் படுந்துன்ப மீன்றபி
னேலாமை யேற்றால் வளர்ப்பருமை—சால்பவை

வல்லாமை வாய்ப்ப வறிபவ ருண்ணாமை
கொல்லாமை நன்றாற் கொழித்து.

ப-ரை. சூலாமை (துன்பம்) - சூல்கொள்ளாமையால் வருந் துன்பமும், சூலின்பமும் துன்பம் - சூலினாலுண்டாகுந் துன்பமும், ஈன்ற பின் ஏலாமை - குழவியைப் பெற்றபின்பு அதனை யேற்றுக் கொள்ளாமை, ஏற்றால் வளர்ப்பு அருமை - ஏற்றுக்கொண்டால் அதனை வளர்த்தலருமை, சால்பவை வல்லாமை - (வளர்த்தபிள்ளை) சால்புகுணங்களை மாட்டாமையும், (ஆகிய இவ்வைந்தினையும்,) வாய்ப்ப அறிபவர் - வாய்ப்ப உணர்வோர், கொழித்து-ஆராய்ந்து, கொல்லாமை - ஒருயிரைக் கொல்லாமையும், உண்ணாமை - (அதன் தசையை) உண்ணாமையும், நன்று-நன்மையாம், எ-று.

க-ரை. சூல்கொள்ளாமையால் வருந்துன்பமுதலியவைந்தினையும் நன்குணர்ந்த பெரியோர், ஒருயிரைக் கொல்லாமையும் அதன் தசையை யுண்ணாமையும் நன்றென்பதாம்.

வி-ரை. சூலாமை - சூல் என்னும் பெயரடியாகப்பிறந்த எதிர்மறைத் தொழிற்பெயர். சூலல்-கருக்கொள்ளல். வளர்ப்பு-தொழிற்பெயர். சால்பு - நிறைகுணம். வாய்ப்பவறிதல் - நன்குணர்தல். கொழித்தல் - ஆராய்தல். கொல்லாமை - கொலைசெய்யாமை. உண்ணாமை - ஊனுண்ணாமை. கொல்லாமை உண்ணாமை யென்பன எதிர்மறைத் தொழிற்பெயர்கள். ஆல் - அசை. (எ௫)

சிக்கர் சிதடர் சிதலைப்போல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கால்—டுெருக்க
வருநோய்கள் முன்னளிற் றீர்த்தாரே யின்று
மொருநோயு மின்றிவாழ் வார்.

ப-ரை. சிக்கர் - தலைநோயுடையாரையும், சிதடர் - பித்துடையாரையும், சிதலைப்போல் வாய் உடையார் - வாய்ப்புற்றுடையாரை

யும், துக்கர் - கயநோய் கொண்டாரையும், துருநாமர் - மூலநோய் கொண்டாரையும், அக்குங்கால் - ஆராயுமிடத்து, தொக்க - கூடி வருத்துகின்ற, அரு நோய்கள் - தீர்த்தற்கரிய நோய்களை, முன்னாளில் - முற்காலத்தில், தீர்த்தாரே - தீர்த்தவரே, இந்நாள் - இக்காலத்தில், ஒருநோயும் இன்றி வாழ்வார் - ஒருபிணியுமில்லாமல் சுகமாய் வாழ்ந்திருப்பவர், எ-று.

க-ரை. தலைநோயுடையார் முதலிய ஐவரையும் அவர்படுந் துன்பங்களினின்று முற்காலத்தில் ஒழித்தவரே இக்காலத்தில் ஒரு நோயுமில்லாமல் வாழ்ந்திருப்பவர் என்பதாம்.

வி-ரை. சிதல் - கறையான், அது இங்கு அது உறையும் புற்றைக் குறித்தது. துக்கம் - கயநோய் (க்ஷயரோகம்). துருநாமம் - மூலவியாதி. நோய் - துன்பம். முன்னாள் இந்நாள் என்றது முற்பிறப்பையும் இப்பிறப்பையும். (எசு)

பக்கம் படாமை யொருவர்க்குப் பாடேற்றல்
தக்கம் படாமை தவமல்லாத்—தக்கா
ரிழியினர்க்கே யானும் பசித்தார்க ணீதல்
கழிசினங் காத்தல் கடன்.

ப-ரை. ஒருவர்க்கு பக்கம் படாமை - எல்லாவுயிர்க்கும் ஒத்தலும், பாடு ஏற்றல் - படுந்துன்பமாற்றுதலும், தக்கம் படாமை - ஒருபொருளினிடத்தும் பற்றுப்படாமையும் ஆகிய இம்மூன்றும், தவம் - தவத்தார்க்குரிய குணங்களாம்; தவம் அல்லா-தவஞ்செய்தலில்லாத, தக்கார்-தகுதியாகிய இல்வாழ்வார்க்கு, இழி இனர்க்கேயானும்-இழிகுலத்தார்க்கேயாயினும், பசித்தார்கண் ஈதல்-பசித்தவர்க்கு உணவு கொடுத்தலும், கழிசினம் காத்தல் - மிகுகோபத்தைத் தடுத்தலும், கடன் - குணங்களாம், எ - று.

க-வு.ர. பக்ஷபாத மில்லாமை முதலிய மூன்றும் துறவறத்தார்க்கும், பசித்தவர்க்குணவு கொடுத்தலும் மிகுகோவத்தைதக்காத்தலும் இல்லறத்தார்க்கும் தகுதியாகிய குணங்க ளென்பதாம்.

வி-ரை. பக்கம்படாமை-ஒருபக்ஷத்திற் சாயாமை, இது நடுவு நிலைமை யெனப்படும். தக்கம்படாமை-ஒரு பொருளினும் பற்றின்றியிருத்தல். இழியினர் - இழிவாகிய இனத்தார். இனம் - குலம். ஆயினும் எனற்பாலது ஆனும் எனத் தொகுத்தலாயிற்று. பசித்தார்கண் என்பதில் கண் என்னும் ஏழனுருபு நான்கனுருபின் பொருளில் வந்தது. (எஎ)

புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டு மில்லாதார்—கண்கண்பட்
டாழ்ந்து நெகிழ்ந்தவர்க் கீந்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார் மகிழ்ந்து.

ப-ரை. புண்பட்டார்கண் - போரின்கண்ணே புகுந்து புண்பட்டவரிடத்தும், போற்றுவார் இல்லாதார்கண் - பாதுகாக்கும் களைகணில்லாதவரிடத்தும், போகு உயிரார்கண் - உயிர்போகுந் தன்மையை யடையவரிடத்தும், கண்கெட்டார்கண்-குருடரிடத்தும், கால் இரண்டும் இல்லாதார்கண்-இரண்டு கால்களுமில்லாதவராகிய முடவரிடத்தும், கண்பட்டு - கண்ணோடி, ஆழ்ந்து நெகிழ்ந்து-மனமிகுதியாய் நெகிழ்ந்து, அவர்க்கு - (புண்பட்டார் முதலிய) அவ்வைவருக்கும், ஈந்தார் - அவர் வேண்டுவனவாகிய உணவு முதலியவற்றைக் கொடுத்தவர், கடைபோக மகிழ்ந்து வாழ்ந்து கழிவார் - இடையூறுபட்டொழியாமல் கடைபோக மகிழ்ந்து வாழ்ந்து கழிவார், எ - று.

க-ரை. புண்பட்டவர் முதலிய ஐவர்க்கும் மனமிரங்கி அவர் வேண்டுவன கொடுத்தாதரித்தவர், நெடுங்காலம் இடையூறின்றி மகிழ்ந்து வாழ்ந்து கழிவார் என்பதாம்.

வி-ரை. புண்பட்டார் - போர்முகத்திற் சென்று காயம்பட்டவர். போற்றுதல்-பாதுகாத்தல். களைகண்-ஆதரவு, புகல். கண்கெட்டார் - கட்பார்வை யழிந்தவர் எனினுமாம். வேண்டுவன - உணவு முதலியவை. இடையூறு - தடை, துன்பம். கடைபோகவாழ்தல் - முடிவுபோக வாழ்தல். கழிதல் - உடம்பைவிட்டு நீங்குதல். (எஅ)

பஞ்சப் பொழுது பாத்துண்பான் காவாதா
னஞ்சா துடைபடையுட் போந்தெறிவா—னெஞ்சாதே
யுண்பதுமு னீவான் குழவி பலிகொடுப்பா
னெண்பதின் மேலும்வாழ் வான்.

ப-ரை. பஞ்சப்பொழுது - சிறுவிலைக்காலத்தில், பாத்து உண்பான் - பலர்க்கும் பகிர்ந்து பின்பு தானுண்பவன், காவாதான்-தன்னிடத்துள்ள பொருளைக் காவாது பிறருக்கே யுதவுவோன், உடைபடையுள்-உடைந்த தன் படையினுள்ளே, அஞ்சாது போந்து-அஞ்சாமற் புகுந்து, எறிவான் - (பகைவர் படையை)எறிந்து (தன்படையை உய்யக்கொள்பவன்), எஞ்சாதே - ஒருநாளுமொழியாமல், உண்பது - தானுண்பதை, முன் - முன்னே, ஈவான் - பிறர்க்குக் கொடுத்துப் பின்னுண்பவன், குழவி பலிகொடுப்பான் - பசித்த குழவிகளுக்குச் சோறளிப்பவன், (ஆகிய இவ்வைவரும்) எண்பதின் மேலும் - எண்பது வயசுக்கு மேலும், வாழ்வான் - சுகமாக உயிர் வாழ்ந்திருப்பான், எ - று.

க-ரை. பஞ்சக்காலத்தில் பலர்க்கும் பகிர்ந்து பின்பு தானுண்பவன் முதலிய ஐவரும் எண்பது வயதுக்குமேலும் சுகமாக உயிர் வாழ்ந்திருப்பார் என்பதாம்.

வி-ரை. பஞ்சம் - சிறுவிலைக்காலம். பகுத்து எனற்பாலது பாத்து என மரூஉவாயிற்று. அஞ்சாது போந்து எனவியையும். பஞ்சப்பொழுது என்பதனீற்றில் எழனுருபு தொக்கது. குழவிபலி-நான்

காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். பலி - சோறு. வாழ்வான் என்ற குறிப்பால் எண்பது வயதைக் குறித்தது. வேண்டப்படுவன வாகிய இசையெச்சங்கள் வருவித் துரைக்கப்பட்டன. பாத்துண்டல் எல்லாக்காலத்தும் பேரறமேயாயினும் சிறுவிலைக் காலத்தில் அது செய்தல் மிகச்சிறந்து காட்டுமென்பது தோன்ற 'பஞ்சப்பொழுது பாத்துண்பான்' என்றும், அச்சிறப்பு நோக்கியே அதனை முன்னெடுத்தும் கூறினர். (எகூ)

வரைவில்லாப் பெண்வையார் மன்னைப்புற் றேறார்
புரையில்லார் நள்ளார்போர் வேந்தன்—வரைபோற்
கடுங்களிறு விட்டுழிச் செல்லார் வழங்கார்
கொடும்புலி கொட்கும் வழி.

ப-ரை. வரைவு இல்லா-விவாகமில்லாத, பெண் - (பொதுப்) பெண்டிரை, வையார் - (தமக்கு மனைவியாகத் தமது வீட்டில்) வைத்துக்கொள்ளார்; மன்-நிலைபெற்ற, நை-நைதலையுடைய, புற்று-புற்றின்மேல், ஏறார் - ஏறமாட்டார்; புரை இல்லார்-தமக்கொப்பில்லாதாரை, நள்ளார் - நட்புக்கொள்ளார்; போர் வேந்தன் - போர்த்தொழிலில் வல்ல அரசனது, வரைபோல் - (உருவத்தால்) மலைபோன்ற, கடுங்களிறு - கடுங்களிறு, விட்டுழி - விடுபெட்டவிடத்து, செல்லார் - அதனெதிரே போகார்; கொடும்புலி-கொடிய புலிகள், கொட்கும் - சுழலாநின்ற, வழி - காட்டுவழியில், வழங்கார்-நடவார் (அறிவுடையார்), எ - று.

க-ரை. அறிவுடையார் பொதுப்பெண்டிர் விழைவு முதலியவற்றைச் செய்யார் என்பதாம்.

வி-ரை. வரைவு-வரைதல், தொழிற்பெயர்; இது மணஞ் செய்தல் என்னும் பொருளது. வரைவில்லாப்பெண் என்றதனால் பொதுப் பெண் என்பது விளங்கிற்று. இவர் ஒருவரையே மணம்புரிந்துகொ

ள்ளாது பலர்க்கும் போகமாதரா யிருத்தலால் இவர்க்குப் பொதுப் பெண்டிர் என்னு மிப்பெயர் வழங்கலாயிற்று. மன்னை என்பதற்கு மிகுதியாக நைந்த எனினுமாம். மிகுதியாக நைதலாவது பழைய தாய்த் தலைமழுங்கி யிருத்தல். புரை - ஒப்பு. இல்லார் - இல்லாரை யெனப் பொருள்படலால் இரண்டனுருபு தொக்கது. வரைபோல் என்ற வுவமையால் உருவப்பெருமையும் கருநிற முதலியனவுங் கொள்க. கடுமை - கொலைத்தொழில் வன்மை. விட்டவுழி விட்டுழி யெனத் தொகுத்தல் பெற்றது. கொட்கல் - சுழலல். கொடும்புலி கொட்கும் என்னும் அடையால் வழி காட்டுவழி யென்பது பெறப் பட்டது. வையார் முதலியவற்றிற்கு வினைமுதலாகிய அறிவுடையார் என்பது வருவிக்கப்பட்டது. (அ0)

தக்கார் வழிகெடா தாகுந் தகாதவ
ருக்க வழியரா யொல்குவர்—தக்க
வினத்தினா னாகும் பழியும் புகழு
மனத்தினா னாகு மதி.

ப-ரை. தக்கார் - தகுதியுடையாரது, வழி - சந்ததி, கெடாது ஆகும் - என்றுந் தளராது விருத்தி யடைவதாகும்; தகாதவர் - தகுதியற்றவர், உக்க வழியராய் - அழிந்த வழியை யுடையவராய், ஒல்குவர் - தளர்வார்; பழியும் புகழும் - (ஒருவனுக் குளவாகும்) பழியும் புகழும், தக்க இனத்தினான் ஆகும் - அவன்சேர்ந்த இனத் தினா லுளவாகும்; மதி - அறிவானது, மனத்தினான் ஆகும் - (ஒருவ னது) மனத்தினளவே யுண்டாகும், எ-று.

க-ரை. தகுதியுடையார் சந்ததி யென்றுங் குன்றாது எழில் பெற்று விளங்கும்; தகுதி யில்லாதார் சந்ததி குன்றிக் குறையும்; ஒருவனுக்குப் பழியும் புகழும் அவன் சேர்ந்த இனத்தினா லுளவா கும்; அறிவானது அவனது மனத்தினளவே யுண்டாகும் என்பதாம்.

வி-ரை. தக்கார் - தகுதியுடையார் (நடுவுநிலைமை யுடையவர்).
தகாதவர் அஃதில்லாதவர். இவ்விருவர்க்கும் எச்ச முண்மையும்
இன்மையும் குறிகளாதலால், 'தக்கார் வழிகெடா தாகுந் தகாதவர்,
உக்க வழியரா யொல்குவர்' என்றார். "தக்கார் தகவில ரென்ப தவர
வர், எச்சத்தாற் காணப் படும்" என்பது திருக்குறள். எல்லார்க்கும்
அறிவு அவரவர் மனத்துளதாயினும் அது அவரவர் சேர்ந்த இனத்
தளவாகவே விளங்கும் என்பது தோன்றும்வண்ணம், 'தக்க வின
த்தினாலும் பழியும் புகழும்' என்றார். "மனத்தானா மாந்தர்க் குண
ர்ச்சி யினத்தானாம், இன்னா னெனப்படுஞ் சொல்" என்பது திருக்
குறள். தக்க வினத்தினாலும் பழியும் புகழும் என்றாராயினும்
தீயினத்தாற் பழியும் நல்லினத்தாற் புகழும் உளவாமெனக்கொள்க.

கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சா
னிகழ்ந்தவை யின்புறா னில்லார்—மொழிந்தவை
மென்மொழியா லுண்மகிழ்ந் தீவானேல் விண்ணோரா
லின்மொழியா லேத்தப் படும்.

ப-ரை. (ஒருவன்) கழிந்தவை - இறந்த பொருட்கு, தான் இர
ங்கான்-தானிரங்காதவனும், கைவாரா-தனக்குக் கைவாராதவற்றை,
நச்சான் - விரும்பி வருந்தாதவனும், இகழ்ந்தவை - பெரியோரா
லிகழப்பட்டவற்றை, இன்புறான் - விரும்பாதவனும், இல்லார் -
பொருளில்லாதவர், மொழிந்தவை - இரந்து வேண்டிக்கொண்டவ
ற்றை, மென்மொழியால் - இன்சொல்லோடு, உள் மகிழ்ந்து - மன
மகிழ்ந்து, ஈவான் - கொடுப்பவனும், எல் - ஆயின், (அவன்) விண்
ணோரால் - தேவர்களால், இன்மொழியால் - இன்சொற்களால், ஏத்
தப்படும் - துதிக்கப்படுவான், எ-று.

க-ரை. ஒருவன் இரவலர் விரும்பின பொருள்களை இன்சொல்
லோடு வழங்குதல் முதலிய நற்செயல்களை யுடையனாயின், அவன்

தேவர்களால் இன்சொற்களைக்கொண்டு துதிக்கப்படுவான் என்பதாம்.

**வி-ரை.** கழிந்தவை - நிகழ்ந்தவை. இரங்கல் - அநுதபித்தல். கைவாரா - கைகூடாதவை. நச்சல் - விரும்பல், இது நத்தல் எனவும் வழங்கும். இகழ்ந்தவை - பழிக்கப்பட்டவை, அவை தீசெயல்கள். இன்புறல் - விரும்பல். இல்லார் - ஒரு பொருளுமில்லாத வறியர் மொழிந்தவை - கேட்டவை மென்மொழி - பணிமொழி. எல் எனின் என்பதன் மரூஉ. விண்ணோர் - சுவர்க்க லோகத்தை யிடமாகவுடையவர், இது இடத்தான் வந்தபெயர். (அஉ)

காடுபோற் கட்கினிய வில்லம் பிறர்பொரு
ளோடுபோற் றாரம் பிறந்ததா—யூடுபோய்க்
கோத்தின்னா சொல்லானாய்க் கொல்லானேற் பல்லவ
ரோத்தினா லென்ன குறை.

**ப-உரை.** (ஒருவன்) கட்கு இனிய - கண்ணுக்கினிய, இல்லம் - பிறருடைய இல்லத்தை, காடுபோல் - காடுபோலக்கொண்டு விரும்பாமல், பிறர் பொருள் - பிறர்பொருளை, ஓடுபோல் - ஓடுபோலக் கொண்டு விரும்பாமல், தாரம் - பிறன் மனையாளை, பிறந்த தாய் - தான் பிறத்தற் கிடமாயிருந்த தாயாகக்கொண்டு விரும்பாது, ஊடுபோய் - பிறரிடத்தே சென்று, கோத்து - தொடுத்து, இன்னா சொல்லானாய்-பழிமொழிகளைச் சொல்லாதவனாய், கொல்லானேல் - ஒருயிரையுங் கொல்லாதவனாயின், (அவனுக்கு) பல்லவர் - பெரியார் பலரும் கூறிய, ஓத்தினால் - நூல்களால், என்ன குறை - என்ன குறையுண்டு, எ-று.

**க-ரை.** ஒருவன் பிறரது அழகிய இல்லத்தைக் காடுபோலவும், பிறர்பொருளை ஓடுபோலவும், பிறன் மனையாளைத் தன்தாயாகவும் கருதி விரும்பாமல், பிறரைப் பழித்துரையாமல், ஒருயிரையுங் கொ

ல்லா திருப்பானுயின், அவனுக்குப் பெரியோர் சொல்லிய நூல்க ளால் என்ன குறையுண்டு என்பதாம்.

வி-ரை. காடுபோல் என்றதனுனே கருதலும் விரும்பாமையும் பெறப்பட்டன. பிறர்பொருள் ஓடுபோல் என்றதற்கும், தாரம் பிற ந்த தாய் என்பதற்கும் இவ்வாறே யுரைத்துக்கொள்க. பிறர் என்பது இல்லத்திற்கும் தாரத்திற்கும் கூட்டி யுரைக்கப்பட்டது. கோத்தல்-கற்பித்தல் (கோவை செய்தல்). பல பெரியோர்சொன்ன நூல்களிற் பொதிந்திருப்பது வேதசாரமேயாதலால் அவற்றை 'ஓத்து' என்றார். ஓத்து - வேதம். என்னகுறை யென்றது அந்நூல்களால் அவனைக் குறைகூறக் கிடந்த தொன்றுமில்லை யென்றபடி. (அரு)

தோற்கன்று காட்டிக் கறவார் கறந்தபால்
பாற்பட்டா ருண்ணார் பழிபாவம்—பாற்பட்டா
ரேற்றவா தின்புற்று வாழ்வன வீடழியக்
கூற்றுவப்பச் செய்யார் கொணர்ந்து.

ப-ரை. பாற்பட்டார் - நன்னெறியின்பாற்பட்டவர், தோல் கன்று காட்டி - தோலாற்செய்த கன்றினைக்காட்டி, கறவார் - பசுவைக் கறவார்; பாற்பட்டார் - நன்னெறிப்பட்டவர், கறந்தபால் - அவ்வாறு கறந்தபாலை, உண்ணார் - பருகார்; பழி பாவம் - பழியையும் பாவத்தையும், பாற்பட்டு - தம்மே லேற்றுக்கொண்டு, அவாவாது-விரும்பாமல், இன்புற்று - தம் கிளைகளோடு இன்புற்று, வாழ்வன-வாழ்வனவாகிய உயிர்களை, ஈடு அழிய-(அவற்றின்) பெருமை குன்ற, கொணர்ந்து-கொண்டுவந்து, கூற்று உவப்ப செய்யார்-கூற்றுவன் விரும்பக் கொலைசெய்யார், எ - று.

க-ரை. நன்னெறிப்பட்டவர் தோற்கன்று காட்டிப் பசுவின் பாலைக் கறத்தல் முதலிய தீச்செயல்களைச் செய்யார் என்பதாம்.

வி-ரை. தோற்கன்று காட்டலாவது இறந்துபோன கன்றின் தோலையுரித்து அதனுள்ளே வைக்கோலைப் பொதிந்து அதனை உயிர்க் கன்றுபோல் அதன் தாய்ப் பசுவுக்குக் காட்டுதல். பாற்பட்டார் என்பது கறவார் என்பதனோடுங் கூட்டி யுரைக்கப்பட்டது. பழிபாவம் - உம்மைத்தொகை. அவாவாது எனற்பாலது அவாது எனத் தொகுத்தலாயிற்று. இன்புற்று வாழ்தல் - மனமகிழ்ந்து வாழ்தல். செய்தல் - கொலைசெய்தல், இது கூற்றுவப்ப என மேல்வருதலாற் பெறப்பட்டது. (அசு)

நகையொடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையொடு பாட்டுரையென் றைந்துந்—தொகையொடு
மூத்தோ ரிருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தா ரறிந்தவ ராய்ந்து.

ப-ரை. நகையொடு-சிரிப்புடன், மந்திரம் - செவிச்சொல்லும், நட்டார்க்கு - தம் உற்றார்பொருட்டு, வாரம் - பக்ஷபாதம் பேசுதலும், பகையொடு - பலரோடு பகை கொள்ளுதலுடனே, பாட்டு உரை - பாட்டுக்குப் பொருள் சொல்லுதலும், என்ற - என்று சொல்லப்பட்ட, ஐந்தும் - இவ்வைந்தும், தொகையொடு - கூட்டத்தோடு, மூத்தோர் - பெரியோர், இருந்துழி - இருக்குமிடத்தில், வேண்டார் - செய்யவிரும்பார் அறிவுடையோர்; (இந்த நீதியை) ஆய்ந்து அறிந்தவர் - ஆராய்ந்தறிந்தவர், முது நூலுள் - பழைய நூல்களில், யாத்தார் - கட்டுரைத்து வைத்தார், எ-று.

க-ரை. பெரியோர் கூடியிருக்கு மிடத்தில், நகைமுதலிய ஐந்தினையும் அறிவுடையோர் செய்யா ரென்பதாம்.

வி-ரை. நகை - தொழிற்பெயர், பகுதி நகு, விகுதி ஐ. மந்திரம் - இரகசியம், அது இங்குச் செவிச்சொல்லின் மேலதாயிற்று. வாரம் - அன்பு, அது இங்குப் பக்ஷபாதத்தைக் குறித்தது. பகை -

பிளவுபடல் (வேறுபடல்); இதற்குப் பகுதி-பகு, ஐ-தொழிற்பெயர் விகுதி; இதனை விரோதமென்பர் வடநூலார். உரை- உரைகூறுதல். என்றஜநதும் என்றைநதும் எனத் தொகுத்தல் பெற்றது. தொகை தொகுதல், இதுவும் தொழிற்பெயர்; பகுதி - தொகு, விகுதி-ஐ. மூத்தோர்-வயதானும் அறிவானு முதிர்ந்தவர். இருந்துழி இருந்த வழி யென்பதன் றொகுத்தல் விகாரம்; உழி - இடம். யாதல் - பொதிந்துவைத்தல்; "செவிச சொல்லுஞ் சேர்ந்தநகையு மவித்தொழுகல்,ஆன்ற பெரியா ரகத்து" என்னுந் திருக்குறளை யிதற்குதாரண மாகக் கொள்ளலாம். (௮௫)

ஐவாதா ரொருவ னினிநிய வாழ்த்திய
தெய்தா வுரையை யறிவானே—ஐைய்த
வறிவறி யாவான் டெனவுரைப்பார் வாயுட்
டறிவெறியார் தக்காரே தாம். (௮௬)

........................................ (௮௭)

........................................ (௮௮)

........................................ (௮௯)

........................................ (௯0)

........................................ (௯௧)

........................................
பொழிப்பமன் னொன்றாரா அ யத்தன்
செவ்வந் தனிப்பா னிமைய யென்னும் பொற்றினைத்
தெய்வ மாத ரோ றுயமாற் றேர்ந்து. (௯௨)

சத்தமெய்ஞ் ஞானந் தருக்கஞ் சமயமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தவிவ் வைந்து மறிவான் றலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து.

ப-ரை. சத்தம்-வழக்குநூலும்,மெய்ஞானம்-சொன்முடிபுநூலும்,தருக்கம் - தருக்கநூலும், சமயம் - சமயநூலும், வித்தகர் - அறிவின்மிக்கோர், கண்ட - செய்த, வீடு - வீட்டுநூலும், உள்ளிட்டு - உட்பட,அத்தக இவ்வைந்தும்-அத்தகைமையாகியஇவ்வைந்தனையும், அந்தம் அறிவான் - அழகாயறிபவன், சிந்திப்பின் - ஆலோசிக்குமிடத்தில், சிறந்து - சிறப்படைந்து, தலை ஆய சிட்டன் - தலைமையாய சிட்டனாவான், எ-று.

க-ரை. சத்தநூல் முதலிய ஐந்துமறிந்தவன் தலைமைபெற்ற சிட்டனென்று சொல்லப்படுவான் என்பதாம்.

வி-ரை. ஆங்கு-அசை. சிட்டன்-மேலானவன். தலை-தலைமை (முதன்மை). சிறத்தல் - மேம்படுதல். தருக்கம் - நியாயசாத்திரம். சமயநூல்-உட்சமயம் புறச்சமயங்களைப் பிரதிபாதிக்கும் நூல்கள்.

கண்ணுங்காற் கண்ணுங் கணிதமே யாழினோ
டெண்ணுங்காற் சாந்தே யிலைநறுக்கிட்—டெண்ணுத
லிட்டவிவ் வைந்து மறிவா னிடையாய
சிட்டனென் றெண்ணப் படும்.

ப-ரை. கண்ணுங்கால் - நினைக்குமிடத்து, கண்ணும்-நினைத்தற்குரிய, கணிதம் - கணிதமும், யாழினோடு-யாழினுடன், எண்ணுங்கால் - ஆலோசிக்குமிடத்து, சாந்து-சந்தனமரைத்தல், இலை நறுக்கிட்டு - இலைகிள்ளி, எண்ணுதல் - எண்ணல், இட்ட-ஏற்படுத்தப்பட்ட, இவ்வைந்தும் - இந்த ஐந்துதொழில்களையும், அறிவான் -

அறிந்து செய்யவல்லவன், இடை ஆய சிட்டன் என்று-இடையாகிய சிட்டன் என்று, எண்ணப்படும் - எண்ணப்படுவான், எ-று.

கருத்துரை. கணிதநூல் முதலிய ஐந்தனையும் கற்றுவல்லவன் இடையாகிய சிட்டனென்று சொல்லப்படுவான் என்பதாம்.

விசேடவுரை. கண்ணுங்கால் எண்ணுங்கால் என்னும் வினையெச்சங்கள் எண்ணப்படும் என்னும் வினைகொண்டு முடிந்தன. இதில் கணிதம், யாழ்வாசித்தல், சந்தநமரைத்தல், இலைநறுக்கல், அவற்றை யெண்ணுதல் என்றைந்துதொழில்களடங்கியிருக்கின்றன. நறுக்கு-முதனிலைத் தொழிற்பெயர். இட்ட என்னும் பெயரெச்சம் ஐந்து என்னும் எண்ணுப்பெயர்கொண்டு முடிந்தது. அறிவான்-வினையாலணையும்பெயர். கண்ணல்-நினைத்தல். (௬௪)

நாணிலனுய்நன்கு நள்ளாதானுய்ப்பெரியார்ப்
பேணிலனுய்பிறர் சேவகனு—யேணில்
பொருந்திய பூண்முலையார் சேரிகைத் தில்லான்
பருத்தி பகர்வுழி நாய்.

பதவுரை. நாண் இலன் - நாணமில்லாதவன், நாய்-நாயோடொப்பான்; நன்கு நள்ளாதான் - நன்மையாகப் பிறரோடு நட்புக்கொள்ளாதவன், நாய்-நாயோடொப்பான்; பெரியார் பேணிலன்-பெரியாரைப் பேணுதவன், நாய்-நாயோடொப்பான்; பிறர் சேவகன்-பிறரிடத்துச் சேவகஞ்செய் துயிர்வாழ்வோன், நாய் - நாயோடொப்பான்; ஏண் இல் - பெருமையில்லாத, பூண் பொருந்திய- ஆபரணங்களையுடைய, முலையார்-தனங்களையுடையவராகிய பொதுப்பெண்டிர் வாழ்கின்ற, சேரி - சேரியின்கண், கைத்து இல்லான்-கைப்பொருளின்றி அவர்மீதுள்ள ஆசையாற்சென்று திரிவோன், பருத்தி பகர்வுழி-பருத்தி விற்குமிடத்திற் போய்நிற்கின்ற, நாய் - நாயோடொப்பான், எ-று.

க-ரை. நாணமில்லாதவன் முதலிய ஐவரும் நாயையிகர்ப்பார் என்பதாம்.

வி-ரை. அரும்பெறல் யாக்கையைப் பெற்ற மக்கள் அப்பேற்றுக்குரிய நாணுடைமை முதலிய பெருங்குணமில்வழி அவர் மிகவும் இழிபிறப்பினரென் றெண்ணப்படுவாராதலின் அவரை 'நாய்' என்றிழித்துக் கூறினர். இழிவிற் கெல்லையாய்ச் சிறந்துநிற்பது நாயென்றல் வெளிப்படை. நாணிலன் முதலியோரை ஒருவர்க்கொருவர் இழிவிற் சிறந்தோராக வுய்த்துணர்ந்து கொள்க. குலப்பெண்டிருள் பூணின்முலையார்.ருப்பினு மிருக்கலாம்; பொதுப்பெண்டிர் அவ்வாறிருக்கலாகா தென்றற்கு, 'பொருந்திய பூண்முலையார்' என்றார். இவர் பூண் முலையாராயிருத்தல் ஆடவரை மயக்குதற்கென்க. சேரி-தெரு. எண் - மனநிலை யெனினுமாம். (கரு)

நாணெளிது பெண்மை நகையெளிது நட்டானே
லேணெளிது சேவக னேற்பெரியார்ப்—பேணெளிது
கொம்பு மறைக்கு மிடையா யளியன்மீ
தம்பு பறத்த லரிது.

ப-ரை. கொம்பு-வஞ்சிக்கொம்பை, மறைக்கும்-மறைக்கின்ற, இடையாய்-இடையையுடையவளே, பெண்மை - (ஒருத்தி) பெண்மைக்குணமுடையளாயின், (அவளுக்கு)நாண் எளிது-நாணமெளிதாகும்; நட்டானேல்-ஒருவனோடொருவன் நட்டானாயின், (அவனுக்கு) நகை எளிது-மகிழ்ந்து நகுதலெளிதாகும்; சேவகனேல் - ஒருவன் சேவகனாயின், (அவனுக்கு) எண் எளிது-வலிசெலுத்த லெளிதாகும்; பெரியார்-குணத்தாற் பெரியாராயின், (அவர்க்கு) பேண் எளிது-பிறரைப் பேணுத லெளிதாகும்; அளியன்மீது-(யாவரிடத்தும்) அருளுடையான்மேல், அம்பு பறத்தல் - பிறரெய்யும் அம்பு விரைந்து செல்லுதல், அரிது - அரிதாகும், எ-று.

க-ரை. பெண்குணமுடையாள் முதலாயினோராகிய நால்வரிடத்தில் நாண் முதலியவை யுளவாதலெளிதாகும்; யாவரிடத்தும் அருளுடையான்மேல், பிறரெய்யும் அம்பு விரைந்து செல்லுதல் அரிதாகுமென்பதாம்.

வி-ரை. கொம்புமறைக்கு மிடையாய் என்றது மகடூஉமுன்னிலை (விளி). கொம்பு - பூங்கொம்பு எனினுமமையும். நாண் - நாணுடைமை. பெண்மை - பெண்மைக்குரிய குணங்கள்; அவை: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பனவாம். நட்டல் - நட்புக்கோடல் (சிநேகித்தல்). நாண் பேண் - முதனிலைத் தொழிற்பெயர்கள். சேவகன் - வீரன். எண் - வலி. அளி - யாவர்மீதும் ஒருதன்மைத்தாய அருளுடைமை; இதுவாயிலாக அன்னதானம் முதலியவை நிகழுமாதலான் ஈகையாளனை 'அளியன்' என்றார். பறத்தல் - விரைந்துசேறல்.

இன்சொலா னாகுங் கிளைமை யியல்பில்லா
வன்சொல்லி னாகும் பகைமைமன்—மென்சொல்லி
னோய்வில்லா வாரருளா மவ்வரு ணன்மனத்தான்
வீவில்லா வீடாய் விடும்.

ப-ரை. இன்சொலான் - (ஒருவன் சொல்லும்) இன்சொல்லினால், கிளைமை - உறவாந்தன்மை, ஆகும் - உளதாகும்; இயல்பு இலா - நற்குணமில்லாத, வன்சொல்லின் - வன்சொல்லினால், பகைமை - பகைகள், ஆகும் - உளவாகும்; மன் - மிகுதியாகிய, மென்சொல்லின் - மென்சொல்லினால், ஓய்வு இல்லா - தளர்வில்லாத, ஆர் அருள் - அரிய அருளானது, ஆம் - உண்டாகும்; அ அருள் - அந்த அருளினாலாகிய, நல் மனத்தால் - (ஒருவனது) நல்லமனத்தினால், வீவு இல்லா - அழிவில்லாத, வீடு ஆய்விடும் - வீடு உண்டாய்விடும், எ - று.

க-ரை. இன்சொல் முதலியவற்றால் உறவு முதலியவை யுளவாமென்பதாம்.

வி-ரை. இன்சொல்-உறவாகிய உறுதியைத் தருஞ்சொல். வன்சொல் - பகையாகிய அழிவைத் தருஞ்சொல். இயல்பு-குணம்; அது இங்கு நற்குணத்துக்காயிற்று. கிளைமை பகைமை யென்பன அவற்றையுடையார் மேலனவாதலால் பண்பாகுபெயர்கள். மன் - அசை நிலை யெனினுமாம். அருள்பெற லரும்பேறுதலால் அதனை 'ஆரருள்' என்றார். வீவு - அழிவு; இது தொழிபெயர். வீடு-முத்தி. ஆய்விடும் என்பதில் விடும் துணிவுப்பொருண்மை விகுதி. (௬௭)

தக்க திளையான் றவஞ்செல்வ னூண்மறுத்த
றக்கது கற்புடை யாள்வனப்புத்—தக்க
தழற்றண்ணெென் றோளா ளறிவில ளாயி
னிழற்கண் முயிறாய் விடும்.

ப-ரை. இளையான் - இளையவன், தவம் - (துறந்து) தவஞ்செய்தல், தக்கது - தகுதியுடைத்து; செல்வன் - செல்வமுடையோன், ஊண் மறுத்தல் - உணவு வெறுத்து விரதங்காத்தல், தக்கது-தகுதியுடைத்து; கற்பு உடையாள் - கற்புடையவளது, வனப்பு - அழகானது, தக்கது-தகுதியுடைத்து; அழல்-நெருப்பு, தண் என்-தண்ணிதென்று சொல்லுதற்குரிய, தோளாள் - தோள்களையுடையவளாகிய ஒருவன் மனைவியானவள், அறிவு இலள் ஆயின்-அறிவற்றவளாயின், நிழல்கண் - நிழலினிடத்து, முயிறு ஆய்விடும்-முயிற்றோடொக்கும், எ - று.

க-ரை. இளையான் முதலியோர் தவஞ்செய்தல் முதலியவை தகுதியுடையன; ஒருவன் மனையாள் அறிவின்றி யொழுகுவளாயின் அவ்வொழுக்கம் நிழலில் முயிறிருந்தாற்போலும் என்பதாம்.

வி-ரை. இளையான்-இளமைப்பருவமுடையவன். "உற்றநோய் நோன்றல்" முதலிய தொழில்கள் முதுமைப்பருவத்தில் செய்வனே

நடத்த வியலாதாதலால், 'தக்கதிலேயான்றவம்' என்றார். ஊண்மறுத்தல் என்றதனால் உபவாசாதிகளென்பது பெறப்பட்டது. 'கற்புடையாள் வனப்புத் தக்கது' என்றமையால், கற்பிலாள் வனப்புத் தகுதியற்றது என்பது தானே வெளியாயிற்று. 'அழற்றண்ணென்றோளாள்' என்றது தோளின்தண்மை மிகுதியைக் குறித்தது. அறிவிலள்-அறிவின்றி யொழுகுதலேயுடையாள். நிழல்-மரநிழல். மூயிறு - ஓர்வகை யெறும்பு. (கூஅ)

பொய்யாற் சுவர்க்கம்வா யானிரயம் பொருள்செய்யா
மையார் மடந்தையால் வாழ்வினிது— மெய்யன்றான்
மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய் தீதன்றா
லெத்தவ மாளும் படல்.

ப-ரை. பொய்யால்-பொய்ந்நெறி யொழுக்கத்தால், சுவர்க்கம் - சுவர்க்கமுளதாம், வாயால் நிரயம் - மெய்ந்நெறி யொழுக்கத்தால் நிரயமுளதாம், பொருள்செய் ஆம் - பொருள்தேடுதல் இனிதாகும், மை ஆர் - குற்றம்பொருந்திய, மடந்தையால் - மனேயாளோடு கூடி, வாழ்வு - இல்லின்கண் வாழ்தல், இனிது - இனிதாம், (என்று சிலர் சொல்லுதல்) மெய் அன்று ஆல்-மெய்யன்றாதலால், மை தக நீண்ட-மையெழுதத் தகுதியாக நீண்ட, மலர் - குவளேமலர்போன்ற, கண்ணாய் - கண்ணேயுடையாளே, எத்தவம் - எவ்வகையாகிய தவத்தையாயினும், ஆள்படல் உம்-ஆளுதலைச் செய்தலும், தீது அன்று - தீதன்று (நன்மையேயாம்), எ - று.

க-ரை. பொய்ந்நெறி யொழுக்கத்தாற் சுவர்க்கமுண்டு என்றல் முதலிய வீண் வார்த்தை பேசுவாரும் உளர்; ஆயினும், தவஞ்செய்தலும்மெய்ந்நெறி யொழுக்கமுமே சிறந்தன வென்பதாம்.

வி-ரை. பொய் - பொய்ந்நெறியி லொழுகுதல். வாய்மையால் எனற்பாலது வாயாவென மை குறைந்துநின்றது. செய-முதனிலைத் தொழிற்பெயர். மை - அஞ்சனம், கருமை யெனினுமாம். தகுதல் - பொருந்துதல். மலர் என வாளா கூறினாரேனும் கண்ணுக்குவமையாகப் புணர்க்கப்பட்டதனால் குவளைமலரென் றுரையுரைக்கப்பட்டது. தீதன்று என்றமையால் நன்றாம் என்றவாறாயிற்று. 'எத்தவமாகும் படல் தீதன்று' என்றமையால் இல்வாழ்வொழித்துத் தவத்தின் மேற் சேறலே நன்றென்பது தெற்றென விளங்கிற்று. (௬௬)

புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தே
னல்லறத்தா ரோடு நடக்கலா—நல்லறத்தார்க்
கட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே யிம்மையி
லட்டிட்டுண் டாற்றவாழ் வார்.

ப-ரை. புல் அறத்தின் - புல்லிய துறவறத்தினும், மனைவாழ்க்கை - இல்வாழ்க்கையானது, நன்று - நன்மை பயப்பதாய்; போற்று உடைத்தேல் - (இல்வாழ்க்கைநெறியிற் றவறாது அதனை) போற்றி யொழுகின், நல் அறத்தாரோடு நடக்கலாம்-நல்ல துறவறத்தாரோடு வைத்தெண்ணப்படலாம்; நல் அறத்தார்க்கு - நல்ல துறவறத்தார்க்கு, அட்டு - சமைத்து, இட்டு-பகிர்ந்திட்டு, உண்டு - (பிறகு) தாமுமுண்டு, ஆற்ற வாழ்ந்தார்களே-மிகவுமினிதாக (முற்பிறப்பில்) வாழ்ந்தவர்களே, இம்மையில் - இப்பிறப்பில், அட்டு இட்டு உண்டு-சமைத்திட்டுண்டு, ஆற்ற வாழ்வார் - மிகுதியாக வாழ்ந்திருப்பவர், எ - று.

க-ரை. துறவறத்தார் முதலியோர்க்குக் களைகணாயிருத்தலால் இல்வாழ்க்கையே சிறந்ததென்பதாம்.

வி-ரை. மனைவாழ்க்கை நன்று என்றதனாலே துறவுதீது என்பது தானே விளங்கிக்கிடக்கவும் புல்லறமென்றல் மிகையாகாதோ

வெனின்; ஆகாது, என்னை. "ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில் வாழ்க்கை, நோற்பாரி னோன்மை யுடைத்து", "அறனெனப் பட் டதே யில்வாழ்க்கை யஃதும், பிறன்பழிப்ப தில்லாயி னன்று", "அற த்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற், போஒய்ப் பெறுவ தெவன்". "துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கும், இல்வாழ் வா னென்பான் றுணை", "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர் க்கும். நல்லாற்றி னின்ற துணை" என்றற்றொடக்கத் தான்றோர் செய் யுட்களான் மனைவாழ்க்கைச் சிறப்பும் துறவற வாழ்க்கை யிழிவுந் தெற்றெனை விளங்குதலானென்க. முத்திக்கு வித்தாதலால் குற்ற மற்ற துறவறத்தை 'நல்லறம்' என்றார். (க00)

ஈவது நன்றுதீ தீயாமை நல்லவர்
மேவது நன்றுமே வாதாரோ—டோவாது
கேட்டுத் தலைநிற்க கேடி லுயர்கதிக்கே
யோட்டுத் தவநிற்கு மூர்ந்து.

ப-ரை. ஈவது-(பிறர்க்கு ஒருபொருளை) கொடுப்பது, நன்று - நன்மையாம்; ஈயாமை-கொடாமை, தீது-தீமையாம்; நல்லார்-நல்லோர், மேவாதாரோடு - பொருந்ாதவரோடு, மேவது-பொருந்தியிருப்பது, நன்று - நன்மையாம்; ஓவாது-இடையறாமல், கேட்டு - (நன்னெறிக் குக் காரணமாகிய நூற்பொருளை) கேட்டு, தலை - (அந்நெறியின்) கண்ணே, நிற்க - நிற்றலைச்செய்க; (நின்றால் அந்நிலை) கேடு இல் - அழிவில்லாத, உயர் - உயர்ந்த, கதிக்கு - வீட்டுநெறியின்கண்ணே, ஓட்டு - விரைந்துசெல்லுஞ் செலவின்கண், தவ ஊர்ந்து நிற்கும் - மிகுதியாக மேம்பட்டு நிற்கும், எ - று.

க-ரை. பிறர்க்கு ஒருபொருளைக் கொடுப்பது நன்று; கொடா மை தீது; பொருந்தாதவரோடும் பொருந்தியிருப்பது நன்று; நன்

னூற் பொருளைக்கேட்டு நன்னெறியில் நிற்கக்கடவன்; அந்நிலை அவனுக்கு வீட்டுநெறிக்குத் துணையாம் என்பதாம்.

வி-ரை. "நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம், இல்லெனினு மீதலே நன்று" என்ற திருக்குறட்கேற்க, 'ஈவது நன்று தீயாமை' என்றார். பகைகோடல் ஒரு வாற்றானும் நன்மை பயவாதாதலால், 'மேவது நன்று மேவாதாரோடு' என்றார். "கேடிலுயர்கதிக்கே யோட்டுத் தவசிற்கு ஊர்ந்து' என மேல்வருதலால், கேட்டு என்பதற்கு நன்னூற்பொருளைக் கேட்டு என்றுரை யுரைக்கப்பட்டது. வீட்டினது பெறலருமையும் பெருமையும் தோன்ற, கேடில் என்ற தமையாது உயர் என்றும் கதியை விசேடித்தார். ஓட்டு - விரைசெலவு. தவ - மிகுதிப்பொருடரும் உரிச்சொல். ஊர்தல் - மேம்படுதல். (௧0௧)

உண்ணிடத்து மொன்னார் மெலிவிடத்து மந்திரங்கொண்
டெண்ணிடத்துஞ் செல்லாமை தாஞ்றலையே—யெண்ணி
யுரைப்பூசல் கோற லுயர்தவமேற் கங்கைக்
கரைப்பூசை போற்றக் கடை.

ப-ரை. உண் இடத்தும் - பிறர் உண்ணுமிடத்தும், ஒன்னார் - பகைவர், மெலிவு இடத்தும்-தளர்ந்தவிடத்தும், மந்திரம் கொண்டு- மந்திராலோசனையை மேற்கொண்டு, எண் இடத்தும்-ஆலோசிக்குமிடத்தும், செல்லாமை - போகாமையே, தலை-தலையாய வொழுக்கமாம்; எண்ணி - ஆராய்ந்து, உரை - சொல்லுஞ் சொல்லில், பூசல் - மாறுபடுதலானது, உயர்-உயர்ந்த, தவம்மேல்-தவவேடத்தை மேற்கொண்ட காலத்தில், கோறல் - ஒருயிரைக்கொன்று தின்கை, போற்ற - ஆராயுமிடத்து, கங்கைக்கரை - கங்காநதிக் கரையிலுட் சார்ந்திருக்கிற, பூசை - பூனைபோல, கடை - கடையாய வொழுக்கமாம், எ - று.

க-ரை. பிறருண்ணுமிடத்தும், மெலிந்திருக்கிற பகைவரிடத்தும், பிறர் மந்திராலோசனை செய்யுமிடத்தும் போகாதிருத்தல் நன்று; தாம்சொல்லுஞ் சொல்லில் மாறுபடாமை நன்று; தவவேடம் பூண்டவொருவன் ஒருயிரைக் கொன்று அதன் தசையையுண்டல், கங்கைக்கரையி லுட்கார்ந்திருக்கிற பூனைபோலக் கடையாகிய கூடாவொழுக்கமாம் என்பதாம்.

வி-ரை. பிறருண்ணுமிடத்திற் சென்றால் அவர் அருவருப்பாராதலாலும், மெலிந்த பகைவர்மேற் சேறல் அறமன்றாதலாலும், பிறர் ஒரு காரியத்தைக் குறித்து ஆலோசிக்குமிடத்துச் சென்றால் அவர் ஐயுறுவாராதலாலும், 'உண்ணிடத்து மொன்னார் மெலிவிடத்து மந்திரங்கொண் டெண்ணிடத்துஞ் செல்லாமை தான்றலையே' என்றார். தான் தேற்றப்பொருளில் வந்தது. தலை-முதன்மை. மந்திரம்-இரகசியம். பூசல் - மாறுபாடு. கொல்லுதல் தினற்காதலால் கோறல் என்பதற்குக் கொன்று தின்கை யென்றுரை கூறப்பட்டது. பூசை-பூனை. "பூசை பாக்கன் மார்சாலம் பூஞை" என்பது திவாகரம். "ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு பூசைமுற்றவு நக்குபு புக்கென" என்பது கம்பராமாயணம். (கO௨)

பத்தினி சேவகன் பொத்தில் கடுந்தவசி
பொத்தில் பொருட்டிறத்துச் செவ்வியான்—பொத்தின்றி
வைத்தார் வழக்குஞ் சான்றவர்தஞ் செம்மை
செத்தா லறிக சிறந்து.

ப-ரை. பத்தினி-பத்தினியும், சேவகன்-சேவகனும், பொத்து இல் - குற்றமில்லாத, கடுந்தவசி - கடுந்தவசியும், பொத்து இல் - குற்றமில்லாத, பொருள்திறத்து - பொருட்டிறத்தில், செவ்வியான்-செவ்வியனுய்த் தேறப்படுவோனும், பொத்து இன்றி - குற்றமில்லாமல், வைத்தார் வழக்கு-அரசனாலே முதன்மையாக நியமிக்கப்பட்ட

வருடைய சால்பும், (ஆகிய இவ்வைவரும) சானறவர் - மேலோரா வர்; செம்மை - (இவருடைய) செம்மைக் குணத்தை, செத்தால் - (இவர்) இறந்துபட்டால், சிறந்து அறிக - மிகுதியாக அறிக, எ-று.

க-ரை. பத்தினி, சேவகன் முதலியோருடைய செம்மைக் குணங்கள், அவரிறந்தபின் மிகவும் உலகத்தாரால் அறியப்படும்.

வி-ரை. பத்தினி - இது கற்புடை மாதையும் நன்மனையாளை யும் குறிக்கும். சேவகன் - வீரன். தவசி - தவஞ்செய்வோன். கடுந தவசியென்றது அந்நபானாதிகளை வெறுத்து என்பெழுந்தியங்கும் யாக்கையனுய் நிற்கும் கடுந்தவத்தோனை. இவனுக்குப் பொத்தா வது கூடாவொழுக்கம். பொருட்டிறத்துச் செவ்வியானுதலாவது - ஒருவர் தன்னிடத்து நம்பிவைத்த பொருளை வஞ்சித்துக் கவர்ந்து கொள்ள நினையாமை. பத்தினி சேவகன் முதலியோர் உயிர்வாழுங் காலத்தினும் இறந்தபின்பு புகழ் மிக்கு விளங்குவராதலால், 'அவர் தஞ்செம்மை செத்தாலறிக சிறந்து' என்றார். (கoரு)

வழிப்படரல் வாயல் வருந்தாமை வாய்மை
குழிப்படரல் தீச்சொற்க ளோடு—மொழிப்பட்ட
காய்ந்து விடுதல் களைந்துயக் கற்றவ
ராய்நது விடுத லறம்.

ப-ரை. வழிப்படரல்-பிறர்வழிச்சேறலும், வாயல்-வாய்த்தகாரி யங்களில், வருந்தாமை - முயன்ற மனம் வருந்தாமையும், வாய்மை குழிப்படரல்-மெய்ம்மையல்லா நெறியிற் சேறலும், தீ சொற்களோடு- பிறரைப்பழித்துரைக்குஞ் சொற்களோடு, மொழிப்பட்ட-பெரியோ ரால் சொல்லப்பட்ட வொழுக்கநெறியை, காய்ந்துவிடுதல்கள்-வெறு த்துவிட்டொழியுந் தொழில்களும், (ஆகிய) ஐந்து-ஐந்தும், உய்ய கற் றவர் - தாம் உய்ந்துபோம் வழியைக் கற்றவராகிய அறிஞர், ஆய ந்து - ஆராய்ந்து, விடுதல் - விடுவது, அறம் - அறமாகும், எ - று.

க-ரை. பிறர்வழிச்சேறல் முதலிய ஐந்தனையும் விட்டொழிதலே அறமெனப்படும் என்பதாம.

வி-ரை. வழி - தீநெறி படர்தல் - செல்லுதல். வாயல் - தொழிலாகுபெயர். வாய்மை - மெய்ம்மை. பிறரைப்பழித்துரைத்தலின் மேற்பட்ட தீமையொன்றில்லையாதலால் புறங்கூறலை 'தீசொல்' லென்றே மொழிந்தொழிந்தார். உய்யக் கற்றவர்-உய்யு முபாயங் கற்றவர் ஆய்தல் - இவற்றினு லுளவாகும் அனர்த்தங்களை யாராய்தல். பெரியோர்சொல்லைக் கடத்தலினு மிக்கதீங்குபயப்பதொன்றின்மையான் 'மொழிப்பட்ட காய்ந்துவிடுதல்'என அதன்கொடுமைதோன்ற இறுதியில் வைத்தார். வழிப்படர்தல் முதலியவைந்தும் முறையே ஒன்றினொன்று மிக்கன. உய்தல் - பிழைத்தல், அது பிறவித் துன்பத்தினின்றுந் தப்புதல். படர்தல் - நடத்தல் எனினுமாம். (௧0௪)

மல்லிவர்தோண் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்து
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினாற்—கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலஞ்செய் தான்.

ப-ரை. மல் இவர் தோள் - மற்றொழில் மிகுந்த புயத்தை யுடைய, மாக்காயன் - மாக்காயனது, மாணாக்கன் - மாணவகனாய், மா நிலத்து இந்தப் பெரிய நிலவுலகத்தில், பல்லவர்-பலருடைய, நோய் - பிறவிப் பிணியை, நீக்கும் - ஒழிக்கிற, பாங்கினால் - அழகுடனே, கல்லா - கற்காத, மறு - மறுத்தலால், பஞ்சம் தீர் - சிறுவிலைக்காலத்தை யொழிக்கிற, மழை கை - மேகம்போலுங் கையினையுடைய, மாக்காரியாசான் - மாக்காரியாசான் என்பவன், சிறுபஞ்ச மூலம் - சிறுபஞ்சமூலம் என்னும் இந்நூலை, செய்தான் - இயற்றினான், எ - று.

க-ரை. காரியாசான் என்பவன் இந்தச் சிறுபஞ்சமூலத்தைச் செய்தளித்தான் என்பதாம்.

வி-ரை. இந்நூலாசிரியராகிய காரியாசான் என்பவர் மாக்காயனார் மாணாக்கராதலால் 'மல்லிவர்தோண் மாக்காயன் மாணாக்கன்' என்றார். மாணாக்கன் காரியாசான் எனவியையும். மல்லிவர்தோண் மாக்காயன் எனறமையால் இம்மாக்காயன் என்பவர், கல்வி வல்லார் என்பதேயன்றிப் பகைவரை வெல்லியினும் வல்லார் எனபது விளங்கிற்று கல்லா - மழைபொழியக் கல்லாத. மழைக்கை - மேகம்போலுங் கொடைக்கை. காரியாசான் - காரியாசிரியன. (க0௫)

சிறுபஞ்சமூலம்

மூலமும் உரையும் முற்றிற்று.



# அறிவிப்பு.

இந்நூலில் ௮௬-வதுபாட்டு சில பிரதிகளிலில்லாமலும், அதுமுதல் ௯௧-வது பாட்டுவரை ௫-பாடல்கள் முழுமையு மில்லாமலும், ௯௨-வது பாட்டிற்கு ௩-அடி மாத்திரமு மிருக்கின்றன. இது சங்கமருவிய கீழ்க்கணக்கினொன்றாய்ப் பழைமையாய் வருதலான் குறைந்த பாடல்கள் சிதைந்தகாரணந் தெரியவில்லை. கல்விசெல்வ மிக்குடையார் தமது பிரதிகளில் சிதைந்திருக்கும் பாடல்களைக் காண்பார்களாயின் ௨-வது முறை அச்சிடுவதற்குள் தெரிவிப்பார்களென்று எதிர்பார்க்கின்றோம்.

கடவுள துணை.

# சிறுபஞ்சமூலம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| **அ.** | |
| அரம்போற்கிளை | 58 |
| அழியாமை | 44 |
| அறனட்டா | 27 |
| **ஆ.** | |
| ஆம்பல்வாய் | 51 |
| ஆணுக்கம் | 28 |
| **இ.** | |
| இடரின்று | 14 |
| இல்லியலார் | 34 |
| இன்சொலானுகு | 85 |
| **ஈ.** | |
| ஈவதுநன்று | 89 |
| ஈன்றெடுத்தல் | 68 |
| **உ.** | |
| உடம்பொழிய | 6 |
| உடையிட்டார் | 38 |
| உண்ணாமை | 49 |
| உண்ணிடத்து | 90 |
| உயிர்நோய் | 30 |
| **ஏ.** | |
| ஏலாமைநன் | 57 |
| **ஒ.** | |
| ஒத்தவொழு | 2 |
| ஒருவனறியா | 30 |
| **க.** | |
| கண்ணுங்காற் | 82 |
| கண்வனப்பு | 9 |
| கதநன்று | 17 |
| கலங்காமை | 70 |
| கல்லாதான் | 5 |
| கழிநதலை | 77 |
| கள்ளான் | 21 |
| கள்ளுண்டல் | 24 |
| கற்புடைய | 4 |
| **கா.** | |
| காடுபோற் | 78 |
| **கு.** | |
| குளந்தொட்டு | 62 |
| **கொ.** | |
| கொண்டான் / கொழுந | 51 |
| கொண்டான்வழி | 15 |
| கொல்லாமை | 48 |
| கொன்றான் | 66 |
| கொன்றுண்பா | 10 |
| **கோ.** | |
| கோறலுநஞ் | 13 |
| **ச.** | |
| சத்தமெய்ஞ் | 82 |
| **சி.** | |
| சிக்கர்சிதடர் | 71 |
| சிலம்பிக்கு | 11 |
| சிறைக்கிடங் | 67 |
| **சூ.** | |
| சூலாமைசூலிற் | 70 |
| **த.** | |
| தக்கதிளையான் | 86 |
| தக்கார்வழி | 76 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| தன்னிலையுந் | 54 |
| தா. | |
| தான்பிறந்த | 64 |
| தொ. | |
| தொழிஇயட | 36 |
| தோ. | |
| தோற்கன்று | 79 |
| தே. | |
| தேவரேகற்றவர் | 20 |
| ந. | |
| நகைகொல்லார் | 45 |
| நகையொடு | 80 |
| நட்டாரை | 18 |
| நல்லவெளிப்படு | 53 |
| நன்புலத்து | 56 |
| நா. | |
| நாணிலனாய் | 83 |
| நாணிலான் | 12 |
| நாணெளிது | 84 |
| நாள்கூட்ட | 41 |
| நீ. | |
| நீண்டநீர் | 46 |
| நீரறநன்று | 59 |
| நெ. | |
| நெடுக்கல் | 65 |
| நெய்தன்முகிழ் | 29 |
| ப. | |
| பக்கம்படாமை | 72 |
| பஞ்சப்பொழுது | 74 |
| படைதனக்கு | 7 |
| பண்டாரம் | 38 |
| பத்தினிசேவகன் | 90 |
| பற்றினான் | 8 |
| பி. | |
| பிடிப்பிச்சை | 60 |
| பிழைத்தல் | 16 |
| பு. | |
| புண்பட்டார் | 73 |
| புல்லறத்தி | 88 |
| பூ. | |
| பூத்தாலும் | 22 |
| பூவாதாள் | 39 |
| பூவாதுகாய்க்கு | 22 |
| பெ. | |
| பெருங்குணத்தார் | 25 |
| பே. | |
| பேணடக்கம் | 42 |
| பொ. | |
| பொச்சாப்பு | 47 |
| பொய்யாமைநன் | 37 |
| பொய்யாமைபொ | 19 |
| பொய்யாற் | 87 |
| பொருளுடையா | 3 |
| பொருள்போக | 55 |
| பொன்பெறுங் | 52 |
| போ. | |
| போர்த்துமுரி | 63 |
| ம. | |
| மக்கட்பெறுதன் | 50 |
| மயிர்வனப்பு | 35 |
| மல்லிவர்தோண் | 93 |
| மு. | |
| முழுதுணர் | 1 |
| வ. | |
| வடிவிளமை | 23 |
| வருவாய்க்கு | 40 |
| வரைவில்லா | 75 |
| வலியழிந்தார் | 69 |
| வழிப்படால் | 92 |
| வா. | |
| வார்சான்ற | 43 |
| வான்குருவி | 26 |
| வெ. | |
| வெந்தீக்காண் | 61 |
| வே. | |
| வேட்பவன் | 33 |
| வை. | |
| வைததனை | 33 |
| வைதானொருவ | 81 |
| வைப்பானே | 32 |


சிறுபஞ்சமூலம் செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

நீதிநூற்றிரட்டு விருத்தியுரை: 10-ம் பாகம்.

உ

சங்கச்செய்யுள்.

விளம்பிநாகனார் செய்த

# நான்மணிக்கடிகை

## மூலமும்,

மஹாவித்வான் கா. இராமசாமிநாயுடு அவர்களால்

இயற்றப்பட்ட

## விருத்தியுரையும்.



இவை

பென்ஷன் சுபேதார்-தஞ்சை. சாம்பசிவம்பிள்ளை

அவர்கள் குமாரர்

தஞ்சை - எஸ். குமாரசுவாமிபிள்ளையால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

1910.

 விலை அணா 5. 

கடவுள் துணை.

# நான்மணிக்கடிகை

## மூலமும் உரையும்.



### பாயிரம்.



### கடவுள் வாழ்த்து.

ஐந்தடியான் வந்த பஃறொடை வெண்பா.

மதிமன்னு மாயவன் வாண்முக மொக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும் பூவைப்
புதுமல ரொக்கு நிறம்.

(பதவுரை.) மதி - பூர்ண சந்திரன், மன்னும்-அழியாத, மாய வன்-விசித்திர சக்தியையுடைய இறைவனது, வாள் முகம் ஒக்கும் - விளக்கமாகிய முகத்தைஒத்திருக்கும்; கதிர்சேர்ந்த ஞாயிறு-கிரணங் கள் நிரம்பிய சூரியன், சக்கரம் ஒக்கும் - அவனது சுதரிசனமென் னும் சக்காத்தை ஒத்திருக்கும்; முதுநீர்-நிலையாயுள்ள நீரையுடைய, பழனத்து-வயலில் முளைத்த, தாளின்-தாளிலிருந்து, எதிர் - மேலெ ழுந்த, தாமரை மலர்-தாமரைப்பூவானது, அவன் கண் ஒக்கும்-அவ

னது கண்களை யொத்திருக்கும், பூவை புது மலர்-காயாவினது புதிய மலர், நிறம் ஒக்கும் - அவனது திருமேனியை ஒத்திருக்கும், என்றவாறு.

(விருத்தியுரை.) கவி தாம் திருமாலினது திருவுருவைச் சிந்திப்புழித் தோன்றின திருமுகமண்டல முதலியவற்றின் காட்சியை யாவருங் காண்டற்குரிய பூர்ண சந்திரன் முதலானவற்றைக்கொண்டு நிரூபித்தார். சந்திரன் முதலானவை உபமானமாதல் சாலுமென்பது தோன்ற அவற்றை உபமேயமாகக் கூறினார். இக்காப்பு தியானமாய் ஆகையால் மனவணக்கமாம்.

சக்கரத்தோடு மாயவன் என்பதையும், நிறத்தோடு அவன் என்பதையுங் கூட்டுக. 'மதியன்ன மாயவன் வாள்முக மொக்கும்' என்றமையால் நிறைவு குறைவின்றி யென்றும் பூர்ணமாயிருந்தால் சந்திரன் முகத்திற்கு நிகராமெனவும், 'கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கும்' என்றமையால் இருது வேறுபாட்டால் ஒளி குறைந்தும் வளர்ந்துமிராத சூரியன் சக்கரம் ஒக்குமெனவும், 'முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின், எதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும்' என்றமையால் நீர் நிறைந்த வயல்களில் பறிக்கப்படாமல் நாளத்தோடிருக்கிற தாமரைமலர் திருக்கண்களை யொக்குமெனவும், நேற்று முந்தாநாள் பூத்து வாடிப்போகாமல் அப்போது பூத்த காயாம்பூ நிறத்தை 'பூவைப் புதுமல ரொக்கு நிறம்' எனவும் கொள்க. மன் என்னும் இடையடியாகப் பிறந்த மன்னும் என்னும் பெயரெச்சம் "தாய்முலை தழுவிய குழவிபோலவும்" என்கிறவிடத்திற் கொண்டதுபோல் தகுதிபற்றிப் பெயர்க்குமுன் கொள்ளப்பட்டது. மன்னும்வாள்=நிலைபெற்ற காந்தியுள்ள, மதி என்று கூட்டுவதும் என்றதனால் சிறப்பே. 'ஒக்கும்' என்பது ஒத்திருக்குந் தன்மையதென இயல்பைக் காட்டியதே யல்லது எதிர்காலங் காட்டியதன்று. ஒ - பகுதி, உம் - விகுதி, கு - சாரியை, க் - சந்தி. (க)

படியை மடியகத் திட்டா னடியினுன்
முக்காற் கடந்தான் முழுநிலம்—அக்காலத்
தாப்பனி தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்.

(ப-ரை.) அக்காலத்து - பூர்வகாலத்தில், படியை - பூமியை மடியகத்து-வயிற்றினுள்ளே, இட்டான்-வைத்தவனும்; அடியினுல் - தனது சீர்பாதங்களினுல், முழுநிலம - எல்லாவுலகங்களையும், முக்கால் - மூன்றுமுறை, கடந்தான்-தாவியளந்தவனும், ஆப்பனி-பசுக்களினது நடுக்கத்தை, தாங்கிய - ஏற்றுக்கொள்ள, குன்று எடுத்தான்-கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்தவனும்; சோவின் - அரண்களினுடைய, அருமை - அருமையை, அழித்த - அழித்தவனுகிய, மகன் - புருஷனும் (முன் சொன்ன மாயவனே), எ - று.

(வி-ரை.) பிரளயகாலத்தில் உலகங்களைத் தனக்குள் அடக்கினதனுல் 'படியை மடியகத் திட்டான்' என்றது. இங்கே படி என்றது "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்ற விதியால் எல்லாவுலகங்களையும் உணர்த்தும். "மடியகத்திட்டான்மகவை" என்னும் கனுத்திற முரைத்த காதைக்கண், மடி - வயிறென்பதற்கு இதனையே எடுத்துக் காட்டினுர் அடியார்க்கு நல்லார். 'படையை மடியகத் திட்டான்' என்றும் பாடம். இதற்கு: படையை - (அவ்விறைவன) தனது சுதரிசனமென்னும் ஆயுதத்தை, மடியகத்து - பாரதப் போரில், இட்டான் - (ஒளியின் சிறுமையில்) வைத்தவன் என்பது பொருள்.

மூவுலகங்களையும் தன்வசமாக்கிக்கொண்டு தேவர்களைத் துன்பப்படுத்திக்கொண்டிருந்த பலிச்சக்கிரவர்த்தியிடத்தில் மாணியாய்ச் சென்று தன்னடியால் மூவடி மண்கேட்டு, கொடுத்தே னென்றவுடனே மிகவுயர்ந்து மூவுலகங்களையும் மூவடியாக அளந்து கவர்ந்

கொண்டு அவனைச் சிறைப்படுத்தினதனால் 'அடியினான், முக்காற் கடந்தான் முழுநிலம்' என்றது. முழுநிலம் என்றது உலகங்களை யெல்லாம். அக்காலத்து என்பதை எல்லாவற்றோடும் கூட்டிக் கொள்க.

ஆயர்கள் மழை முதலான க்ஷேமத்தைக் குறித்து வருடந்தோறும் இந்திரனுக்கு ஒரு வேள்வி செய்வதுண்டு. கிருஷ்ணன் ஒருகால் அவர்களுக்கு ஒருவகையாய்த் தத்துவம் போதித்து அவ்வேள்வியைக் கோவர்த்தனகிரிக்குச் செய்விக்க, அதனால் இந்திரன் கோபமூண்டு ஆய்ப்பாடி முற்றும் அழிந்துபோகும்படி பெருமழை பெய்விக்க, அதைத் தாங்கமாட்டாமல் வருந்தின மாடுகளையும் மேய்ப்பர்களையும் காப்பதற்காக அந்த மலையைக் குடைபோல் மேலெடுத்துக் காத்து இந்திரன் செருக்கை அடக்கினான். இதைத்தான் 'ஆப்பனி தாங்கிய குன்றெடுத்தான்' என்றது. 'ஆனிரை தாங்கிய' என்றும் பாடம்; இதற்கு : பசுக்கூட்டத்தைக் காப்பாற்றும்பொருட்டு என்பது பொருள். தாங்கிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; தாங்கு - பகுதி; இய - விகுதி, எதிர்காலங் காட்டும்; நன்னூல் உயிரீற்றுப்புணரியல் சூ - கஎ-ன் விதியால் தாங்கிய குன்று என்னுமிடத்து வலி இயல்பாயிற்று. தாங்கிய என்பதைப் பெயரெச்சமாகக் கொள்ளின் அந்த அடை பொருந்தாமையேயன்றிப் பயனும் தோன்றாது சிறப்பில்லையாம்.

சாளுவராசன் கண்ணனை வெல்லவேண்டி வேண்டியபடி வானத்திற் பறக்கத்தக்க சவும்பமென்னும் ஒரு இருப்புப் பட்டணத்தைச் சிவனிடத்து வரமாகப் பெற்றுக்கொண்டு சண்டைக்கு வந்தபோது, அப்பட்டணத்தைக் கண்ணன் அழித்ததனால் 'சோவின் அருமை அழித்த மகன்' என்றது. காசிராசனாகிய சுதக்ஷிணன் சிவபெருமானை நோக்கி ஒரு யாகஞ் செய்து, சிவாநுக்கிரகத்தால் அதில் தோன்றிய ஒரு மகாபூதத்தைக் கண்ணன்மேலேவ, அதைச் சக்

காத்தால் அவர் துரத்தினபோது, அது அப்பூதத்தைக் கொன்று காசிப்பட்டணத்தையும் சுட்டெரித்தது. இதனாலும்: மலையரண், ஆயுதவரண், நீரரண், நெருப்பரண், காற்றரண், முரன் என்கிற அவன் மந்திரியினுடைய பாசமாகிய அரண், இந்த ஆறு அரண்களுள்ள நரகாசுரனுடைய நகரத்தை அழித்ததனாலும், அக்கினிதேவனே தன் சுவாலைகளினால் அரணாகக் காத்துக்கொண்டிருந்த பாணாசுரன் பட்டணத்தை யழித்ததனாலும், சோவின் அருமை அழித்த என்பது ஒக்குமெனஅறிக. இங்கு'மகன்' என்றது ஆண்மையைக் குறித்தது.

'கோவின்' எனவும் பாடமுண்டு. அதில் எருதுகளுடைய அருமை அழித்தவன் என்பது பொருள்; அல்லது சொர்க்கத்தின் அருமை யழித்தவன் எனவுரைக்கலாம். சயிப்பியராசன் மகளாகிய சத்தியை யென்பவளை அவ்வரசன் * சுற்கமாக வைத்திருந்த யார்க்கு மடங்காத வெழெருதுகளை யடக்கிக் கிருஷ்ணசுவாமி கலியாணஞ் செய்துகொண்டார். நரகாசுரனைக் கொன்றபின் இந்திரனுடைய நந்தவனத்திலிருந்த பாரிஜாத மரத்தைக் கருடன்மேலெடுப்பித்து வந்து தம் மனைவியாகிய சத்தியபாமையின் தோட்டத்தில் நாட்டினார்; இதனால் சொர்க்கத்திற்கிருந்த மகிமை குறைந்ததன்றோ. இவைதாம் 'கோவின் அருமை யழித்த' என்பதின் கருத்து.

எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. முற்பாட்டிலுள்ள 'மாயவன்' என்பதை வருவித்து இப்பாட்டு முடிக்கப்பட்டது. 'மகன்' என்பதை எழுவாயாகக்கொள்ளின் நான்கு விஷயம் ஏற்படாமற் போவதுமன்றி (சுவிஷ்டவிதேயாம்சம்) கருதிய துள்ளடங்கல் என்கிற குற்றமுமாம். 'சோவின் அருமை யழித்தமகன்' என்பது எழுவாயாகும்போது அத்தன்மை சித்தமேயா யிருப்பதனு

* சுற்கம்=பரியம்.

லென உணர்க. தான் முன் தியானித்த கடவுளின் மகிமைகளைக் கூறியதனால் இது வாயாற்செய்த வணக்கமாம்.

இக்காப்புகளில் நந்நான்கு பொருளைக் கூறியதனால் இனி ஒவ்வொரு பாட்டிலும் நந்நான்கு விஷயம் கூறப்படுமெனக் குறிப்பித்தாரென்றறிக. (உ)

## நூல்.

எள்ளற்க வென்று மெளியரென் றென்பெறினுங்
கொள்ளற்க கொள்ளார்கை மேற்பட—உள்சுடினுஞ்
சீறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

(ப-ரை.) என்றும்-நட்பாக வருங்காலத்திலும், எளியர் என்று-(வலி முதலியன) குறைந்தவரென்று நினைத்து, எள்ளற்க - (பகைவரை ஒருவன்) இகழாதிருக்கக்கடவன்; என் பெறினும் - சிறந்த பொருளைப்பெறுவதாயிருந்தாலும், கொள்ளார் கை-கொள்ளத்தகாதவருடைய கைகள், மேற்பட-(தன்கைகளுக்கு) மேற்பட்டன ஆகும்படி, கொள்ளற்க-(அப்பொருளை) இரவாதிருக்கக்கடவன்; உள் சுடினும்-(வறியகுடியிற் பிறந்தார் செய்கை) மனத்தை வருத்துவதாயிருந்தாலும், சிறு இல் பிறந்தாரை-அவ்வறிய குடியிற் பிறந்தவரை, சீறற்க - சீறாதிருக்கக்கடவன்; கூறு அல்லவற்றை - சொல்லத்தகாத சொற்களை, விரைந்து கூறற்க - (சொல்வதில்) விரைந்து சொல்லாதிருக்கக்கடவன், எ-று.

(வி-ரை.) கொள்ளார் - பகைவர் எனினும் ஒக்கும். தான் எவ்வளவு விசேஷமுள்ளவனா யிருந்தாலும் பொருள் முதலிய இல்லாதவர்களை எப்பொழுதும் இகழாமலிருக்கவேண்டும். எப்படிப்பட்ட பொருள் கிடைப்பதாயிருந்தாலும் தகாதவர் கையில் வாங்காதிருக்கவேண்டும். அற்பமனிதர் மனஞ் சுடத்தக்க துன்பஞ் செய்தாலும்

பேதைகளாகிய அவர்களுக்கு இயல்பென்று நினைத்து அவர்மேல் கோபங்கொள்ளாதிருக்கவேண்டும். சொல்லக்கூடாத பேச்சுக்களைக் காலமும் இடமும் அறியாமல் பதறிப்பேசாதிருக்கவேண்டும் என்பது கருத்து.

'என்பெறினும்' என்பதை மத்திமதீபமாக வைத்து இருபுறமுங் கூட்டுக. 'எள்ளற்க' முதலியன எதிர்மறை வியங்கோள் வினைமுற்று; எள்-பகுதி, அல்-பண்படி, இங்கு எதிர்மறை விகுதி; இவ்விரண்டுஞ் சேர்ந்து ஒருபகுதி, க - வியங்கோள் விகுதி. ல் ற் ஆனதும் ளகர மிகுந்ததும் சந்தி. கொள், சீறு, கூறு இப்பகுதிகளின் மேலும் இவ்வாறே அமைத்துக்கொள்க. 'கொள்ளார்கை மேல்வர' என்றும், 'கொள்ளார்கை மேலவா' என்றும் பாடம். கூறப்படுவது கூறு, செயப்படுபொருளைக்காட்டும் ஐ விகுதி புணர்ந்து கெட்டது. என்-குறிப்பு வினையாலணையுஞ் பெயர். (௪)

பறைபட வாழா வசுணமா வுள்ளங்
குறைபட வாழா ருரவோர்—நிறைவனத்து
நெற்பட்டக் கண்ணே வெதிர்சாந் தனக்கொவ்வாச்
சொற்பட வாழாது சால்பு.

(ப-ரை.) அசுணமா - கேகயப்பறவைகள், பறைபட - பறையினொலி (செவியில்) பட்டால், வாழா - உயிர் வாழா; உரவோர் - அறிவுடையோர், உள்ளம் குறைபட - (மானக்கேட்டால்) தமது ஊக்கம் சுருங்கும்படி, வாழார் - உயிர்வாழார்; நிறை வனத்து-(மரங்கள்) அடர்ந்த வனத்தில், வெதிர - மூங்கில்கள், நெற்பட்டக்கண்ணே - நெல்லுண்டானபோதே, சாம் - அழியும்; சால்பு - (பலநற்குணங்களாலும்) நிறைந்தவன், தனக்கு ஒவ்வா - தன்னிறைவுக்குத் தகாத, சொல்பட வாழாது-சொல்லுண்டாக உயிர் வாழான், எ-று.

(வி-ரை.) வீணை முதலிய மெத்தென்ற வாத்தியங்களின் ஓசையேயன்றிக் கொடுமையான தம்பட்ட முதலியவற்றின் ஓசைகேட்

டால் அதைப்பொறுக்கமாட்டாமல் அசுணமென்னும் பறவை சாவது போல், மனம் நல்வழியிற் செலுத்த இடையூறு நேரிட்டால் விவேகிகள் உயிரிழப்பார்கள். மூங்கிலில் மணிபிடித்து முதிர்ந்தவுடனே அம்மூங்கில் வெடித்து அழிவதுபோல், பெருமையுள்ள ஒருவனுக்கு அவமானமான பழிச்சொல் சேர்ந்தால் அவன் பெருமைகெடும். இப்படிச் சொன்னதனால் மனக்குறைப்பட்டவன் பிழைத்திருப்பது வீணென்றும், பெருமையுள்ளவன் பழிச்சொல்வாராமல் தன்னைக்காத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்லியதாயிற்று.

அசுணம்-இசையறிவதோர் விலங்கு (சிந்தாமணியுரை-பதுமை-உகஎ) ஒருவன் முதற்கண்யாழிசையைக் கேட்பித்து, இஃது அவ்விசையின்பத்தே யின்புற்று மூழ்கியவளவில் வலியதோர் பறையை ஒலிக்க, அதன் வல்லோசையைக் கேட்கலாற்றாது இவ்விலங்கினரிய உயிர் விட்டு நீங்கும் என்ப. அசுணமா என்கிற பால்பகா அஃறிணைப்பெயர் வாழா என்னும் குறிப்பினால் பன்மையாக் கொள்ளப்பட்டது. பட என்பது செயினென் வாய்பாட்டின் திரிபாம். "உரவோ ரெனினு மடவோ ரெனினும்" என்றார் பதிற்றுப்பத்தினும் (அ - ௲). உரம்-அறிவு; "உரமொருவற்குள்ள வெறுக்கை" என்னுந் திருக்குறளா னுணர்க. உரவோர் என்பதற்குப் பதில் 'பெரியோர்' என்றும் பாடம்; இதற்கு: மிக்க மானமுடையோர் என்பது பொருள். ஒவ்வா-ஈறுகெட்ட பெயரெச்சம்; ஒ - பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, வகரம்-சந்தி, தகர எழுத்துப்பேறோடு சேர்ந்த அகர விகுதி கெட்டது விகாரம். 'பட்டகண்' இதுவும் ஒருவகை எதிர்கால வினையெச்சம்; படு என்னும் பகுதி பட்ட என விகாரப்பட்டு, கண் விகுதி பெற்றது. சாகும் ஆகும் என்பவை ஈற்றுயிர்மெய் கெட்டு சாம் ஆம் என்றாயின. 'தனக்கொவ்வாச் சொற்பட்டாற் சாவதாம் சால்பு' என்றும்பாடம்; இதற்கு: ஒருவனுக்கு அடுக்காதசொல் சேர்ந்தால் அவனது பெருமை கெட்டுப்போம் என்பது பொருள். ()

மண்ணி யறிப மணிநலம் பண்ணமைத்
தேறிய பின்னறிப மாநல மாசறச்
சுட்டறிப பொன்னி னலங்காண்பார் கெட்டறிப
கேளிரா னாய பயன்.

(ப-ரை.) மணி நலம்(காண்பார்)-இரத்தினத்தினது குணத்தை (அறியுமியல்பினர்), மண்ணி அறிப-சுத்திசெய்து அறிவார்கள்; மா நலம் (காண்பார்)-குதிரையினது குணத்தை(அறியுமியல்பினர்),பண் அமைத்து - சேணத்தை (அதன்மேல்) பொருந்த வைத்து, ஏறிய பின் - ஏறினபின், அறிப - அறிவார்கள்; பொன்னின் நலம் காண் பார்-பொன்னினது குணத்தை அறியுமியல்பினர், மாசுஅற-குற்றம் நீங்கும்படி, சுட்டு அறிப-தீயிற் சுட்டு அறிவார்கள்; கேளிரான்-உற வினால், ஆய பயன் (காண்பார்)-உண்டாகும் பயனை (அறியும் இயல் பினர்), கெட்டு அறிப-(தமது செல்வம்) கெட வறுமை முதலியவற் றால் தாழ்ந்தபோது அறிவார்கள், எ-று.

(வி-ரை.) மணிகளைச் சுத்திசெய்து அவற்றின் குணங்களைக் காண்பது போலவும், குதிரைமேலேறி நடத்தியபின் அதன் யோக்கி யதையைக் காண்பதுபோலவும், பொன்னைக் காய்ச்சியபின் அதன் ஏற்றத்தை யறிவதுபோலவும், தாம் துன்பமடைந்த காலத்தில் உதவி செய்வதனால் இவர்கள்தாம் நமக்குச் சரியான சுற்றத்தார் என்று அறியலாம் என்பதாம். "கேட்டினு முண்டோ ருறுதி கிளை ஞரை, நீட்டி யளப்பதோர் கோல்" என்னுந் திருக்குறளை நோக்குக. மண் - பகுதி, இ - இறந்தகால வினையெச்ச விகுதி. அறி - பகுதி, ப - பலர்பால் விகுதி. ஆய, ஆ - பகுதி, ய்-இடைநிலை, அ - விகுதி, இதனை இடைக்குறையெனக் கொள்வாரு முண்டு. 'கேளிரா லாய பயன்' என்றும் பாடம். கெட்டு அறியவேண்டிய [illegible]தியன்மையால் இவ்வினையெச்சம் கெட்டால் என்பதன் [illegible] அறிக. அறிப நான்கும் உயர்திணைப் பலர்பால் வி[illegible] [illegible]றுக்கள். சேணம்-குதிரை

முதுகின்மேலிடுமெ தவிசு. மா-எல்லா விலங்குகட்கும் பொதுப்பெயராயினும் 'பண்ணமைத்து, ஏறியபின் அறிப மாநலம்' என்ற குறிப்பால் குதிரையை யுணர்த்திற்று; அங்ஙனமாயின், யானை ஒட்டகம் முதலியவற்றைக் கொள்ளலாகாதோவெனின், அவை இதுபோலப் பெரும்பாலும் மக்கட் குபயோகப்படாமையால் அவற்றை யொழித்து குதிரையென்றே பொருளுரைக்கப்பட்டது. (௫)

கள்ளி வயிற்றி னகில்பிறக்கு மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கு மறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி.

(ப-ரை.) அகில்-அகிற்கட்டையானது, கள்ளி வயிற்றின் பிறக்கும்-கள்ளிமரத்தினுள்ளே பிறக்கும்; ஒள் அரிதாரம் - சுத்தமான கோரோசனை யென்கிற மருந்து, மான் வயிறு பிறக்கும்-மானின்வயிற்றிற் பிறக்கும், பல் விலைய முத்தம் - மிக்க விலையுள்ள முத்துக்கள், பெருங்கடலுள் பிறக்கும் - பெருமையாகிய கடலிற் பிறக்கும்; நல் ஆள் - நற்குண நற்செய்கைகளை ஆளுதலுடையான், பிறக்கும் குடி - பிறக்குங்குடியை, அறிவார் யார் - முன் அறியவல்லவர் யாவர் (ஒருவருமிலர்), எ - று.

(வி-ரை.) மரங்களில் இழிந்த கள்ளியிலே சுகந்தமுள்ள அகிலும், மிருகமான பசுவின் வயிற்றில் தேவர்களுக்குந் திலகமிடத் தக்க கோரோசனையும், உவர் நீரும் புலானாற்றமுமுடைய கடலிலே விலையுயர்ந்த முத்தும் பிறப்பதுபோல், ஒரிழிகுலத்திலும் மேன்மையான பிள்ளை பிறக்கும்; ஆதலால், தாழ்ந்திருக்கிறதென்று நினைத்து ஒரு [illegible]யும் அவமதிக்கலாகாது என்பதாம். கள்ளிக் கட்[illegible]ல் அது அகிற்கட்டைக்குச் சமானமான வாசனையுளதாம் என[illegible] பெறப்பட்டது. ஆன்வயிற்று

என்று பிரித்து பசுவின் வயிற்றிலே என்று பொருள் கொள்ளினு மமையும். நல்லாள் பிறக்குங்குடி என்பதற்கு "நல்லா ளிலாத குடி" என்னுந் திருக்குறளுரையையும் (1030) நோக்குக. (௪)

கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மத—மெல்லென்
றருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.

(ப-ரை.) கதிர் மணி-கிரணங்களையுடைய இரத்தினம், கல்லில் பிறக்கும்-மலையில் பிறக்கும்; உயர் மதம்-மிக்க காமமயக்கம், காதலி-விரும்பப்பட்ட நாயகியினது, சொல்லில் பிறக்கும்-இன்சொல்லிலே பிறக்கும்; அறநெறி - அறம் நடக்கும் வழி, மெல் என்ற - மென்மையான, அருளில் பிறக்கும்-கருணையில் பிறக்கும்; எல்லாம் அர(முன் சொல்லியவும் சொல்லப்படாதவுமான) முதலிய எல்லாம், பொருளில் பிறந்துவிடும் - செல்வப்பொருளில் பிறந்துவிடும், எ - று.

(வி-ரை.) சாதாரணமான கல்மலையில் மணிகள் பிறப்பதுபோல் தனக்குப் பிரியமான பெண்ணின் பேச்சில் ஒரு ஆனந்தம் விளையும்; அருளொன்றிருந்தால் கொலை வஞ்சனை முதலிய பாவச்செய்கைகள் சிறிது முளவாகாமையால் எல்லாத் தரும வழிகளும் அருளிலே யுண்டாகும்; முன் சொன்ன பொருளும் போகமும் பின்சொன்ன தரும வழிகளும் யாவும் பொருளினு லுண்டாகு மாதலால் பொருளைத் தேடவேண்டு மென்பதாம்.

'கல்லில்' என்பதில் இல் ஏழனுருபு. அருளில், பொருளில் இவை ஐந்தாம்வேற்றுமை, ஏதுப்பொருளில் வந்தன. மெல்லென்ற அருள் என்பதில் அகரம் தொகுத்தல் விகாரம். 'மெல்லெ, னரு ளிற் பிறக்கும்' என்றும் பாடம். "அறனும் அருளுடையான் கண்ணதே யாகும்" என்பது சிறுபஞ்சமூலம். "பொருளானு மெல்லாம்"

என்பது திருக்குறள்-1002. பிறந்துவிடும் என்பதில் விடு துணிவுப் பொருளது, அசைநிலை; துணைவினை யெனினுமாம். (ரு)

திருவொக்குந் தீதி லொழுக்கம் பெரிய
வறனொக்கு மாற்றி னொழுகல்—பிறனைக்
கொலையொக்குங் கொண்டுகண் மாறல் புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.

(ப-ரை.) தீது இல் ஒழுக்கம் - (தம் வருணத்துக்கு) குற்றம் உண்டாகாத ஒழுக்கம், திரு ஒக்கும் - (அக்குலத்துக்கு) செல்வத்தோடு சமானமாகும்; ஆற்றின் - இல்லறவழியில், ஒழுகல் - (தவறாமல்) நடத்தல், பெரிய அறன் ஒக்கும் - சிறந்த துறவறத்தை ஒக்கும்; பிறனை கொண்டு-(ஆராயாமல்)பிறனொருவனை நட்புக்கொண்டு, கண் மாறல்-பராமுகமாயிருப்பது, கொலை ஒக்கும்-அவனைக்கொல்லுதலை ஒக்கும்; போற்றாதார் முன்னர்-ஆதரித்தழையாதவரிடத்தில், செலவு - (ஒருபயன் பெறவேண்டி) செல்லுதல், புலை ஒக்கும் - (தன்னை யறுத்தெடுத்த) மாமிசத்தை ஒக்கும், எ-று.

(வி-ரை.) ஒருவன் தன் குலாசாரங்களை நடத்தி வருவதே செல்வம்போல் சிறந்திருப்பதன்றிப் பிறர் குலாசாரங்களைக் கைக்கோடல் சிறப்பன்று; உலகத்துக்கு ஒத்த வழியில் நடப்பது தருமமேயன்றி, சாத்திரஞ் சொன்னதாலும் உலகத்துக் கொவ்வாவழி நடப்பது தருமமன்று. முன்பு ஒருவனைச் சிநேகிதனாகக் கொண்டிருந்து பின்பு அவனைப் பராமுகமாய்ப் பார்ப்பதும் பகைப்பதும் அவனைக் கொலைசெய்வதுபோன்ற கெட்ட காரியமாகும். உபசரிக்காதாரிடத்திற்போவது தன் சதையைத் தானே அறுத்தெடுப்பது போல அருவருத்த தொழிலாம் என்றபடி.

தீது—தீமை - பகுதி, து - விகுதி, இதுவும் பண்புப் பெயரேயாம். தீமை செய்யுந் தன்மையையுடையதெனப் பொருட்பெய

ராக்கினும், கடைசியில் இக்கருத்தே யாகவேண்டும். பெரிய அறன் ஒக்கும் - பெரிய தருமத்தை ஒக்கும் எனினுமாம். கண்மாறல் - புறங்கூறல். கண் - தாக்ஷிணியம், அது மாறுதல் - உபேக்ஷை ஆல்லது பகை, எழுவாய்த்தொடர். போற்றுதார் - பகைவர் எனினுமாம். அறம் அறன் ஆனது போலி. புலை - நீசத்துவம் (இழிவு). ஆறு - வழி; பெரிய அறன் ஒக்கும் என மேல் வருதலால் இது நல் வழியைக் குறித்தது. புலை ஒக்கும்-(கீழாயினோரது) இழி தன்மையை ஒக்கும் எனினுமாம். கொலை—கொல் - பகுதி, ஐ - தொழிற்பெயர் விகுதி. செலவு—செல் - பகுதி, உ - விகுதி, அ - சாரியை, வ் - உடம்படுமெய். (௬)

கள்வமென் பார்க்குந் துயிலில்லை காதலிமாட்
டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை யொண்பொருள்
செய்வமென் பார்க்குந் துயிலில்லை யப்பொருள்
காப்பார்க்கு மில்லைத் துயில்.

(ப-ரை.) கள்வம் என்பார்க்கும் - (பிறர்பொருளைக்) களவு செய்வோமென்று சோர்வு பார்ப்பவருக்கும், துயில் இல்லை - நித்திரையில்லை; காதலிமாட்டு - (விரும்பப்பட்ட) நாயகியினிடத்து, உள்ளம் வைப்பார்க்கும் - உள்ளத்தை (இடைவிடாது) வைப்பவருக்கும், துயில் இல்லை - (அவளைக் கூடுமட்டும்) துயிலில்லை; ஒள் பொருள் - ஒள்ளிய பொருளை, செய்வம் என்பார்க்கும் - சம்பாதித்துச் சேர்க்கக் கடவோமென்று கருதுவார்க்கும், துயில் இல்லை - (அப்பொருள் கூடுமளவும்) துயிலில்லை; அப்பொருள் காப்பார்க்கும் - அப்படித் தேடிய பொருளைக் (கள்ளர் கொள்ளாமல்)காப்பவர்க்கும், துயில் இல்லை—, எ - று.

(வி-ரை.) திருட நினைப்பவர்க்கும், ஒருத்தியை இச்சித்து அவள்மேலேயே மனம் வைத்தவர்க்கும், பொருளீட்ட நினைத்து அலைபவர்களுக்கும், பொருளை உபயோகித்தற்குரிய வழியையறி

துபயோகிக்காமல் பூதம்போல் காத்துக்கொண் டிருப்பவருக்கும், நித்திரைமுதலிய சுகங்கள் இல்லையாம், ஆதலால், அப்படியல்லாமல் பொருளையும் காமத்தையும் நல்வழியில் அடைந்து அளவிட்டு அநுபவிக்க வேண்டுமென்பது கருத்து.

கள்வம் - தனமைப்பன்மை யெதிர்கால வினைமுற்று; கள் - பகுதி, அம் - விகுதி, வகரம் இடைநிலை. செய்வம என்பது மிப்படியே. 'ஒண்பொருள் சேர்ப்பா மென்பார்க்கும்' எனறும் பாடம். ஒள்பொருள் என்பது ளகரம் டகரமாகி மெலிந்தது. 'இல்லை துயில்' என்றும் பாடம். (எ)

கற்றார்முற் றோன்றா கழிவிரக்கங் காதலித்தொன்
றுற்றார்முற் றோன்று முறுமுதல்—தெற்றென
அல்ல புரிந்தார்க் கறந்தோன்றா வெல்லாம
வெகுண்டார்முற் றோன்று கெடும்.

(ப-ரை.) கற்றார் முன்-(ஞான நூல்களைக்) கற்றறிந்தவரிடத்து, கழிவு இரக்கம் - கழிந்த பொருளுக்கு இரங்குதல், தோன்றா-உண்டாகமாட்டா; காதலித்த ஒன்று - விரும்பப்பட்ட ஒருபொருளை, உற்றார்முன் - தேடத் தொடங்கினாரிடத்து, உறுமுதல் - (அப்பொருள்) கிடையாத காரணங்கள், தோன்றும்—; தெற்றென - தெளிவாக, அல்ல புரிந்தார்க்கு - தீவினைகளை விரும்பிச் செய்தவரிடத்து, அறம் - அறச்செய்கைகள், தோன்றா—; வெகுண்டார் முன் - கோபித்தவரிடத்து, எல்லாம் - (பிறர் கூறும்) நலமானவெல்லாம், தோன்று கெடும் - தோன்றாதனவாகக் கெடும், எ-று.

(வி-ரை.) கற்றவர்கள், எல்லாம் கடவுள் திருவுள்ளப்படியே நடக்குமென்கிற நிச்சயமுள்ளவர்களாதலால் எதற்கும் விசனப்படமாட்டார்கள்; ஒன்றின்மேல்மிகுவிருப்பம்வைத்தவர்கள் அப்பொருள் தமக்குக் கிடைக்குமென்று நம்புவார்களேயன்றி கிடையாதென்றுநினைக்க

